# மின்தமிழ் மேடை



## *“தமிழ் வளம்”*

*தமிழ் மரபு அறக்கட்டளை (www.tamilheritage.org)*

வெளியிடும் காலாண்டு மின்னிதழ்

*மின்தமிழ்மேடை - காட்சி: 5*

*ஏப்ரல் – 2016*




*5*

# மின்தமிழ் மேடை

## காட்சி: 5

---

## ஏப்ரல் - 2016

## **“தமிழ் வளம்”**



முன்அட்டைப் படம்: தமிழ் மரபு அறக்கட்டளை திருச்சி உருமு தனலெட்சுமி கல்லூரியின் தமிழ்த்துறையோடு புரிந்துணர்வு ஒப்பந்தம் ஒன்றினை கையெழுத்திட்டுள்ளது. இந்தப் புரிந்துணர்வு ஒப்பந்தத்தின் வழி தமிழ் மரபு அறக்கட்டளையுடன் இணைந்த வகையில் கல்லூரியின் தமிழ்த்துறை மாணவர்கள் ஆய்வுகளில் ஈடுபடும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும்.




THF

தமிழ் மரபு அறக்கட்டளை

தமிழ் மரபு அறக்கட்டளை வெளியீடு

http://www.tamilheritage.org/

இதழ் தொகுப்பு: தேமொழி

# தலையங்கம்: தமிழ் வளம்

## – முனைவர். சுபாஷிணி

தமிழ் மொழியின் தொன்மையையும் அதன் பரப்பையும் அதன் ஆளுமையையும், இது தான், என வரையறுத்துக் கூற முடியாத வகையில் நித்தம் பல புதிய செய்திகளை நம் தாய்மொழியாம் தமிழ் மொழி பற்றி அறிந்து வியக்கின்றோம். ஏனைய சில உலகமொழிகள் போல, மொழி என்பது ஒரு தொடர்பு சாதனம் மட்டுமே என்ற எல்லையைக் கடந்தும், வர்த்தக மொழி என்ற குறிப்பிட்ட வட்டத்திற்குள் அமைந்த குறியீடுகளையும் தாண்டி மனிதக்குலத்தின் எல்லா மன அதிர்வுகளையும் பதியும் தன்மை கொண்ட ஒரு மொழியாகத் தமிழ் மொழி இருப்பது மாபெரும் சிறப்பு.

பண்பாடு, வாழ்வியல், வணிகம், புவியியல், அரசியல், கலை, வானியல், அறிவியல், தத்துவம் என்ற மனித வாழ்க்கையின் பன்முகத் தன்மைகள் அனைத்தினையும் வெளிப்படுத்தக்கூடிய பலம்பொருந்திய கருவியாகத் தமிழ் மொழி விளங்குகின்றது. அகம் புறம் என இருவேறாகப் பிரித்து மனித வாழ்வினை அலசும் வளத்தைத் தமிழ் மொழி தன்னிடத்தே கொண்டுள்ளது. தமிழ் பேச்சு மொழியின் தொன்மை என்பதை இன்றளவும் ஆய்வாளர்கள் வரையறுக்க முடியவில்லை. தமிழ் வரிவடிவத்தின் தொன்மையை கணக்கிடும் தொல்லியலாளர்கள் இக்கால தமிழுக்கும் முந்தியதான வட்டெழுத்துகள், அந்த வட்டெழுத்துக்களின் மூல வரிவடிவமான தமிழி எழுத்தின் தொன்மைகளை, கல்வெட்டு ஆதாரங்களின் வழி நிலை நிறுத்தத் தொடர் ஆய்வுகளை மேற்கொண்டு வருகின்றனர். இந்த முயற்சிகளின் பலனாக தமிழ் எழுத்துருக்களின் பரிணாம வளர்ச்சி பற்றிய ஆதாரப்பூர்வமான தகவல்கள் பல நமக்குக் கிடைத்திருப்பதும் தொடர்ந்து கிடைத்து வருவதும் கடந்த ஐம்பது ஆண்டுகளில் தமிழ் மொழியின் தொன்மை, ஆளுமை  தொடர்பான கூறுகளை நிலை நிறுத்த மிக உதவி இருக்கின்றன. இந்த வகை ஆய்வுகள் மேலும் மேலும் விரிவாகத் தமிழக நிலப்பரப்பு மட்டுமன்றி இந்தியா முழுமைக்கும் என்பதோடு நின்றுவிடாமல், கிழக்காசிய நாடுகளிலும் தூரக்கிழக்காசிய நாடுகளிலும் நிகழ்த்தப்பட

வேண்டும். இது மேலும் தமிழ் மொழியின் விரிந்த பயன்பாட்டையும் தமிழர் தம் கடல் வழி ஆளுமையையும் ஆய்வுலகம் அறிந்து கொள்ள அடிப்படையை வகுத்துக் கொடுக்கும்.
சங்கம் வைத்து தமிழ் வளர்த்தோர் பலர். சங்கம் என்ற சொல் பௌத்த சமயத்தின் தாக்கம் என்று கற்றோர் கூறுவர். அறிவுத்தேடலை நிகழ்த்தும் களமாக சங்கம் அமைந்திருந்தது.

தமிழ் வளர்த்த சங்கங்கள் பல. அந்த வரிசையில் கரந்தை தமிழ்ச்சங்கம் தனக்கென ஒரு சிறப்பான இடத்தைப் பிடித்திருக்கும் அமைப்பாகத் திகழ்கின்றது.

1914ம் ஆண்டில் ஐவர் கொண்ட குழு ஒன்று அமைக்கப்பட்டு தமிழ் மொழியின் வரலாறு பற்றிய ஆய்வினை மேற்கொண்டு வெளியிடும் முயற்சி தொடங்கப்பட்டது. 1919ம் ஆண்டில் கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் முயற்சியில் தொடங்கவிருந்த தமிழ் இதழுக்கு "தமிழ்ப்பொழில்" என்ற பெயர் சூட்டப்படத் திட்டமிடப்பட்டிருந்தது. ஆயினும் சில தடங்கல்களால் தடை ஏற்பட்டாலும் 1925ம் ஆண்டில் சித்திரை முதல் நாளில் தமிழ்ப்பொழில் முதல் இதழ் வெளியீடு கண்டது.

1925ம் ஆண்டு தொடங்கி தொடர்ச்சியாக 52 ஆண்டுகள் தமிழ்ப்பொழில் இதழ் வெளியிடப்பட்டது. அந்த சஞ்சிகளை அனைத்தையும் கரந்தைத்தமிழ்ச்சங்கத்தின் விருப்பத்திற்கிணங்க திரு பொள்ளாச்சி நசன் அவர்கள் மின்னூலாகச் செய்து கொடுத்திருந்தார்கள். அந்த மின் இதழ்களை ஒவ்வொன்றாகத் தமிழ் மரபு அறக்கட்டளை வலைப்பக்கத்தில் இணைத்து வெளியிடும் பணியை இவ்வாண்டு மார்ச் மாதம் 23ம் திகதி முதல் தொடங்கி உள்ளோம். இது ஒரு மாபெரும் பணி. தமிழறிஞர்கள் பண்டிதர் உலகநாதப்பிள்ளை, சதாசிவப் பண்டாரத்தார், பண்டிதர் மு.வேங்கடசாமி நாட்டார், நடேசப்பிள்ளை, மு. கோவிந்தராச நாட்டார், R. வேங்கடாசலம் பிள்ளை, மறைமலை அடிகள், ஆ. பூவராகம் பிள்ளை , இராவ்சாகிபு சு. வி. கனகசபைப்பிள்ளை, பண்டிதர் அ. கந்தசாமிப்பிள்ளை, வ. பழ. சா. சாமிநாதன் செட்டியார், B. S. இரத்தினவேலு முதலியார், வே. முத்துசாமி ஐயர், பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார், மு. இராகவையங்கார், மு. வே. மா.

வீ. உலகவூழியன், சாமி. சிதம்பரன், திரு. சோமசுந்தர தேசிகன், ஔவை சு. துரைசாமி பிள்ளை போன்ற 20ம் நூற்றாண்டு ஆளுமைகளின் ஆய்வுப் படைப்புக்களைத் தாங்கி இந்தச்சஞ்சிகைகள் தரத்துடன் மிளிர்கின்றன.

இந்த மாபெரும் ஆய்வுப் பொக்கிஷங்கள் அடங்கிய மின்னிதழ்கள் உலக மக்கள் பார்வைக்கு கொண்டு வருவதில் தமிழ் மரபு அறக்கட்டளை பெருமிதம் கொள்கின்றோம்.

மதுரை நகரில் நான்காம் தமிழ்ச்சங்கத்தை நிறுவிப் பல தமிழ் அறிஞர்களின் ஆய்வுகளை ஊக்குவித்தவர் இராமநாதபுர மாமன்னராக விளங்கிய பாண்டித்துரைத்தேவர். அவரது பிறந்த நாள் மார்ச் 21ம் நாள் என்பது குறிப்பிடப்பட வேண்டியது. அதனை இந்தக் காலாண்டு வெளியீட்டில் நினைவு கூறுதல் தகும் என்றே கருதுகின்றேன்.



இந்த ஆண்டு தமிழ் மரபு அறக்கட்டளை திருச்சி உருமு தனலெட்சுமி கல்லூரியின் தமிழ்த்துறையோடு புரிந்துணர்வு ஒப்பந்தம் ஒன்றினை கையெழுத்திட்டுள்ளோம். இந்தப் புரிந்துணர்வு ஒப்பந்தத்தின் வழி தமிழ் மரபு

அறக்கட்டளையுடன் இணைந்த வகையில் கல்லூரியின் தமிழ்த்துறை மாணவர்கள் ஆய்வுகளில் ஈடுபடும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும். இதனை முக்கியப்பொறுப்பெடுத்துக் கொண்டு ஏற்பாடுகளைச் செய்த முனைவர்.வீரமணி அவர்களை இத்தருணத்தில் பாராட்டுதல் தகும்.

தமிழின் வளத்திற்குச் சிறப்பு கவனத்தை வழங்கும் இதழாக இந்தக் காலாண்டிதழ் திகழ்கின்றது.

தமிழ் மொழி தொடர்பாக செய்யப்பட வேண்டிய காத்திரமான ஆய்வுத்துறைகள் பல இருக்கின்றன. தமிழ் மாணவர்களாகிய நாம் எல்லோருமே தரமான சிறந்த முறையிலான ஆய்வுகளைத் தமிழ் மொழி தொர்பாக தொடர்ந்து நிகழ்த்திக் கொண்டிருத்தல் மிக அவசியம். தமிழக அரசும், கல்விக் கூடங்களும் தமிழ் மொழி வளர்ச்சியில் விரிவான வகையிலான சீரிய பங்கை ஆற்ற வேண்டியது முக்கியக் கடமை என்பதைக் குறிப்பிடுதல் அவசியம் என்று கருதுகின்றேன்.

அன்புடன்
முனைவர்.சுபாஷிணி

---



முனைவர். சுபாஷிணி
ksubashini@gmail.com

# இந்த இதழில் .....

(மின்தமிழ்மேடை வலைத்தளத்தில் ஜனவரி 16 முதல் ஏப்ரல் 15, 2015 வரை பதிவான படைப்புகளின் தொகுப்பு)

தலையங்கம்: தமிழ் வளம்

– முனைவர். சுபாஷிணி ii

1. தமிழ்ப் பொழில்

– முனைவர். சுபாஷிணி 1

2. ஐயம்... அய்யம்

– இராம.கி. 7

3. வாசம் வீசும் ரோஜாவும் தமிழ் எழுத்தாளர்களின் புண்ணிய பூமியும்

– திவாகர் 13

4. வள்ளுவர் காட்டும் உலகு

– இரெ. சந்திரமோகன் 21

5. தித்திக்கும் திருக்குறள்

– நா.கண்ணன் 26

6. குறுந்தொகை - ஆங்கில மொழியாக்கம் (Kurunthogai Translation)

– ப. பாண்டியராஜா 28

7. குறுந்தொகையில் புதுக்கவிதை படைக்கலாம்

– திருத்தம் பொன்.சரவணன் 38

8. குறுந்தொகையில் புதுக்கவிதை - பாட்டுக்குப் பாட்டு

– துரை.ந.உ. 47

9. குறுந்தொகையின் அடிதொட்டு புதுக்கவிதை

– யேசுராஜன் 55

10. ஆதி மொழி தொல்காப்பியம் பாணினீயம் பற்றிய ஒப்பீட்டு ஆய்வு நூல் நூல் மதிப்புரை

– சேசாத்திரி சிரீதரன் 58

11. தமிழகச் சிற்பிகள் வரலாறு - நூல் மதிப்புரை

– முனைவர். சுபாஷிணி 63

12. மாங்குளம் தமிழி கல்வெட்டுக்கள்

– முனைவர். சுபாஷிணி 68

13. கடைவெண் மலைக் கோட்டு நடுகல்

– சேசாத்திரி சிரீதரன் 72

14. சேலம் ஆத்தூர் அருகே 16 ஆம் நூற்றாண்டு கல்வெட்டு கண்டுபிடிப்பு

– பொன்.வெங்கடேசன் 74

15. ஆலத்தூர் - சமணக்கோயில்

– து.சுந்தரம் 77

16. பெரியகுயிலி

– து.சுந்தரம் 95

17. முதல் இந்தி எதிர்ப்பு போராட்டத்தினை தொடங்கி வைத்தது யார்...?

– கவுதம் சன்னா 109

18. மது விலக்கு நாயகர்

– கரந்தை ஜெயக்குமார் 117

19. ராஜா தேசிங்கு

– கோ.செங்குட்டுவன் 123

20. சென்னையின் நீர்வழித்தடங்கள் - அடையாறும் அதன் கரைகளும்

– நரசய்யா 128

21. சென்னையின் நீர்வழித்தடங்கள் - பக்கிங்ஹாம் கால்வாய்

– நரசய்யா 138

22. ஐரோப்பிய ஆசியக் கடல் மார்க்கத்தைச் சுருக்கும் சூயஸ் கால்வாய்

– சி. ஜெயபாரதன் 152

23. கவுதம் சன்னாவுடன் ஓர் நேர்காணல் - தொடர் ...

– செல்வன் 174

# 1. தமிழ்ப் பொழில்

## – முனைவர். சுபாஷிணி

**வாழி கரந்தை வளருந் தமிழ்ச்சங்கம்**
**வாழி <u>தமிழ்ப்பொழில்</u> மாண்புடனே - வாழியரோ**
**மன்னுமதன் காவலராய் வண்மைபுரி வோரெவரும்**
**உன்னுபுக ழின்நலம் உற்று**

- நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார்

கரந்தைத் தமிழ்ச் சங்கம் தொடங்கப் பெற்ற மூன்றாவது ஆண்டிலேயே, திங்களிதழ் ஒன்றினைத் தொடங்க வேண்டும் என்ற எண்ணம் **த.வே. உமாமகேசுவரனார்** உள்ளத்தே உயிர் பெற்றது.



திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, B.A., B.L., அவர்கள்

**கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் நோக்கங்களைத் தமிழ்ப் பேருலகினருக்கு நன்கு தெரிவித்து, அன்னார் உதவிபெற்று அவற்றினை நிறைவேற்றுமாறு காண்டலும், தமிழ் மக்களையும், அவர்தம் தெய்வத் திருமொழியினையும் இழிதகவு செய்து, உண்மை சரித நெறி பிறழ எழுதிவரும் விசயங்களை நியாய நெறியில் கண்டித்தலும், மேல் நாட்டுச் சாத்திரங்களைத் தமிழில் மொழிபெயர்த்து அமைத்துக் கொள்ளுதலுமாகிய**, இன்னோரன்ன நோக்கங்களோடு, சங்கத்தினின்று ஓர் சிறந்த தமிழ்ப் பத்திரிக்கை வெளியிடுவதற்கான ஏற்பாடுகளைச் செய்ய ஐவர் கொண்ட குழு ஒன்று 1914 ஆம் ஆண்டில் அமைக்கப்பட்டது.

திருவாளர்கள் **நா. சீதாராம பிள்ளை, ஐ. குமாரசாமி பிள்ளை, த.வீ. சோமநாதராவ், த.வே.,** மற்றும் **இராதாகிருட்டிணப் பிள்ளை** ஆகியோர் இக்குழுவின் உறுப்பினர்களாவர். இக்குழுவினர் பத்திரிக்கைத் தொடங்குவதற்காக அரசாங்கத்தின் அனுமதி பெறுவதற்குரிய பணிகளைத் துவக்கினர். இதே வேளையில் பத்திரிக்கை ஆரம்பிப்பதென்றால் அதற்கு வேண்டும் மூலதனத்தைத் திரட்டும் பணியும் தொடங்கப் பெற்றது. தமிழ் அன்பர்கள் மற்றும் பொது மக்களிடமிருந்து நன்கொடைகள் பெறுவதற்காக வேண்டுகோள் விடுக்கப் பெற்றது.

பத்திரிக்கை ஒன்றினைத் தொடங்குவதற்காக 1914 ஆம் ஆண்டில் உமாமகேசுவரனர் அவர்களால் தொடங்கப் பெற்ற முயற்சிகள், பல்வேறு காரணங்களாலும் நிதிப் பற்றாக் குறையாலும், நிறைவேறாமலே இருந்தது. இருப்பினும் 1919 ஆம் ஆண்டில், கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் தொடங்கப்பெற இருக்கின்ற மாதாந்திர இதழுக்கு **தமிழ்ப் பொழில்** என்னும் பெயர் சூட்டப்பெற்றது. 1929-21 லும் போதிய அளவு புரப்போர் சேராமையினால் தமிழ்ப் பொழில் தொடங்குவதில் காலதாமதம் ஏற்பட்டது.

இவ்வாண்டில் **திருவாளர்கள் உமாமகேசுவரம் பிள்ளை, கும்பகோணம் த.பொ.கை. அழகிரி சாமி பிள்ளை, கூடலூர் வே. இராமசாமி வன்னியர், பட்டுக்கோட்டை வேணுகோபால நாயுடு, திருச்சிராப்பள்ளி உ.க. பஞ்ச ரத்தினம் பிள்ளை, திருச்சி நா. துரைசாமி பிள்ளை, கும்பகோணம் ஆர். சாமிநாத அய்யர்** ஆகியோர் தமிழ்ப் பொழில் இதழுக்குப் பங்குத் தொகை வழங்கினர்.

கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் பத்தாம் ஆண்டு விழாவானது, 4.9.1921 மற்றும் 5.9.1921 ஆகிய தேதிகளில், கரந்தை கந்தப்ப செட்டியார் அறநிலையத்தில், **கீழையூர் சிவ. சிதம்பரம்** அவர்கள் தலைமையில் நடைபெற்றது. இவ்விழாவின் போது, **தமிழ் மொழியின் மேன்மையைப் பேணுதற் பொருட்டாகத் தமிழ்ப் பொழில் என்னும் திங்கட்டாளை வெளியிடுவதற்கு தக்கவாறு பொருளுதவி செய்ய வேண்டுமெனத் தமிழ் மக்கள் அனைவரையும் கேட்டுக் கொள்கிறார்கள் எனும்** தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. இவ்வாண்டில் திருவாளர்கள் **வேணுகோபால நாயுடு மற்றும்**

**திருச்சி டி. நாராயண சாமி பிள்ளை** ஆகியோர் தமிழ்ப் பொழில் பங்குத் தொகையாக ரூ.23 வழங்கினர்.

1913 ஆம் ஆண்டில் உமாமகேசுவரனார் அவர்களால் தொடங்கப் பெற்ற முயற்சியானது, பதினோரு ஆண்டுகளுக்குப் பின்னரே நிறைவேறியது. **1925 ஆம் ஆண்டு சித்திரைத் திங்களில், தமிழ்ப் பொழில் இதழின் முதல் இதழ் வெளியிடப் பெற்றது**. தமிழ்ப் பொழில் இதழின் முதல் இதழினை அச்சிட்ட பெருமை, **தஞ்சாவூர் லாலி அச்சகத்தையேச் சாரும்**. இதன் முதல் பொழிற்றொண்டராகப் பணிபுரிந்தவர் **கவிஞர் அரங்க. வேங்கடாசலம் பிள்ளையாவார்.**




1925 ஆம் ஆண்டு வெளிவந்த தமிழ்ப் பொழில் இரண்டாவது இதழின் அட்டை (முதல் இதழின் அட்டை கிடைக்கப் பெற வில்லை)

பொதுவாக ஒரு இதழ் எனின் ஆசிரியர் அல்லது பொறுப்பாசிரியர் என்று அச்சிடுதல் மரபு. ஆனால் உமாமகேசுவரனாரோ, இதழாசிரியர் என்பதற்குப் பதிலாக **பொழிற்றொண்டர்** என்றே அச்சிடச் செய்தார். உறுப்பினர் கட்டணம் என்பதற்கு மாறாக **கையொப்பத் தொகை** என்றும், விலாசம் என்பதை உறையுள் என்றும்,

ஆங்கிலத்தில் வி.பி.பி. என்பதை **விலைகொளும் அஞ்சல்** என்றும் பயன்படுத்தத் தொடங்கினார்.

பல்வேறு இன்னல்களைத் தாண்டி தமிழ்ப் பொழில் இதழானது வெளிவரத் தொடங்கிய பின்னரும் கூட, ஒவ்வொரு மாதமும், இவ்விதழ் சந்தித்த சோதனைகள், தாண்டிய தடைகள் ஏராளம். தமிழ்ப் பொழில் இதழினைப் போற்றுவார் போதிய அளவு இல்லாததால் வருந்திய உமாமகேசுவரனார் அவர்கள், தமிழ்ச் செல்வர்கள், தாய் மொழித் தொண்டிற்காக, ஆண்டிற்கு இரண்டு மூன்று ரூபாய் செலவிடுவதற்குத் தயங்கும் நிலை கண்டு வருந்தினார். தமிழ்ப் பொழில் உறுப்பினராக அனைவரும் சேர்ந்து பயன்பெறுமாறு வேண்டுகோள் விடுத்தார்.

**கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை**
**தமிழ்ப் பொழில்**

**கருந்திட்டைக்குடி,**
**விசு, சித்திரை,க**

ஐயா,

இத்துடன் பொழிற் கையொப்ப விண்ணப்பம் ஒன்று இணைத்துள்ளோம். தங்கள் நண்பருள் ஒருவரையேனும் கையொப்பக்காரராகச் சேரும்படி வேண்டி, இணைத்துள்ள விண்ணப்பத்தில் அவர்கள் ஒப்பம் வாங்கி அனுப்ப வேண்டுகிறோம். **ஒருவரைத் தாங்கள் சேர்த்தனுப்புவது, பொழிலின் பயனை ஆயிரவர்க்கு அளித்ததாகும் என்பதை நினைவூட்டுகிறோம்**. சிறுதொண்டு பெரும்பயன் விளைவிக்கும் வகைகளுள் இது ஒன்றெனக் கருத்திற் கொள்ள வேண்டுகிறோம்.

**தங்கள் அன்பன்,**
**த.வே. உமாமகேசுவரன்**
**பொழிற்றொண்டர்**

உமாமகேசுவரனார் மேற்கொண்ட அயரா முயற்சிகளின் பயனாக, தஞ்சை மாநாட்டாண்மைக் கழகத்தினரும், தஞ்சை நாட்டாண்மைக் கழகத்தினரும், பாவநாசம் நாட்டாண்மைக் கழகத்தினரும், தத்தம் ஆட்சி எல்லையிலுள்ள பள்ளிக்

கூடங்களுக்கெல்லாம் தமிழ்ப் பொழில் இதழினை அனுப்பிட ஆணை வழங்கி உதவினர்.

தஞ்சை மாநாட்டின் கல்வி நெறி ஆராய்ச்சியாளர் தலைவராக இருந்த, திரு **பி.பி.எஸ்.சாஸ்திரியார்** அவர்களும், இத் தமிழ்ப் பொழில் கல்லூரி பள்ளிக் கூடங்களுக்கு இன்றியமையாது வேண்டப்படும் சிறப்பினை உடைய உண்மையை அறிவித்து, அனைத்துக் கல்லூரி மற்றும் பள்ளிக் கூடங்களும் வாங்குமாறு செய்தார்.



**மறைமலை அடிகள்**

தமிழ்ப் பொழில் இதழினைக் கண்ட **மறைமலையடிகள்** மனம் மகிழ்ந்து கூறியவற்றைப் பாருங்கள். தாங்கள் விடுத்த தமிழ்ப் பொழில் முதலிரண்டு மலர்களும் பெற்று மகிழ்ந்தேன். **தாங்களும் ஏனை கற்றறிஞரும் எழுதியிருக்கும் தமிழ்க் கட்டுரைகளை உற்று நோக்கி வியந்தேன். தமிழ்ப் பொழில் நீடு நின்று நிலவுமாறு முயல்க. ஏனெனில், இஞ்ஞான்று பற்பல இதழ்கள் தோன்றித் தோன்றி மறைகின்றன. மேலும் வடசொற்கள் சிறிதும் கலவாத தனித் தமிழிலேயே, தாங்களும் மற்றைக் கல்வியறிஞரும் கட்டுரைகள் எழுதுவதை விடாப்பிடியாய்க் கைக்கொள்ளல் வேண்டும். வடசொற் கலப்பால் தமிழைப் பாழாக்க மடிகட்டி**

**நிற்கின்றனர். ஆதலால் நம்மனோர் தமிழில் வடசொற்களைக் கலத்தற்கு சிறிதும் இடம் விட்டுக் கொடுத்தல் ஆகாது. தமிழ் மொழியை விட்டால் தமிழர்க்கு வேறு சிறப்பில்லை. தங்கள் முயற்சி நன்கு நடைபெறுக வென்று திருவருளை வேண்டுகிறேன்.**

---



முனைவர். சுபாஷிணி
ksubashini@gmail.com

# 2. ஐயம்... அய்யம்

– இராம.கி.

ஐ எழுத்தின் வடிவம் பற்றிய பேச்சு மின்தமிழ் மடற்குழுவிலெழுந்தது. "அகர இகரம் ஐகாரமாகுமெனத் தொல்காப்பியரே சொன்னதால் சங்ககாலத்தில் ஐக்கொரு தனிவடிவம் இருந்திருக்குமெ"ன்றும், நமக்கு அது கிடைக்கவில்லை" என்றும், அதற்குமாறாய், "ஐகார வடிவம் ஏற்படுவதற்குமுன், பழந்தமிழியில் அஇ/அய் என எழுதியதாயும்" கருத்துக்கள் சொல்லப்பட்டன. இச்சிக்கலுக்கு முடிவு காண, ஐகார எழுத்தை மட்டும் தனித்துப்பாராது தமிழின் உயிர், மெய் எழுத்துவடிவங்கள் எல்லாவற்றையும் சேர்த்துப்பார்ப்பது நல்லதென்பேன். (உயிர்மெய்க் கீற்றுக்களையுங்கூடச் சேர்த்துப்பார்ப்பது இன்னும் நல்லதெனினும் நேரமில்லாததால் அவற்றை இக்கட்டுரையிற் தவிர்க்கிறேன்.)

அதேபோது தொடர்புள்ள இன்னொரு புலம்பலை இங்கு சொல்லவேண்டும். உயிர்மெய்க் கீற்றுக்கள் எல்லாமே எழுத்துவடிவத் தொடக்கத்தில் மேலும், கீழும், பக்கவாட்டின் இருபுறமும் இழுக்கப்பட்ட கிடைக்கோடுகளின் மாற்று வடிவங்களேயாகும். "எவ்விடத்தில் இடுகிறோம்?" என்பது தவிர இவற்றிற்கு எழுத்திலக்கணக் குறிப்புகள் கிடையா. ஆகச்சிறுத்த, பொருட்படுத்த முடியாத, (கால், கொக்கி, சுழி, ஒற்றைக்கொம்பு, இரட்டைக்கொம்பு, கொண்டை, சுழிக்கொண்டை, சிறகு என்ற) உயிர்மெய்க்கீற்றுகளை எந்தத் தமிழிலக்கணமும் இதுவரை விதந்து குறிப்பிட்டதில்லை. இவற்றின் இலக்கணமெது? எவற்றைக் குறிக்கின்றன? - என்று கூட யாரும் எங்கும் பதியவில்லை. ஆனாலும் எழுதுந்தேவை கருதி அக்காலத் திண்ணைப்பள்ளிகளில் "உயிர்மெய்க் குறியீடுகள்" என்றே பெயரிட்டுச் சொல்லிக் கொடுத்தார். 65 ஆண்டுகளுக்குமுன் இளமையில் அப்படிக் கற்ற பட்டறிவு எனக்குண்டு.

இக்கால ஒருங்குறி ஆவணங்களில் இவற்றை உயிர்க்குறியீடுகள் - vowel markers - என்று பிழையாய்க் குறிப்பர். "கால்" என்பதே ஆகார உயிர்க்குறியீடெனில் ஆகார உயிரின் கீழ்மாட்டில் வருஞ் சுழி பின் என்ன குறியீடாம்? அதை ஒருங்குறிச் சேர்த்தியங் கண்டுகொள்ளவில்லையே? மகனை அப்பன் பெயரிலேயே அழைப்பேமென்று அடம்பிடித்தாலெப்படி? தமிழிலக்கணத்தின் வழிகாட்டல்களை மறுத்து "தமிழெழுத்து வரிசையை அபுகிடா" என்று தப்புந்தவறுமாய் வரையறுத்த ஒருங்குறி ஆவணத்தைப் பின்பற்றி இற்றைத் தமிழாய்வாளர் பிழைச்சொற்களைக் கையாள்வது கொஞ்சங்கொஞ்சமாய் நம்மரபைப் போக்கடிக்கும். (ஒருங்குறிக்கு வால்பிடிப்போர் தூண்டுதலால் பலவிடங்களில் vowelized consonant markers என்பதற்கு

மாறாய் vowel markers எனக் கேட்கையில் என்போன்றோர்க்கு வருத்தமே எஞ்சுகிறது. வணிக வல்லாளுமை கொண்ட ஒருங்குறியின் போதாமையைப் பேசத் தொடங்கினால் மாளாது வேறுவழியின்றி இதைப் பொறுத்துக்கொண்டு எல்லோரும் ஆளவேண்டியுள்ளது.]

இனி இக்கட்டுரையின் பேசுபொருளுக்கு வருவோம். படவெழுத்துக்களில் தொடங்கி, குத்துக்கோடுகள், கிடைக்கோடுகள், வளைவுகளாலான எழுத்துக்களை உருவாக்கி மாறியபோது கல், மரம், ஓடு, மாழை போன்றவற்றிற் கீறியே தமிழரெழுதினர். (சொற்பிறப்பியலின் படியும் இழுத்தது எழுத்தாயிற்று என்பார் பாவாணர். நம் "எழுத்தும்" மேலையிரோப்பிய "letter" உம் பொருளிணை காட்டுவதைச் சொன்னால் இராம.கி.க்கு எப்பொழுதுமே பொல்லாப்பு.) மரத்திலெழுதியது பின் பட்டையில், ஓலையில் எழுதுவதற்கும் விரிந்தது. கல், மரம், ஓடு, மாழை போன்ற எழுதுபொருட்களில் எழுதுவதற்கும் நெகிழும் ஓலையில் எழுதுவதற்கும் நுணுகிய வேறுபாடுள்ளது. ஓலையின் நீட்டுவாக்கில் நார்களுள்ளதால், எழுத்தின் கிடைக்கோடுகள் ஓலையைக் கிழித்துவிட வாய்ப்புக்களுண்டு. இதைத் தவிர்க்கும் முகத்தான், ஓலைப்பயன்பாடு கூடக்கூட, எழுத்துக்களின் கிடைக்கோட்டு நீளங் குறைந்து, குத்துக்கோடுகள் வளைந்து எல்லா எழுத்துக்களும் வளைவுகளும் வட்டங்களும் கொள்ளத்தொடங்கின.

ஒரு நுட்பியலென்பது எழுத்துக்களை மாற்றவுஞ்செய்யும்; நிலைபெறவுஞ்செய்யும். கல்/மரம்/ஓடு/மாழை போன்றவற்றில் வெட்டியது சிற்சில மாற்றங்களுடன் எழுத்துக்களை ஓரளவு நிலைக்கவே வைத்தது. அதேபொழுது ஓலையிற்/தாளிற் கீறியது காலவோட்டத்தில் எழுத்துக்களை மாற்றியது. ஏனெனில் சுவடிகளைப் படியெடுக்கையில் ஒருவர் கையெழுத்துப்போல் இன்னொருவர் கையெழுத்து இருக்காது அல்லவா? ஓர் ஓலைச்சுவடிக்கு ஆயுட்காலம் என்பது ஏறத்தாழ 150 ஆண்டுகளே என்னும்போது இன்றுள்ள சங்க இலக்கியங்கள் 13/14 ஆம் எடுவிப்புக்கள் என்பதை நினைவிற் கொள்ளவேண்டும். இற்றையெழுத்தில் நாம்படிக்கும் சங்க இலக்கியங்கள் தாம்தோன்றிய காலத்தில் முந்தை எழுத்துவடிவிலே இருந்தன. நம்மில் யாரும் 2300 ஆண்டுகளுக்கு முன்னுள்ள சுவடியைப் பார்த்ததேயில்லை.

இற்றை இகரங்கூடத் தாளால் மாறிய தோற்றமே காட்டுகிறது. 19 ஆம் நூற்றாண்டு இகரம் இதனினுஞ் சற்று மாறுபட்டது. இதைப் பேசினால் வேறுபக்கங் கொண்டுசெல்லும். என்னைக்கேட்டால் 13/14 ஆம் ஆண்டிலிருந்த இகர வடிவிற்கு நாம் மாறினால் இற்றைத் தமிழ் அச்சு/கணியெழுத்துகளில் இருக்கும் வடிப்புச்சிக்கலைத் தீர்க்கலாம். வடிப்புக் கிறுவியலைப் பற்றியெலாம் பேசுமளவிற்குத் தமிழ்க் கணிமை வந்துவிட்டதா, என்ன?. தமிழெழுத்துக்களைக் கணித்திரையில்

காண்பதிலும், பேச்சிலிருந்து எழுத்து, எழுத்திலிருந்து பேச்சு, எந்திர மொழிபெயர்ப்பு என்று சொலவம் முழக்குவதிலே நாம் எல்லோரும் குளிர்ந்துபோய் விடுகிறோம். அப்புறமெங்கே இதிலெல்லாங் கவனஞ் செலுத்துவோம்?)

ஒன்றுமட்டுஞ் சொல்லலாம். 350 ஆண்டுகளுக்கு முன்வந்த அச்சுநுட்பியலும், 40/50 ஆண்டுகளுக்கு முன்வந்த கணிநுட்பியலும், இவற்றின் இடையாட்டமும் தமிழெழுத்துக்களை முழுதாக நிலைபெறச் செய்துவிட்டன. இப் புதுநுட்பியல்கள் வந்ததாலேயே தமிழெழுத்துச் சீர்திருத்தங்களை இன்று பேசுவதிற் பொருளில்லாது போயிற்று. அன்றைக்குப் பெரியார் செய்தது சரி. இன்றைக்கு அவர்பெயரைச் சொல்லிச் சிறார்கல்வியைக் காரணங்காட்டிச் சீர்திருத்தம்பேசுவது வெறும் பம்மாத்து; கொஞ்சமும் உள்ளீடில்லாத பேச்சு.

எழுத்துத்திரிவை மேலும் பார்ப்போம். வட்டார எழுதுபொருட் பயன்பாடு அந்தந்த நாடுகளுக்கேற்ப மாறியது. பனையோலை பெரும்பாலும் வறண்ட பாண்டியிலும், தென்சேரலத்திலுமே கிடைத்தது. அதற்காக வடசேரல, சோழ நாடுகளில் பனையோலை கிடைக்கவேயில்லையென்று சொல்லமுடியாது. விழுக்காட்டு மேனி தென்பகுதிகளிலே அதிகங்கிடைத்தது, அவ்வளவுதான். எப்பகுதிகளில் அதிக ஓலை கிடைக்கவில்லையோ, அங்கு இலக்கிய ஆவணங்கள் குறைந்தே பேணப்பட்டன. தமிழ்ச்சுவடிகள் தென்பாண்டியில் பெரிதுங்கிடைத்தது அப்படித்தான். ஓலை மிகாவிடங்களில் கல்வெட்டுகளும், செப்பேடுகளுமே மிகுந்தன. முன்சொன்னது போல் தமிழியெழுத்து பெரிதும் உருவம் மாறாது ஓலையிலா எழுதுபொருட்களில் இருந்துவந்தது. அதேபொழுது ஓலை பெரிதும் பயன்பட்ட பாண்டியிலும், தென்சேரலத்திலும் தமிழியெழுத்து கொஞ்சங்கொஞ்சமாய் வளைந்து நெளிந்து வட்டெழுத்தாய் மாறியது இயல்பான ஒன்றுதான். எல்லாம் கை பண்ணிய வேலை.

கடுங்கோன் வழியினரைத் தோற்கடித்து விசயாலய வழியினர் பாண்டியரை இல்லாமற்செய்த நிலையில் (குறிப்பாக இராசராசன் காலத்தில்) தம் ஆட்சி நன்குசெயற்பட எழுத்தை மாற்றவேண்டிய தேவை சோழருக்கு ஏற்பட்டது. ஏனெனில், வட்டெழுத்தின் அளவுமீறிய வளைவால் எழுத்துக்களின் தனியடையாளங் குலைந்து பொருள்புரியாதுபோகும் நிலை ஏற்கனவே பாண்டிநாட்டில் இருந்தது. அரசாணை மூலம் வட்டெழுத்தைத் திருத்தாமல், சோழ எழுத்தையே பாண்டிய, தென் சேரல நாடுகளில் புழங்கவைக்க சோழர் ஆணையிட்டார். அதனால் வட்டெழுத்து முடிவுற்றது. தென்சேரலத்தில் மட்டும் மேல்தட்டுவருக்க அரண்மனைப் புழக்கங்களில் வட்டெழுத்து நீடித்தது.

1600களில் வட்டெழுத்துக் குழப்பத்தைப் போக்கும் வகையிலும், அளவிற்கு மீறிய சங்கதப் புழக்கத்தை நேரிமப்படுத்தும் வகையிலும் வடசேரலத்தில் புழங்கிய கிரந்தத்திலிருந்து மலையாள எழுத்துக் கிளைத்து, அதுவே தென்சேரலத்திற்கும் பரவியது. மலையாள மொழி தனியெழுத்துப் புழக்கத்தாலேயே மலையாள மொழி நிலைபெற்றது. இல்லாவிட்டால் அது தமிழின் வட்டாரக் கிளைமொழியாய் நிலைத்திருக்கும். (இப்பொழுதுங்கூடத் தமிங்கிலத்தை ஒரு தனிமொழியாய் நிலைக்கவைக்கும் வாய்ப்பாகத் தமிழ் ஒருங்குறிக்குள் வேற்றொலி எழுத்துக்களைக் கொணரச் சிலர் விடாது முயல்கிறார். தமிழர் சற்றே கண்ணயர்ந்தாலும் மலையாளம் வேற்றம் 2.0 மீண்டும் ஏற்படலாம். "ஐயையோ, சங்கதத்தைத்தான் நாங்கள் காப்பாற்றுகிறோம், தமிழுக்கும் இதற்கும் தொடர்பேயில்லை" என்று சிலர் சொல்வது வெறுங் கண்கட்டுவித்தை. "உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவுகலவாமை வேண்டும்" என்றார் வள்ளலார். நான் கிரந்தத்திற்கு எதிரியில்லை. ஆனால் தமிழுக்குள் கிரந்தம் தேவையற்று நுழையவேண்டாம் என்பவன்.)

அதேபொழுது பல்லவ, சோழ எழுத்து 5/6 ஆம் நூற்றாண்டுகளுக்கு அப்புறம் ஓரளவு மாறாமலும் இல்லை. (கொடுமணம், பொருந்தல், அநுராதபுரம், கீழடி போன்ற ஊர்களிற் கிடைத்த தொல்லியற் செய்திகள் உறுதிப்படுகையில், "பழந்தமிழியே இந்தியாவில் முதலெழுந்த அகரவரிசை; அதிலிருந்தே வட பெருமி எழுந்திருக்கலாம்" என்ற கருத்து அண்மையில் வலுப்பெறுகிறது. இதனாற் பேரனைத் தாத்தனெனும் போக்கு மறையும். இதேபோலப் பழந்தமிழியிலிருந்தே கிரந்தம் எழுந்ததெனும் புரிதலும் வலுப்படும். இதை இன்னும் விளக்கப்புகுந்தால், வேறுபுலத்திற்கு இழுத்துச் செல்லும். எனவே, தமிழி>பெருமி, தமிழி>கிரந்தம் என்ற வளர்ச்சிப்போக்குகளைப் விவரிப்பதைத் தவிர்க்கிறேன்.)

கடந்த நூறாண்டுகாலக் கல்வெட்டாய்வின் மொத்தப்பலனாய், இன்று இணையமெங்கும் சுற்றிக்கொண்டிருக்கும், History of Tamil Script என்ற படம் தமிழி>பல்லவ>சோழ எழுத்தில் ஏற்பட்ட வெவ்வேறு உயிர், மெய்த் திரிவுகளை நமக்கு இனங்காட்டும். வெவ்வேறு எழுத்துக்கள் எக்காலகட்டத்தில் இற்றைவடிவத்திற்கு வந்துசேர்ந்தன என்பதைச் சற்று ஆழவாய்ந்தால் மேலுஞ்சில உண்மைகள் புலப்படும்.

காட்டாக உயிரெழுத்துக்களில் அ என்பது 8 ஆம் நூற்றாண்டிலேயே இற்றை வடிவத்திற்கு வந்துசேர்ந்துவிட்டது. ஆ என்பது 13 ஆம் நூற்றாண்டில் இற்றைவடிவம் பெற்றிருக்கிறது. இ என்பது 12/13 ஆம் நூற்றாண்டில் நிலைத்த உருவம் பெற்று அச்சுத்தொழில் காரணமாய் 19 ஆம் நூற்றாண்டில் சட்டென்று இற்றையுருவம் பெற்றிருக்கிறது. அதாவது நிலைத்த உருவம் சட்டென்று மாறிப்போனது.. ஈ என்பது 12 ஆம் நூற்றாண்டில் இற்றையுருவங் கொண்டது.  உ -வும் ஊ-வும், எ-யும் 5/6 ஆம்

நூற்றாண்டுகளில், இற்றையுருவம் பெற்றுவிட்டன. ஐ- யும் ஒ -வும் 9 ஆம் நூற்றாண்டில் இற்றையுருவம் பெற்றன. ஏ, ஓ, என்பது வீரமாமுனிவருக்கப்புறம் வடிவம் பெற்றது. ஔ என்ற எழுத்து 18/19 ஆம் நூற்றாண்டுகளில் அச்சுவடிவம் வந்தபிறகே உருவம் பெற்றிருக்கின்றது.

மெய்யெழுத்துக்களை எடுத்துக்கொண்டால், ப் என்ற எழுத்து 3 ஆம் நூற்றாண்டிலும் (பழந்தமிழியின் வளைவு ப் - ற்கும் இற்றைச் சதுர ப் - ற்கும் பெரிதாய் வேறுபாடு கிடையாது), ல்.ள்.ன் என்பன 6 ஆம் நூற்றாண்டிலும், ட்,ண்,ம்,வ் ஆகிய எழுத்துக்கள் 8/9 ஆம் நூற்றாண்டுகளிலும், க்,ங்,ச்,ஞ்,த்,ந்,ய்,ர்,ற் என்பன 8/9 ஆம் நூற்றாண்டுகளில் ஓரளவு மாற்றம்பெற்று முற்றுமுழுதாக 13/14 ஆம் நூற்றாண்டுகளிலும் நிலைபெற்றிருக்கின்றன. சிறப்பு ழகரம் மட்டும் 17 நூற்றாண்டுதான் இற்றைவடிவம் பெற்றிருக்கிறது. இதுவும் ஒருவேளை அச்சுத்தொழிலால் இந்த மாற்றம் பெற்றதோ, என்னவோ?,

8/9 ஆம் நூற்றாண்டுகளில் தான் விசயாலயச் சோழர் ஆட்சி சோழநாட்டில் ஊன்றிப்பல்வேறு கல்வெட்டுக்களை எழுப்பி. செந்தரத்தைக் கட்டிக்காக்கத் தொடங்கியது. இந்தக் கொடிவழியினரின் ஆட்சி 13 ஆம் நூற்றாண்டில் இறுதி பெற்று இவருக்குப் பின்வந்த பிற்காலப்பாண்டியர் மீண்டும் வட்டெழுத்துக்கு மாறாமல் சோழர் எழுத்திலேயே கல்வெட்டுக்களை ஏற்படுத்தினர். கிட்டத்தட்ட 15 ஆம் நூற்றாண்டே பிற்காலப் பாண்டியர் ஆட்சி முடிவிற்கு வந்தது. அவருக்கு அப்புறம் வந்த அரசர்கள் செந்தரப்படுத்தப்பட்ட எழுத்தையே பயன்படுத்தியிருக்கிறார். 16 ஆம் நூற்றாண்டு முடிவில் அச்சுத் தொழில் எழுத்தை நிலைப்படுத்தியிருக்கிறது.

சோழரின் கல்வெட்டுப் பயன்பாடே இற்றைத் தமிழெழுத்தை உறுதிப்படுத்தியது என்பது இப்படத்தைப் பார்த்தால் தெற்றென விளங்கும்.

இனி ஐக்கு வருவோம். 8/9 ஆம் நூற்றாண்டு அகரத்தையும், (180 பாகை சுற்றிய) இகரத்தையும், யகரத்தையும் பாருங்கள். அஇ என்று அடுத்தடுத்து எழுதாமல், அற்றை அகரத்தின் கீழ் (180 பாகை சுற்றிய) இகரத்தை எழுதினால் அப்படியே ஐகாரங் கிட்டும். அதே போல அற்றை அகரத்தின் கீழ் அற்றை யகரத்தை எழுதினாலும் அப்படியே ஐகாரங் கிட்டும். எனவே ஐகாரம் என்ற எழுத்து அஇ/அய் என்பதை அடுத்தடுத்து எழுதாது ஒன்றின் கீழ் எழுதிய புதுவடிவம் என்பது புரியும்.

இந்தப்புரிதலோடு

-------------------

அகர இகரம் ஐகாரமாகும்
அகரத்து இம்பர் யகரப் புள்ளியும்
ஐ என் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்

என்ற தொல்காப்பிய நூற்பாக்களைப் படித்தால் 8/9 ஆம் நூற்றாண்டு வரை ஐகார வடிவம் இல்லாது போனதின் காரணம் புரியும். நான் ஐகார வடிவத்தைப் போக்கச் சொல்லவில்லை. அந்த வடிவம் அஇ அல்லது அய் என்பதன் எழுத்துச் சுருக்கம் என்றே சொல்லவருகிறேன். இந்தக் காலத்தில் கணி வந்தற்காக & என்ற சுருக்கெழுத்தைத் தூக்கியா எறிகிறோம்? ஐ தேவை தான்.

---



இராம.கி.

poo@giasmd01.vsnl.net.in

http://valavu.blogspot.com/

# 3. வாசம் வீசும் ரோஜாவும் தமிழ் எழுத்தாளர்களின் புண்ணிய பூமியும்

– திவாகர்

ரோஜாவின் வாசம் பற்றி எழுதினால்தான் தெரியுமா என்ன.. ஆனாலும் எழுதத்தான் வேண்டும்.. விஷயம் இருக்கிறது ஏராளமாக.

ஆனால் அதற்கு முன்னர் யாழ் நூலகத்தைப் பற்றி கொஞ்சம் சொல்லவேண்டும். தெற்காசியாவிலேயே இரண்டாவது பெரிய நூலகத்தை, சுமார் ஒரு லட்சம் கிடைத்தற்கரிய பழைய புத்தகங்கள் கொண்ட நூலகத்தை 1981 ஆம் வருடம் மே மாதத்தில் தீக்கிரையாக்கி அழித்தனர் சில கயவர்கள். தீக்கிரையானது அந்த நூலகக் கட்டடம் மட்டுமல்ல.. அறிவும் ஞானமும் உள்ளடக்கிய காமதேனுவை சுரக்கும் நூல்களும் கூட.

அறிவே தெய்வம் என்பார்கள்;. கல்வியே செல்வம் என்பார்கள்; படித்துக் கொண்டே இருந்து அனுபவிப்பவனால் ஞானியாக முடியும் என்பார்கள்; பெரியோரின் புத்தகங்கள் வருங்கால சமூகத்துக்கு வழிகாட்டி என்பார்கள், அப்படிப்பட்ட செல்வத்தை, அறிவு தரும் தெய்வத்தை, தெளிவு தரும் ஞானத்தை சில தீயசக்திகள் அன்று யாழ்ப்பாணத்தில் அழித்து விட்டனர். யாழ் நூலகம் என்றல்ல, பாரதத்தின் புராதன ஓலைகள் கூட இப்படி ஏராளமாக அழிக்கப்பட்ட சரித்திரங்கள் இங்கே உண்டு. ஆதிசங்கரரின் காலத்தில் வாழ்ந்த அமரசிம்ஹர் எனும் பேரறிஞர் மிகச் சிறந்தஞானி எனப் போற்றப்பட்டவர். இவர் எழுத்துகள் வெகு எளிதாக மனனம் செய்யக் கூடிய அளவில் எழுதப்பட்டு ஞானங்களை அள்ளி வழங்கிய நூல்கள். ஆதிசங்கரருடன் ஏற்பட்ட வாதத்தில் தோல்வியுற்ற விரக்தியில் இவர் தாம் எழுதிய பத்தொன்பது நூல்களையும் தீயிட்டுக் கொளுத்திவிட்டாராம். ஆனால் ஆதிசங்கரர் பதறிப்போய் தடுத்து நிறுத்திய முயற்சியால் ஒரே ஒரு நூல் மட்டும் காப்பாற்றப்பட்டது, அதுதான் அமரகோசா எனும் அரிய வடமொழி நூல். இது உதாரணம்தான்..

மொகலாயப் படையெடுப்பால் அழிக்கப்பட்ட பழைய நூல் சேகரிப்புப் பொக்கிஷங்களைக் கணக்கெடுக்கவே முடியாது. நூலகங்கள் என ஏற்பட்டதே நூல்களைப் பாதுகாக்கத்தான். ஆனால் மனிதர்களின் அறிவீனத்தால் மட்டுமல்லாமல் இயற்கை சீற்றங்களால், கவனிப்பே இல்லாமையால் கால வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்ட நூலகங்கள் எத்தனையோ உண்டு. பாரதநாடு பழம்பெரும் நாடு,

பாரதத்தில் தோன்றிய ஞானிகள் எத்தனையோ தீபங்களை ஏற்றி உலகுக்கே வழி காண்பித்தார்கள். அந்த ஞான வார்த்தைகள் கூட ஏராளமாக காலத்தின் கோலத்தில் அழிந்து போய்விட்டனதாம்.

ஆனால் அதெல்லாம் ஒரு காலம்.. இன்னும் கேட்டால் ஞான தீபத்தை மிகப் பிரகாசமாக ஏற்றிவைக்க இப்போது கனிந்து வரும் காலம் கூட. மேலை நாடுகளில் பலவித இயந்திரங்கள், தொழில்நுட்பங்கள் மூலம் நூல் பாதுகாப்புத் தன்மையை இந்த கால மனித சமுதாயம் கண்டுபிடித்துக் கொண்டே வருகிறது. ஆனால் நமக்காக நம் மொழியைக் காக்க அதைப் பயன்படுத்தவேண்டுமே.. அப்படிப் பயன்படுத்தி நூல்களைப் பாதுகாப்பதில் பெரும்பங்கு வகிக்கிறது சென்னை தரமணியில் இருக்கும் ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகம்.




ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகம் - இப்படிப்பட்ட நூலகம் ஒன்றினை இந்தியாவில் அதுவும் நம் தமிழ் மொழிக்காக தோற்றுவித்த அந்தப் பெரியவர் ரோஜா முத்தையா செட்டியாரை முதலில் தாள் பணிந்து வணங்கவேண்டும். 'கற்க, கசடறக் கற்க' என்பார் திருவள்ளுவர், ஆமாம்,தமிழ் மொழியைப் பொறுத்தவரை கசடறக் கற்கவேண்டுமானால் ரோஜா மணம் வீசும் இந்த நூலகத் தோட்டத்துக்குதான் வரவேண்டும்.



வாய்ஸ் ஆஃப் வள்ளுவர் குழுமம் தன் முதல் கூட்டத்தைக் கூட்ட வேண்டுமென்று திட்டமிட்டபோது திரு பாலா (ஆர். பாலகிருஷ்ணன், ஐஏஎஸ்) இந்த நூலகத்தில்தான் கூடப் போகிறோம் என்ற சொன்னபோது தலைவர் திரு ராஜேந்திரன் (சுங்கத்துறை முதன்மை ஆணையர்) முதற்கொண்டு அனைவரும் ஒருமனதாக வரவேற்றோம். பாலா ஏற்கனவே சில வருடங்கள் தன் சிந்து சமவெளி ஆராய்ச்சிக்காக இந்தநூலகத்தில் செலவிட்டுள்ளார். இங்கு சிந்து சமவெளி ஆராய்ச்சிக்காக தனி அறையே உண்டு. ஏராளமான 'ரெஃபெரன்ஸ் மெடீரியல்ஸ்' சேகரித்து வைத்துக் கொண்டு ஆராய்ச்சிக்காக பெரிய உதவி புரிந்து வருகிறது.

தரமணியில் இயற்கை சூழலின் மத்தியில் குளிர்ச்சியான நிலையில் இந்த கட்டடத்தை தமிழக அரசு இரவலாகக் குத்தகை அளவில்தான் முப்பத்து மூன்று வருடங்களுக்குத்தான் தந்துள்ளது. ஆனால் குத்தகை என்ற சொல்லை ஏன் இங்கு பயன்படுத்தினார்கள் என்று தெரியவில்லை. தமிழுக்காக தன்னலமில்லா சேவையில் ஈடுபடும் இந்த ஆராய்ச்சி நூலகத்துக்கு இந்தக் கட்டடத்தினைக் கொடையாக அல்லவா தந்திருக்கவேண்டும் என்ற கேள்வி எழும்புகிறது. இந்தக் கேள்வி ஆட்சியாளர்கள் காதில் விழவேண்டுமென்று விரும்புகிறோம். ஏனெனில் இங்கே பாதுகாக்கப்படுகின்ற முக்கியப் புத்தகங்கள் அதுவும் தமிழ்ப் புத்தகங்கள் தமிழகத்தில் என்றல்ல தெற்காசியாவிலேயே வேறெங்கும் இல்லாத அளவுக்கு நுண்ணிய தொழில்நுட்பம் மூலமாகப் பாதுக்காக்கப்படுகிறது என்பதே தமிழனுக்குப் பெருமை அல்லவா.

**முதலில் இந்த நூலகத்தின் சில சாதனைகளை விவரித்து விடுவோம்.**

தமிழகத்தில் கிபி 1713 இல் பிரசுரிக்கப்பட்டு வெளியான முதல் தமிழ் நூலின் பிரதி 'அக்கியானம்' (பைபிளின் ஒருபகுதி தமிழில்) இங்கே பாதுகாக்கப்படுகிறது.



தமிழில் முதன் முதலாக புத்தகத்தில் எழுதப்பட்ட திருக்குறள் பதிப்பு இங்குதான் பாதுகாப்பாக உள்ளது (பதினேழாம் நூற்றாண்டு),



கணிதமேதை சீனிவாச ராமானுஜனின் கையெழுத்துக் கணக்குப் புத்தகம் அப்படியே இங்கு பாதுகாக்கப்பட்டு வருகின்றது. அதைப் புத்தகமாகவும் வெளியிட்டுள்ளார்கள்.



சுமார் 20 லட்சம் பக்கங்கள் உள்ள மிகப் பழையப் புத்தகப் பெட்டகங்களை டிஜிடல் மூலமாக எதிர்காலத்துக்காக சேமிக்க வைக்கப்பட்டுள்ளது.

நூல்கள் மட்டுமல்ல, ஓலைச்சுவடிகள், கிராமபோன் ரிகார்ட்கள் கூட இங்கே சேமிக்கப்பட்டு, தக்கமுறையில் நவீன தொழில் நுட்ப வசதிகளோடு இங்கே பாதுகாக்கப்பட்டுள்ளது.

பழைய காலத்து உடைந்து போகும் நிலையில் உள்ள புத்தகமா.. கவலை வேண்டாம்.. உடனே இங்கு கொடுத்து பாதுகாத்துக் கொள்ளலாம்.

1713 முதல் தமிழில் எழுதப்பட்ட அத்தனை நூல்களின் பிரதிகள் இங்கு உண்டு. உடைந்து போகுமே என்ற கவலை இல்லாமல் டிஜிடல் மூலமாக நாம் படிக்கமுடியும்,.

இறக்குமதி செய்யப்பட்ட தரமான இயந்திரங்கள் மிகக் கவனமாக கையாளப்பட்டு இங்குள்ள புத்தகங்களையெல்லாம் டிஜிடல் மயமாக்கம் செய்கிறது.



நூலகத்தின் இயக்குநர் திரு சுந்தர் அவர்கள் பழைய நூல் பாதுகாப்புகள் எப்படியெல்லாம் செய்யப்படுகின்றன என்று விளக்கும்போது நாம் சற்று ஆச்சரியத்துடன் பார்க்கிறோம். அன்னை தமிழுக்கு, அன்னையின் பிள்ளைகளுக்கு, வருங்கால தமிழ்ச் சமுதாயத்துக்கு இது ஒப்பில்லாத சேவையாக கண் முன்னே படுகிறது. ஒவ்வொரு பழைய நூலையும் அவர் எடுத்துக் காண்பித்தபோதும் சரி, அதைக் கையாளும்போதும் சரி, இதை எழுதியவர்கள் மட்டும் இன்றிருந்தால் அந்த ஆத்மாக்கள் எத்தனை ஆனந்தப்படுமோ என்று வியக்கவும் வைத்தது. அதுவும் உடைந்து சுக்கு நூறாகும் பக்கங்களை பதப்படுத்தி நாம் கையாளும் வகையில் ஒரு புத்தகமாக உருவாக்கி வருகிறார்கள். சுந்தர் குழுவினரின் அயராத உழைப்பு இந்த நூலகத்தை உலகம் முழுதும் உள்ள பேரறிஞர்களையும் இங்கே எட்டிப்பார்க்க வைத்து ஆச்சரியப்படுத்தி இருக்கிறது. ஜான் ஹாரிஸ் எனும் இங்கிலாந்து அறிஞர் இவர்கள் திறமையைப் பாராட்டி, 'இந்த வகையான பாதுகாப்பு மிக உயர்ந்த உன்னத நிலையில் உள்ளது, இதே போன்று உலகம் முழுதும் செயல்பட்டால் உலகம் மிக வேகமாக கல்வியில் முன்னேறும்' என்று தன் கைப்பட எழுதிப் பாராட்டியுள்ளார்.

ஆஹா, இத்தனை உன்னதமான தமிழ்ப்பணியை ஏற்றுச் செய்யும் இந்த நூலகத்துக்கு வரவு எங்கிருந்து என்று கேள்வி கேட்கலாம்..தமிழக அரசாங்கம் கட்டடத்தை மட்டும் கொடுத்து, அதுவும் குத்தகையில் விட்டு விட்டு கையைக் கழுவிக் கொண்டது. சில காலம் முன்பு வரை சிகாகோ பல்கலைக்கழகம் ஆதரித்துவந்தது. இப்போதும் டிரஸ்டி மூலம் சில நல்ல உள்ளங்கள் பொருளுதவி செய்கின்றன.

ஆனால் சுந்தர் குழுவினரின் முன்னே இருப்பது மாபெரும் மலையளவு வேலைக்கு இந்த பொருளுதவி எல்லாம் சுண்டைக்காய் போலத்தான்.. போதவே போதாது. நூலகத்தின் தேவைகள், வாசகர்களின் வருகையைப் போல நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே வருகின்றன. மென்மேலும் புதிய கருவிகள் மேலை நாட்டிலிருந்து தருவித்துப் பெற வேண்டிய சூழ்நிலையில் பழைய இயந்திரங்களும் மேல்நிலைப்படுத்தும் தேவையும் அதிகரிக்கிறது. உதிரிபாகங்கள் கூட மேலை நாடுகளிலிருந்து தருவிக்கப்பட வேண்டிய சூழ்நிலையில் உள்ளார்கள். ஏற்கனவே உள்ள படிக்கும் இடங்களில் பார்வையாளர்களுக்கும், ஆராய்ச்சி மாணவர்களுக்கும், வாசகர்களுக்கும் இன்னும் அதிகமான வசதிகள் செய்யவேண்டிய நிலை., வெகு முக்கியமாக ஆவணப் புத்தகங்களை அடுக்கி வைக்க வேண்டி 'கம்பாக்ட் வகை ஸ்டீல் அலமாரிகள் தேவைப்படுகின்றன. இதெல்லாம் ஏதோ சிறிய அளவிதான் இங்கே எடுத்துரைத்துள்ளேன். மேலும் மேலும் தேவைகள் அதிகரிக்கும்போது அதன் சுமைகள் மிகப் பலமாகத்தான் நூலகத்தார் மீது வந்து விழுகின்றன.

இன்னும் சொல்லப்போனால் இது நூலகம் மட்டுமல்ல. ஒரு சிறந்த ஆராய்ச்சிக் கூடமாகத்தான் நாம் பார்க்கவேண்டும். மேலை நாடுகளில் ஆராய்ச்சிக் கூடங்களுக்கு அவர்கள் அரசாங்கமும் கொடையாளர்களும் தேவையான பொருளுதவியை தாராளமாக வழங்குவதால் மட்டுமே அவர்களால் இந்த புதிய நாகரீக உலகுக்கு ஏற்றவாறு பலவித வசதிகளையும் புதிய கண்டுபிடிப்புகளால் முன்னேற்றம் பெறுகிறது. ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகமும் இந்த வகையில் சேர்க்கப்படத்தான் வேண்டும்.

தமிழர்கள் பொதுவாகவே மிகச் சிறந்த அறிவாளிகள் என்ற பெயரெடுத்தவர்கள். உலகெங்கும் உள்ள ஆராய்ச்சிக்கூடங்களில் தமிழர்களின் உன்னதப் பணி பல சேவைகள் மூலம் வெளிப்படத்தான் செய்கின்றன. உலகெங்கும் உள்ள தமிழர்களில் அறிவுச் செல்வத்தோடு பொருட்செல்வத்தையும் மிக அதிக அளவில் பெற்றவர்கள் உண்டு. அப்படிப்பட்டவர்களை ரோஜா முத்தையா ஆராய்ச்சி நிலையத்துக்கு அன்போடு அழைக்கிறேன். வாருங்கள் இங்கே தமிழ் எப்படியெல்லாம் பாதுகாக்கப்படுகிறது என்பதைப் பாருங்கள். நம் வருங்காலம் மிகச் சிறப்போடு தமிழை எதிர்நோக்குகிறது என்ற நம்பிக்கையும் பெறுங்கள். அப்படிப்பட்ட தமிழ்ச்சேவை புரியும் இந்த நூலகத்தின் உங்கள் சேவையின் பங்கு என்னவென்று உங்களையே கேட்டுக் கொண்டு அதற்கான விடையயும் அந்த நூலகத்தோடு பகிர்ந்து கொள்ளுங்கள். அப்படிப் பகிர்ந்து கொண்டீர்களேயானால் தமிழன்னை உங்களைப் போன்ற மக்கட்பேறு பெற்றதற்காக பெரும்பாக்கியம் செய்திருக்கிறாள் என்பதை மட்டும் சொல்லி விடுகிறேன்.

விடைபெறும்போது சுந்தரிடம் சற்று தயக்கத்தோடு கேட்டேன் - என் புத்தகங்களும் இங்கே இருக்கின்றனவா.. அவர் உடனடியாக புன்னகைத்து ஐந்தே நிமிடத்தில் என் புத்தகங்களின் லிஸ்ட் ஒன்றைக் காண்பித்தார். புல்லரித்தது. எத்தனையோ அறிஞர்கள் பேரறிஞர்கள் எழுதிய புத்தகங்களோடு அடியேனின் எழுத்துகளும் கலந்துவிட்டதில் ஆனந்தம், ஒரு பெருமை..

எழுத்தாளர்களின் புண்ணிய பூமி மணம் வீசும் இந்த ஆராய்ச்சி நூலகம் என்றுதான் சொல்லவேண்டும்.. ரோஜா மலருக்குக் கூட வாசத்தின் கால அளவு குறைவுதான்.. ஆனால் ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகம் வாசம் எள்ளளவும் குறையாத வாடா மலர்.. தமிழன்னை தன் கூந்தலில் தனக்குத் தானே சூட்டிக் கொண்ட மலர்.

தமிழைப் பாதுகாக்கும் இந்த மலரைத் தக்கபடி பாதுகாப்பது நம் தமிழர்களின் தலையாய கடமை.

# 4. வள்ளுவர் காட்டும் உலகு

– இரெ. சந்திரமோகன்



**முன்னுரை:**

உலக பொதுமறையாம் திருக்குறளில் 'உலகம்' 'உலகு' எனும் சொல் பல பொருட்களில் கையாளப்படுவதை பல குறட்பாக்களின் மூலம் அறியலாம். "வையம் போற்ற வாழும் கலை" கற்பிக்கவே தமிழ் மறைகள் தோற்றுவிக்கப் பெற்றுள்ளன. "உலகத்தோடு ஒட்டொழுகல்" வேண்டும் எனில் உலகம் யாது என்று உணர்தல் வேண்டும். "உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்" என சேக்கிழார் பெருமான் சிவபிரானின் பெருமையைப் பேசுவார். "உலகம் பிறந்தது எனக்காக, ஓடும் நதிகளும் எனக்காக" என்ற உணர்வில் வாழ்பவர்கள் நம்பிக்கை ஊட்டுபவர்களாக தலைவர்களாக உருவாகின்றனர். வள்ளுவர் "உலகம் பழிப்பதை ஒழித்துவிடு" என்று கூறுகின்றார். அவரது பல குறட்பாக்களில் "யாதும் ஊரே யாவரும் கேளீர்" என்ற செய்தியும், "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்ற செய்தியும் எங்கும்

மிளிர்கின்றது. கம்பனின் உலகம் யாவையும் தாமுளவாக்கலும்” என்ற பாடலும் நக்கீரர் தம் திருமுருகாற்றுப்படையை ‘உலகம் உவப்ப ….’ எனத் தொடங்குவதும், “உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே” - என்ற தொல்காப்பியர்கூற்றும்ஒத்த செய்தியைத் தருகின்றன. இவ்வழி “நல்லோர்கள் நிறைந்தது உலகம்” என்பது வள்ளுவரின் கூற்றாக இருப்பதை பல குறட்பாக்கள் மெய்ப்பிக்கின்றன.

“குணம் நாடி குற்றமும் நாடி அவற்றுள்
மிகை நாடி மிக்க கொளல்” (504)

எனும் குறட்பாவில் ஒவ்வொரு மனிதனிடமும் “குணமே மிகும்” எனும் செய்தியும் மறைந்திருப்பதை நாம் நினைவில் கொள்ளுதல் வேண்டும். இவை வள்ளுவர் காட்டும் உலகு என நாம் தொல்காப்பியம் வழி தீர்மானிக்க வாய்ப்பு இருந்தாலும், அதனினும் நுட்பமான செய்திகளை வள்ளுவர் சொல்லியிருக்கிறார் என்பதை நிறுவ முயற்ச்சிப்பது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**முதற்குறட்பாவில் உலகம்:**

“அகர முதல எழுத்தெல்லாம் ஆதிபகவன்
முதற்றே உலகு." (1)

கடவுள் வாழ்த்து முதல் பாடல் மிக ஆழமான கடலை ஒத்த பாடாலாகும். இதனை ஆராய முற்படுகையில்;பாற்கடலைக் கடைந்த கதையே நினைவுக்கு வருகின்றது. இனி இக்குறட்பாவில் கூறப்படும் “உலகு” எனும் சொல் தொல்காப்பியம் காட்டும் ‘உயர்ந்தோர்’ எனும் நோக்கில் இல்லாமல் அண்டத்தின ;பிரபஞ்சத்தின் தோற்றம் பற்றிப் பேசுவதாகக் கொள்ளலாம்.

‘அகரம்’ என்பது ‘அ’ என்ற எழுத்தின் ஒலி. முதலில் ஒலி எழுப்பின் உயிர்கள். இன்றும் மனிதனைத் தவிர ஏனைய உயிர்கள் ஒலியினாலே தொடர்பு கொள்கின்றன. ஒலிகளின் தலைவன் ‘அகரம்’. ஒலி வடிவத்திற்குப் பின் ‘வரி வடிவம்’ உருவானது. அது போன்ற இந்த பிரபஞ்சமான உலகும் தோன்றியதற்கான அடிப்படை ஒலியாகும். ஆதியில் தோன்றிய ““Big Bang”” என்ற அதிர்வே உலகம் (பேரண்டம், அண்டம், பால்வெளி, நட்சத்திரங்கள், சூரியன், கிரகங்கள், பூமி, நிலா, வின்கற்கள்) தோன்றுவதற்கு அடிப்படை எனவே எழுத்துகளைப் போன்றே, உலகம் தோன்றுவதற்கும் காரணம் ஒலியே, அதிர்வே, என்றும் பொருள் உணரலாம். “அண்டப் பிளக்கத்து உண்டைப் பிறக்கம்”என்ற மணிவாசகர் வாக்கும், திருமூலரின் தமிழ்வேதத்தின் உட்கிடக்கையான “அகர உகர மகர” உட்சேர்க்கையை ‘ஓம்’ எனும் மந்திர ஒலியாகக் குறிப்பதை ஈண்டு நினைத்துப்பார்க்கலாம்.

கிருத்துவத்திருமுறை 1:1 ன் படி

“Your words create world:

In the beginning was the word and the word was with GOD, and the word was GOD!

இத்திருமறைச் செய்தியைஉற்றுநோக்கின் நம் உலகம் நம் வார்த்தைகளே என்றாகிறது.

எனவே ‘அ’ என்ற எழுத்தைப் போல் எழுத்துக்களும், வார்த்தைகளும் ‘அகரம்’ அடிப்படை. இறைவனே உயிர்களின் தலைவன். இன்சொற்கள் வழியாக இறைவனை அடையலாம் என்றோ இறைவனுக்கு ஒப்பான தலைவன் ஆகலாம் என்பதும் இதன் மூலம் உள்ளங்கை நெல்லிக்கனி. எனவே தான் “ தான் போற்றி, கழல் வெல்க, என்று மணிவாசகரும், எண்ணியவர் திண்ணியராகப்பெரின்” என்று உயர் எண்ணத்தால் எதையும் பெறலாம் என்றும் வள்ளுவர் மிகத் தெளிவாகக் கூறுகின்றார்.

முதற்குறட்பாவில் பேர அண்டத்தின் பிளவைப்பாடி அதன்பின் “நிலமிசை நீடுவாழ்வார்” என்ற குறட்பாவிற்குப்பின் “பூமி”, உயிர்கூட்டம், உயர்ந்தோர், எனும் பொருளில் உலகம் என்ற சொல்லைக் கையாளுகின்றார் என்றும் தெளிவாகிறது.

அகரம் இறைவனுக்கும், உயிர்க்கும் பொது. சொற்களே உலகம் - எனில் சொல்லுக சொல்லில் என்று அதன் பொருளை விரித்து பல குறட்பாக்களைச் செய்துள்ளார்.

“கற்றிலன் ஆயினும் கேட்க”
“சான்றோன் எனக் கேட்டதாய்”
“என்னோற்றான் கொல் எனும் சொல்”

**நாகாக்க!**

புறங்கூறாமை, வாய்மை, இனியவை கூறல்... போன்ற அதிகாரங்கள் எப்பொருள் யார்யார்வாய் கேட்பினும்....
என்று சொற்கள், கேட்டல் ஆகியவற்றின் உயர்வை விளக்க என்று சொற்கள், கேட்டல் ஆகியவற்றின் உயர்வை விளக்க பல குறட்பாக்களை சமைத்துள்ளார்.

முதற் குறளிலேயே இன்றைய விஞ்ஞான உலகத்தின் அடிப்படைத் தேடலின் விடையை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே எம் ஐயன் வள்ளுவன் தந்திருக்கின்றான் என்ற செய்தி கரும்பாய் இனிக்கின்றது.

**படைக்கப்பட்ட உலகம்:**

இனி உலகம் தானாய் தோன்றியதா? படைக்கப்பட்டதா? இந்தக் கேள்வி இன்றும் சர்சைக்குரிய கேள்வி. ""Standard model"" என்ற கொள்கை பேரண்டப் பிளவு வெற்றிடத்திலிருந்து தோன்றியது என்றும், பேரண்டப்பிளவின் சில நுண்துளி வினாக்களில் சமச்சீர்கேடு உருவாகி, அதிலிருந்து கடவுள் துகள், மற்றும் நுண்துகள்கள் உருவாகி, அதனின்று இன்றைய அண்டம், விண்வெளி, பால்வெளி, நமது சூரியகுடும்பம் மற்றும் பூமி, உயிர்கள், தோன்றியது என்றும் நிருவ முயற்சி மேற்கொண்டு பெரும்பாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு வருகின்றது.

"ஆதிபகவன்" என்ற சொல்லாட்சி மூலம் இறைவன் என்ற சக்தியையே குறிக்கின்றார். "விச்சதன்றியே விளைகு செய்குவான்" என்ற மணிவாசகர் "விண்ணும் மண்ணும் வைத்து வாங்குவான்" என்று சொல்வதைப் போல் "பேரண்ட உலகைப் படைத்தவனே...... உலகையும் படைக்கின்றான்" அகரத்தைத் தலைவனாகக் கொண்டது போல், இறைவனைத் தலைவனாக ஏற்றுக்கொள்பவன் நல்லுலகமாகி உயர்ந்த நெறிகளுக்கு வழி வகுக்கின்றான்.

"நெருநர் உளன் ஒருவன் இன்றில்லை எனும்
பெருமை உடைத்து இவ்வுலகு"

என்று காலத்திற்கேற்ப மாறிக்கொண்டே வரும் பெருமை உடையதே இப்பூமி என்று வள்ளுவம் பகர்கின்றது.

**முடிவுரை:**

"செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகம் ஆற்றல் அரிது".

என்ற குறட்பா கூறுவது போல் வள்ளுவர் காட்டும் உலகம் பெரும்பான்மையாக மற்றும் வானுலகம் மண்ணுலகமாகும்.

"கைம்மாறு வேண்டாக் கடப்பாடு மாரிமாட்டு
என் ஆற்றும் கொல்லா உலகு". (211)

"இருமை வகை தெரிந்து ஈண்டாரம் பூண்டார்
பெருமை பிறங்கிற்று உலகு" - (23)

"சுவை ஒளி உறு ஓசை நாற்றமென்று ஐந்தின்

வகைதெரிவான் கட்டே உலகு.” (27)

போன்ற குறட்பாக்களில் மண்ணுலகைச் சுட்டும் குறட்பாக்கள் என்று கொள்ளலாம்.

“பெற்றால் பெறின் பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்பு
புத்தேளிர் வாழும் உலகு.” (58)

என்ற குறட்பா வானுலகைச் சுட்டும் குறட்பா. ஆயின்

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதிபகவன்
முதற்றே உலகு.” (1)

என்ற குறட்பா குறிப்பிடும் உலகு எனும் சொல் “பேரண்டமான பிரபஞ்சமாகும்” என்பதும் அதன் உள்ளிடக்கை அறிவதே “கற்றதனால் ஆய பயன்” என்பதே வள்ளுவரின் வாக்கு என்றும் அறிந்து இன்புறுவோம்.

வாழிய திருக்குறள் வாழிய இவ்வுலகு.

---



இரெ. சந்திரமோகன்
rathinam.chandramohan@gmail.com
முதல்வர், ஸ்ரீ சேவுகன் அண்ணாமலைக்கல்லூரி
தேவகோட்டை-630303. தமிழ் நாடு, இந்தியா

# 5. தித்திக்கும் திருக்குறள்

– நா.கண்ணன்

வள்ளுவர் ஓர் நல்ல கவிஞர். குறட்பா எனும் வடிவைத் திறமையாகக் கையாண்டவர். அவரோர் நல்ல தொகுப்பாசிரியர். அவர் காலத்தில் கண்டு, கேட்டு, உள்வாங்கிச் சிந்தித்த கருக்களை பிற்காலத்தவருக்காக தொகுத்து அளித்தவர்.

வள்ளுவர் நல்ல ஆசிரியர், மாணவர், சிந்தனையாளர், கணவர், பெற்றோர். கொஞ்சம் ஆணாதிக்கம் உள்ளவர் (அவர் காலத்தில் அப்படித்தான் வாழ்ந்திருக்க முடியும்). வள்ளுவம் 'மறை' அல்ல. அதுவொரு நீதி நூல், வாழ்வியல் நூல். அவ்வளவே. வள்ளுவரைத் தெய்வமென மதித்துப் போற்றும் போக்கு கேள்விக்கு உட்படுத்தப்பட வேண்டியது.

வள்ளுவர் ஓர் காலக்கண்ணாடி. அவர் காலத்தில் இந்திய உபகண்டத்தில் இருந்த வாழ்வியலைப் படம் பிடித்துக் காட்டுகிறார். எனவே அது முழுக்க தமிழ்ச் சிந்தனை என்பது போன்ற கூற்றுப் பிழையுள்ளது. அது இந்தியப் பொதுமைக்குமான சிந்தனைக் கூட்டு. வள்ளுவரை ஒவ்வோர் அதிகாரமாகப் பார்த்து தரிசிக்க வேண்டும். அதிகார முக்கியத்துவமே அவரது நோக்கு. அந்த அதிகாரப் பொருளை உயர்வாக எடுத்துப் பேசுவார். அது வேறோர் அதிகாரத்தில் குறைவாகச் சுட்டப்படலாம்.

வள்ளுவனை வழிபடவோ, முழுமையாகப் பின்பற்றவோ முடியாது. ஏனெனில் வள்ளுவன் மனிதனைத் தெய்வ நிலைக்குக் கொண்டு செல்ல முயல்கிறான். அதி உன்னத மனிதனை உருவாக்க முயல்கிறான். அவன் தரக்கட்டுப்பாட்டிற்குள் விழ வேண்டுமென எண்ணுபவன், 'அக்னிப்பரிட்சையில்' இறங்குகிறான். அது மனிதரால் இயலாத செய்கை! வள்ளுவனின் ஓரிரு வாழ்வியல் நெறிகளைக் கடைப்பிடித்தால் அதுவே பெரிது. இல்லை வள்ளுவனே என் ஆசான். அவன் சொல்லே என் வாழ்வு என்று சொல்வோர் தன்னைத்தானே ஏமாற்றிக்கொண்டு, பிறரையும் ஏமாற்றுகின்றனர்.

தமிழர்கள் வள்ளுவனின் இன்பத்துப்பால் பற்றிப் பேசுவதில்லை. ஓர் வெட்கம். ஏதோ வள்ளுவர் கொக்கோக சாத்திரம் பேசுவதாக எண்ணிக்கொண்டுள்ளனர். அறம், பொருள், இன்பம் என முப்பாலைப் பின் ஏன் அவன் எழுத வேண்டும்? காமத்துப்பாலைக் கண்டு கூச்சப்படும் தமிழன் சிறுகுழந்தைகளைக்கூடக் காமத்துப்பாலை மனப்பாடம் செய்து ஒப்புவிக்கச் செய்கிறான். அது முரணாக அவனுக்குப் படவில்லை! சமீபத்தில் மலேயாவில் மாணவி திருக்குறளை தமிழ், பாகாஸா மொழிகளில் ஒப்புவித்தாள்.

திருக்குறளின் கவிநயம் பேசப்பட வேண்டும். அவனது சொல்லாட்சி கண்டு மகிழ வேண்டும். தமிழின் சீரிளமைக்கு வள்ளுவமே வாட்சி.

குறள்களில் சில எளிய தமிழ் கொண்டு எளிதாகப் புரிந்து கொள்ளத்தக்க வகையில் நேரடிப் பொருள் சொல்வன. ஆனால் பல குறள்கள் மிகச் சிக்கலான மொழி நடையில், இலக்கண அறிவு இல்லாமல், இலக்கியப் பரிட்சயம் இல்லாமல் அணுக இயலாதவாறு உள்ளன. வள்ளுவத்தில் சமிஸ்கிருதச் சொற்கள் ஏராளமாகப் பரவிக்கிடக்கின்றன. அது குறை அல்ல. நிறை. அக்காலத்திலும், இக்காலத்திலும் தமிழ் மொழி நடை அவ்வாறே உள்ளது. எனவே வள்ளுவனைத் தூய்மைப்படுத்த முயலும் முயற்சி தீவினையில் முடியும்.

வள்ளுவன் இந்திய சமயச் சிந்தனை உள்ளவன். அது எந்த நெறி என்பது அவரவர் புரிதலைப் பொருத்தது. ஆனால் வள்ளுவனை சமயச் சிந்தனை அற்ற பொருள் முதல்வாதியென்றோ, இக்கால பகுத்தறிவாதி போன்றவர் என்றோ புரிய முற்படுவது அனர்த்தத்தில் முடியும். பல நேரங்களில் பரிமேல் அழகர் இல்லாமல் வள்ளுவனைப் புரிந்து கொள்ள முடியாது என்பது உண்மை. அதே போல் அதிகாரத்தை விட்டு குறளை வெளியே எடுத்து பொருள் கொள்ள முயன்றால் அது பொருள் தரலாம், ஆனால் அதைத்தான் வள்ளுவர் சொல்கிறார் என வாதிடமுடியாது. ஏனெனில் குறள் அதிகாரம் சார்ந்தது. அப்படித்தான் அவன் இயற்றியிருக்கிறார்.

வள்ளுவம் ஆயிரம் மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுவிட்டது என மார்தட்டுவதில் பெருமிதம் இல்லை என்றே தோன்றுகிறது. ஏனெனில் இத்தனை ஆண்டுகள் ஆன பின்பும் அதன் தாய் மொழியில் வள்ளுவம் இன்னும் முழுமையாய் புரிந்து கொள்ளப்படாத போது அது பிற மொழிகளில் எப்படி மிளிரும். போதிய தரக்கட்டுப்பாட்டில், எல்லா உரைகளையும் அலசி ஆராய்ந்துதானா இந்த மொழிபெயர்ப்புகள் வந்துள்ளன? கடவுளுக்கே வெளிச்சம்.

வள்ளுவம் அழகு! வள்ளுவம் புனிதம்! வள்ளுவம் கவிதை! வள்ளுவம் ஓர் ஆச்சர்யம்!

---



முனைவர் நா. கண்ணன்
nkannan@gmail.com

# 6. குறுந்தொகை - ஆங்கில மொழியாக்கம்

## (Kurunthogai Translation)

– ப. பாண்டியராஜா

**வேம்பின் பைம் காய் என் தோழி தரினே**
**தேம் பூம் கட்டி என்றனிர்; இனியே**
**பாரி பறம்பில் பனிச் சுனைத் தெண் நீர்**
**தைஇத் திங்கள் தண்ணிய தரினும்**
**வெய்ய உவர்க்கும் என்றனிர்**
**ஐய அற்றால் அன்பின் பாலே!**
பாடல் : குறுந்தொகை 196

When my friend gave you a green unripe fruit of the neem tree
You said,"It was a sweet good jaggery cube", but now
Even if she gives you
The clear cool water from the mountain spring in Pari's Parampu Hills,
As cool as the chillness in the month of Thai,
You say, "It tastes astringent"
Oh, chief, so is the level of your love now.



வேம்பின் பைம் காய்



தேம் பூம் கட்டி



பனிச் சுனைத் தெண் நீர்

**காதலர் உழையராகப் பெரிது உவந்து**
**சாறுகொள் ஊரின் புகல்வேன் மன்ற;**
**அத்தம் நண்ணிய அங்குடிச் சீறூர்**
**மக்கள் போகிய அணிலாடு முன்றில்**
**புலப்பு இல் போலப் புல்லென்று**
**அலப்பென் தோழி அவர் அகன்ற ஞான்றே.**
பாடல் : குறுந்தொகை 41

When my beloved is beside me, being greatly delighted,
I would be joyous like a festive town, yeah surely,
In the little hamlet nearby the path on a wasteland,
Deserted by its people, the squirrels play in the courtyard
Of a lonely house, lacking of grandeur, so I would be,
And distressed, my friend, when he leaves me.


சாறுகொள் ஊரின் புகல்வேன்


மக்கள் போகிய


அணிலாடு முன்றில்

**யாரினும் இனியன்! பேர் அன்பினனே!**
**உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்**
**சூல்முதிர் பேடைக்கு ஈன்இல் இழைஇயர்,**
**தேம்பொதிக்கொண்ட தீங்கழைக் கரும்பின்**
**நாறா வெண்பூக் கொழுதும்**
**யாணர் ஊரன்! பாணன் வாயே!**
பாடல் : குறுந்தொகை 85

He -
With fresh incoming wealth -
In whose village, the male house sparrow with hopping gait,
In order to lace a nest for laying eggs and hatching,
Rends the fragrance-less white flowers of the sugarcane holding so much sweetness;
He -
In Sweetness is second to none; His love is so abounding;
So says his friend, the bard.



குரீஇத் துள்ளுநடைச் சேவல்


தீங்கழைக் கரும்பின் நாறா வெண்பூ


நாறா வெண்பூக் கொழுதும்

**முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**
**கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇ**
**குவளை உண்கண் குய்ப்புகை கழுமத்**
**தான் துழந்து அட்ட தீம்புளிப் பாகர்**
**இனிது எனக் கணவன் உண்டலின்**
**நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே!**
பாடல் : குறுந்தொகை 167

With the soft, Glory Lily-like fingers, she kneads the maturely fermented curd,
Unwashed, she adjusts the pallu of her rinsed saree;
Her kohl applied eyes, like the blue water lily, are filled with seasoning smoke,
The delicious but sour liquid curry, she cooked by strained stirring,
Her husband eats and says, "very fine";
Her face with bright forehead delights subtly.


காந்தள்


மெல்விரல்


முளி தயிர்

---

**ஒரு நாள் வாரலன், இரு நாள் வாரலன்;**
**பல் நாள் வந்து பணிமொழி பயிற்றி, என்**
**நன்னர் நெஞ்சம் நெகிழ்த்த பின்றை,**
**வரை முதிர் தேனின் போகியோனே!**
**ஆசு ஆகு எந்தை யாண்டு உளன்கொல்லோ?**
**வேறு புல நன் நாட்டு பெய்த**
**ஏறு உடை மழையின் கலிழும் என் நெஞ்சே!**
பாடல்:குறுந்தொகை 176

He did not stop with coming on one day or two days;
He did come on many days and also uttered humble words;
And thereby softened my good heart. And then -
He was gone like a fully grown honeycomb on a hill;
Oh! Where would he be now, my lord and support?
My heart is perturbed,
Like the murky waters that come from rains with thunderstorm in a distant country.


ஒரு நாள் வாரலன், இரு நாள் வாரலன்;


ஆசு ஆகு எந்தை யாண்டு உளன்?


ஏறு உடை மழையின் கலிழும்

---

**சிறுவெள் அரவின் அவ்வரிக் குருளை**
**கான யானை அணங்கியாஅங்கு**
**இளையள், முளைவாள் எயிற்றள்**
**வளையுடைக் கையள் எம் அணங்கியோளே.**
பாடல் : குறுந்தொகை 119

The small beautifully striped young one of a white snake
Would afflict a wild elephant;
Likewise-
A young lass, with sprout-like bright teeth,
And hands with bangles - It was she who afflicted me.



அரவின் அவ்வரிக் குருளை



கான யானை அணங்கியாஅங்கு

**பார்ப்பன மகனே! பார்ப்பன மகனே!**
**செம்பூ முருக்கின் நல்நார் களைந்து**
**தண்டொடு பிடித்த தாழ்கமண்டலத்துப்**
**படிவ உண்டிப் பார்ப்பன மகனே!**
**எழுதாக் கற்பின் நின் சொல்லுள்ளும்**
**பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின்**
**மருந்தும் உண்டோ? மயலோ இதுவே!**
பாடல் : குறுந்தொகை 156

Oh Brahmin! Oh Brahmin!
Holding as staff the peeled off branch of the palasa tree with red flowers,
And also a low hanging kamaNTalam,
Oh Brahmin of austere food!
In the words of your scripture which you learn not by writing (but by chanting),
Is there a remedy for bringing together the separated?
Or is it only a delusion?


செம்பூ முருக்கு


கமண்டலம்


தண்டொடு பிடித்த தாழ் கமண்டலம்

**எந்தையும் யாயும் உணர காட்டி**
**ஒளித்த செய்தி வெளிப்பட கிளந்த பின்**
**மலை கெழு வெற்பன் தலைவந்து இரப்ப**
**நன்று புரி கொள்கையின் ஒன்றாகின்றே**
**முடங்கல் இறைய தூங்கணம்_குரீஇ**
**நீடு இரும் பெண்ணை தொடுத்த**
**கூடினும் மயங்கிய மையல் ஊரே**
பாடல் : குறுந்தொகை 374

After unfolding the concealed story
By presenting convincingly to our parents,
Resulting in the leader of the hills coming to us seeking wedlock,
With the just intention of doing good,
This blurred hometown -
Which interweaved stories more complex
Than the nest of the arch-winged weaver bird in the tall dark palmyra tree,
Finally concurs with our stand.


நீடு இரும் பெண்ணை


தூங்கணம் குரீஇ தொடுத்த


வெற்பன் தலைவந்து இரப்ப

**மன்ற மராஅத்த பேஎம் முதிர் கடவுள்**
**கொடியோர் தெறூஉம் என்ப யாவதும்**
**கொடியர் அல்லர் எம் குன்று கெழு நாடர்**
**பசைஇய பசந்தன்று நுதலே**
**ஞெகிழ ஞெகிழ்ந்தன்று தட மென் தோளே**
பாடல் : குறுந்தொகை 87

The fearful ancient God in the maraa tree in the village courtyard
Will punish the wicked people, they say; Even a little
Wicked is not my man from the mountainous terrain,
My forehead had become pale just because of its longing for his love;
My large soft shoulders have become thin just because my heart melted for him.


மன்ற மராஅத்த பேஎம் முதிர் கடவுள்


பசைஇய பசந்தன்று நுதலே


ஞெகிழ ஞெகிழ்ந்தன்று தட மென் தோளே

---

**யானே ஈண்டையேனே என் நலனே**
**ஏனல் காவலர் கவண் ஒலி வெரீஇக்**
**கான யானை கை விடு பசும் கழை**
**மீன் எறி தூண்டிலின் நிவக்கும்**
**கானக நாடனொடு ஆண்டு ஒழிந்தன்றே!**
பாடல்: குறுந்தொகை 54

Only my body is here; All my other good things
Have gone to him - that man of the forest terrain,
Where -
Like the bent fishing rod bounces back after being let free by the fish which bit it,
The green bamboo bent by a wild elephant rises high again
When it let it go fearing the sound of the hurling of the sling.


காவலர் கவண்


கான யானை கைவிடு பசுங்கழை


மீனெறி தூண்டிலின் நிவக்கும்

---



Dr. Pandiyaraja
pipiraja@gmail.com
http://sangamconcordance.in/

# 7. குறுந்தொகையில் புதுக்கவிதை படைக்கலாம்

## – திருத்தம் பொன்.சரவணன்

இருள் திணிந்து அன்ன ஈர்ம் தண் கொழு நிழல்
நிலவு குவித்து அன்ன வெண் மணல் ஒரு சிறை
கரும் கோட்டு புன்னை பூ பொழில் புலம்ப
இன்னும் வாரார் வரூஉம்
பன் மீன் வேட்டத்து என் ஐயர் திமிலே
-- குறுந்தொகை 123

**நீ வரல, அவிங்கெ வந்துட்டாய்ங்கெ**

நடுராத்திரி இருட்டு மாதிரி ஒரு நெழலு
நெலாவே காயறமாதிரி வெள்ள மணலு
புன்னமரச் சோலையில பூத்திருக்கு உன்ரோசா
அண்ணனுங்க வாராய்ங்க படகுல வெரசா
இன்னமும் நீஏன் வரல என்ராசா?

---

பைம் கால் கொக்கின் புன் புறத்து அன்ன
குண்டு நீர் ஆம்பலும் கூம்பின இனியே
வந்தன்று வாழியோ மாலை
ஒரு தான் அன்றே கங்குலும் உடைத்தே
-- குறுந்தொகை 122

**எப்போது விடியும்?**

வெள்ளக்கொக்கு முதுகு மாதிரி ஆம்பலு
வாடுறத பாக்கையிலே நோவலு
பொழுது போயி வந்துடுச்சே சாந்தரம்
அதுவும் போயி விடிவதெப்போ சீக்கிரம்?

---

யாயும் ஞாயும் யார் ஆகியரோ
எந்தையும் நுந்தையும் எம் முறை கேளிர்
யானும் நீயும் எ வழி அறிதும்
செம் புல பெயல் நீர் போல
அன்பு உடை நெஞ்சம் தாம் கலந்தனவே
-- குறுந்தொகை 40

**செங்காட்டு மழத்தண்ணி**

எங்கம்மாவுக்கு ஒங்கம்மா என்ன சொந்தம்னு தெரியல
எங்கப்பாவுக்கும் ஒங்கப்பாவுக்கும் என்ன பந்தம்னும் புரியல
நீ யாரோ இங்க நான் யாரோ அதுவும் தெரியல ஆனா
செங்காட்டுல பேஞ்ச மழத்தண்ணி மாதிரி சேந்து
ஒண்ணா கலந்துருச்சி நம்ம மனசு இப்பலேர்ந்து.

---

யானே ஈண்டையேனே என் நலனே
ஏனல் காவலர் கவண் ஒலி வெரீஇ
கான யானை கை விடு பசும் கழை
மீன் எறி தூண்டிலின் நிவக்கும்
கானக நாடனொடு ஆண்டு ஒழிந்தன்றே
-- குறுந்தொகை 54

**உசுரு மிச்சமிருக்கா?**

கட்ட மட்டுந்தான் இங்கிருக்கு என்ராசா தோட்டத்துல
கவட்டச் சத்தங்கேட்ட காட்டுயானை பயத்துல
கைவிட்ட மூங்கிமரம் நிமிந்தது சுருக்கா
சுண்டிவிட்ட மீன் தூண்டில் கணக்கா
கொண்டுபோனியே என்உசுர மிச்சந்தான் இருக்கா?

---

பூ இடைப்படினும் யாண்டு கழிந்து அன்ன
நீர் உறை மகன்றில் புணர்ச்சி போல
பிரிவு அரிது ஆகிய தண்டா காமமொடு
உடன் உயிர் போகுக தில்ல கடன் அறிந்து
இருவேம் ஆகிய உலகத்து
ஒருவேம் ஆகிய புன்மை நாம் உயற்கே
-- குறுந்தொகை 57

**உடம்பு ரெண்டு உசுரு ஒண்ணு**

உடம்பு ரெண்டா உசுரு ஒண்ணா இருந்ததே
கடம வந்து நம்மள வேறாப் பிரிக்குதே
நீந்துறச்சே பூவொண்ணு நடுவுல வந்தாலும்
தாந்துணையக் காணாமே அன்றிலு தவிக்குமாம்
உன்ன விட ஒண்ணும் எனக்கில்ல பெருசாவே
என்ன நீ பிரிஞ்சா உசிரில்ல ராசாவே !

---

இடிக்கும் கேளிர் நும் குறை ஆக
நிறுக்கல் ஆற்றினோ நன்று-மன் தில்ல
ஞாயிறு காயும் வெவ் அறை மருங்கில்
கை இல் ஊமன் கண்ணின் காக்கும்
வெண்ணெய் உணங்கல் போல
பரந்தன்று இ நோய் நோன்று கொளற்கு அரிதே
-- குறுந்தொகை 58

**என் உசிரும் போயிருமே**

கரும்பாற மேலத்தான் கண்கூசுற வெயில்லதான்
காயவெச்ச வெண்ணெக் கருவாட்டுத் துண்டத்தான்
கையில்லா ஊமையன் காப்பாத்த முடியுமாலே?
என்னக் காப்பாத்த ஏங்குறஎன் நண்பர்களே
கருவாட்டுத் துண்டெல்லாம் காக்கா தின்னுருமே
காதல் நோயாலே என்உசிரும் போயிருமே !!!

---

கடும் புனல் தொடுத்த நடுங்கு அஞர் அள்ளல்
கவிர் இதழ் அன்ன தூவி செ வாய்
இரை தேர் நாரைக்கு எவ்வம் ஆக
தூஉம் துவலை துயர் கூர் வாடையும்
வாரார் போல்வர் நம் காதலர்
வாழேன் போல்வல் தோழி யானே
-- குறுந்தொகை 103

**ஆவி சோருதடி அய்த்தானக் காணத்தான்**

ஆத்துத் தண்ணியில ஓடுகிற மீனத்தான்
சேத்து மண்ணுமேல நின்னுக்கிட்டு புடிக்கத்தான்
முருக்கம் பூவாட்டம் முதுகுள்ள நாரப்புள்ள
பொறுத்துக் கெடக்கையிலே பேஞ்சதடி சாரமழ
பாவம் அந்நார நடுங்குனதப் போலஎன்
ஆவி சோருதடி அய்த்தானக் காணத்தான்!!!

---

புனவன் துடவை பொன் போல் சிறுதினை
கடி உண் கடவுட்கு இட்ட செழும் குரல்
அறியாது உண்ட மஞ்ஞை ஆடு_மகள்
வெறி_உறு வனப்பின் வெய்து_உற்று நடுங்கும்
சூர் மலை நாடன் கேண்மை
நீர் மலி கண்ணொடு நினைப்பு ஆகின்றே
-- குறுந்தொகை 105

**கண்ணீர் பெருகுதடி**

தோட்டக் காவலுக்கு இருந்துவந்த சாமிக்கி
தெனமு படச்சிவந்த தெனயத்தான் வெளாட்டுக்கி
தின்ன மயிலொண்ணு சாமியாடி போலத்தான்
முன்னும் பின்னுமா ஆடுனதே நடுங்கித்தான்
இன்னும் இருக்குதடி அந்நெனப்பு போகலியே
கண்ணீர் பெருகுதடி காதலனக் காணலியே. !!!

---

குவி இணர் தோன்றி ஒண் பூ அன்ன
தொகு செம் நெற்றி கணம்_கொள் சேவல்
நள்ளிருள் யாமத்து இல் எலி பார்க்கும்
பிள்ளை வெருகிற்கு அல்கு_இரை ஆகி
கடு நவைப்படீஇயரோ நீயே நெடு நீர்
யாணர் ஊரனொடு வதிந்த
ஏம இன் துயில் எடுப்பியோயே
-- குறுந்தொகை 107

**இது என் சாபம் !**

செங்காந்தள் பூப்போல கொண்டையுள்ள சேவலே
கொக்கரக்கோ என்றுநீ செய்துவிட்டாய் கூவலே
என்காதல் கணவனுடன் நானிங்கு மகிழ்ந்திருக்க
இன்பம்தான் போனதிங்கே விடிந்ததென்று நீயுரைக்க
எலியைப் பிடித்துண்ணும் பூனையின் கைகளிலே
வலுவாய் அகப்பட்டுத் துன்புறவே இரவினிலே
ஒழிவாய் இரையாகி இது என் சாபம் !

---

குருகு கொள குளித்த கெண்டை அயலது
உரு கெழு தாமரை வான் முகை வெரூஉம்
கழனி அம் படப்பை காஞ்சி ஊர
ஒரு நின் பாணன் பொய்யன் ஆக
உள்ள பாணர் எல்லாம்
கள்வர் போல்வர் நீ அகன்றிசினோர்க்கே
-- குறுந்தொகை 127

**இங்கிருந்து கெளம்புநீ**

நாரஒண்ணு கெண்டமீனக் கொத்தித்தின்னப் பாத்துச்சாம்
நீருக்குள்ள கெண்டமீனு முழுகிஓடிப் போய்டிச்சாம்
போனமீனு தலையதூக்கி மேலஎட்டிப் பாத்துச்சாம்
பாத்தமீனு பக்கத்துல இருந்தவொரு தாமர
நாரமூக்கு போலிருக்க பயந்ததாம் உள்ளார
நாரபோல ஒம்பாணன் கூறுகெட்ட புளுகுணி
வேறபாணன் வேண்டாமய்யா இங்கிருந்து கெளம்புநீ.

---

காமம் காமம் என்ப காமம்
அணங்கும் பிணியும் அன்றே நுணங்கி
கடுத்தலும் தணிதலும் இன்றே யானை
குளகு மென்று ஆள் மதம் போல
பாணியும் உடைத்து அது காணுநர் பெறினே
-- குறுந்தொகை 136

**கண்டவுடன் பொங்கும் காலத்தையும் வென்று !!!**

காதல் ஒருநோய் என்பார் சிலர்
காதல் ஒருபேய் என்பாரு முளர்
உண்மையான காதல் இவ்விரண்டு மன்று
மென்மையான காதல் கூடிக்குறைவ தன்று
மதம்பிடித்த யானை மரத்திலையைத் தின்று
மகிழ்ந்தருகே தங்கும் காதலதைப் போன்று
கண்டவுடன் பொங்கும் காலத்தையும் வென்று !!!

---

அதுகொல் தோழி காம நோயே
வதிகுருகு உறங்கும் இன் நிழல் புன்னை
உடைதிரைத் திவலை அரும்பும் தீநீர்
மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
பல்லிதழ் உண்கண் பாடுஒல்லாவே.
-- குறுந்தொகை 5

**காதலொரு நோவே தான் !!!**

புன்னமரக் கௌமேல ஒறங்குதடி குறுநார
மன்னவனக் காணாமே கலங்குதடி உள்ளார
கடலுதண்ணி தெறிக்குதடி புன்னமர இலமேல
கண்ணீரு வழியுதடி அந்தமர இலபோல
ராவெல்லாம் முழிச்சிருக்கேன் ராசாவக் காணத்தான்
சும்மா சொல்லலடி காதலொரு நோவேதான் !!!

---

நோம் என் நெஞ்சே நோம் என் நெஞ்சே
புன்_புலத்து அமன்ற சிறியிலை நெருஞ்சி
கட்கு இன் புது மலர் முள் பயந்து ஆங்கு
இனிய செய்த நம் காதலர்
இன்னா செய்தல் நோம் என் நெஞ்சே
-- குறுந்தொகை 202

**நெஞ்சு நோவுதடி நெனச்சுப் பாக்கயில**

நெஞ்சு நோவுதடி நெனச்சுப் பாக்கயில
நெருஞ்சிப் பூவெல்லாம் அழகாத் தெரிஞ்சாலும்
நெருங்கிப் பறிக்கயிலே முள்ளு குத்திடுமாம்
நெருஞ்சிப் பூவாட்டம் எனக்கு இனிச்சவரே
நெருஞ்சி முள்ளாட்டம் நோவும் கொடுத்தாரே
நெஞ்சு நோவுதடி நெனக்காமப் போனாரே !!!

---

யாவதும் அறிகிலர் கழறுவோரே
தாய் இல் முட்டை போல உள் கிடந்து
சாயின் அல்லது பிறிது எவன் உடைத்தே
யாமை பார்ப்பின் அன்ன
காமம் காதலர் கையற விடினே
-- குறுந்தொகை 152

**குத்தஞ் சொல்லுறதே ஊருக்குப் பொழப்பாச்சு !!!**

அடகாக்க முடியாத முட்டையப் போலத்தான்
அவிஞ்சே போயிடுமோ என்னோட காதலுந்தான்
ஆத்தா மொகம்பாத்தே வளருமடி ஆமக்குஞ்சு
அத்தான் மொகம்பாக்க ஏங்குதடி என்நெஞ்சு
குத்தஞ் சொல்லுறதே ஊருக்குப் பொழப்பாச்சு !!!

---

காமம் காமம் என்ப காமம்
அணங்கும் பிணியும் அன்றே நினைப்பின்
முதை சுவல் கலித்த முற்றா இளம் புல்
மூதா தைவந்த ஆங்கு
விருந்தே காமம் பெரும் தோளோயே
-- குறுந்தொகை 204

**காதலுக்கு பேதம் கிடையாது !!!**

காதலொரு நோயென்பார் பேயென்பார் அறியார்
காதலொரு விருந்தாகக் களிப்பாரே பெரியார்
கரிந்த மேட்டினிலே முளைத்த புதுப்புல்லை
கிழட்டுப் பசுநக்கித் தின்பதில் வியப்பில்லை
காதல் எப்பொழுதும் புதுப்புல் போலத்தான்
பேதம் அதற்கில்லை இடத்திலும் வயதிலுந்தான் !!!

---

செப்பினம் செலினே செலவு அரிது ஆகும் என்று
அத்த ஓமை அம் கவட்டு இருந்த
இனம் தீர் பருந்தின் புலம்பு கொள் தெள் விளி
சுரம் செல் மாக்கட்கு உயவு துணை ஆகும்
கல் வரை அயலது தொல் வழங்கு சிறு நெறி
நல் அடி பொறிப்ப தாஅய்
சென்று என கேட்ட நம் ஆர்வலர் பலரே
-- குறுந்தொகை 207

**ஆவி போகுதடி அதக்கேட்டுத் தான்வெரசா !!!**

சொல்லிட்டுப் போனாக்க பிரிஞ்சிவர முடியாதுன்னு
சொல்லாமப் போனாரே என்ஆச ராசாக்கண்ணு
ஓம மரத்துமேல ஒத்தப் பருந்தோட
ஓச வழித்தொணயா ஒதுங்கி நடக்கையில
காலு சுட்டுடுச்சாம் காஞ்ச பூமியில
காலு சுட்டதுல கொப்புளிச்சுப் போனதால
காட்டு வழியெல்லாம் காலுவெக்க மாட்டாம
தாவிப் போனாராம் தங்கமான என்ராசா
ஆவி போகுதடி அதக்கேட்டுத் தான்வெரசா !!!

# 8. குறுந்தொகையில் புதுக்கவிதை - பாட்டுக்குப் பாட்டு

– துரை.ந.உ.



இருள் திணிந்து அன்ன ஈர்ம் தண் கொழு நிழல்
நிலவு குவித்து அன்ன வெண் மணல் ஒரு சிறை
கரும் கோட்டு புன்னை பூ பொழில் புலம்ப
இன்னும் வாரார் வரூஉம்
பன் மீன் வேட்டத்து என் ஐயர் திமிலே
-- குறுந்தொகை 123

நடுஇரவின் மைஇருளுள் நீளும் நிழலாய்
நெடுநிலவின் பால்ஒளியில் வெள்ளை மணலாய்
புன்னைமர மத்தியில் பூத்திருந்தேன் நான்உனக்கு
என்எண்ணம் ஏன்இன்னும் இல்லை உனக்கு
அண்ணன்மார் வந்ததுதான் தப்புக் கணக்கு



பைம் கால் கொக்கின் புன் புறத்து அன்ன
குண்டு நீர் ஆம்பலும் கூம்பின இனியே
வந்தன்று வாழியோ மாலை
ஒரு தான் அன்றே கங்குலும் உடைத்தே
-- குறுந்தொகை 122

நீள்பசுங்கால் கொக்கின்பின் வெண்முதுகை ஒத்திருக்கும்
ஆழ்குளத்தின் ஆம்பலும் கூடக் குவிந்துவிட
நீள்இரவும் வந்துவிட நான்இனி என்செய்வேன்
வீழும்இம் மாலைக்கென் வாழ்த்து



யாயும் ஞாயும் யார் ஆகியரோ
எந்தையும் நுந்தையும் எம் முறை கேளிர்
யானும் நீயும் எ வழி அறிதும்
செம் புல பெயல் நீர் போல
அன்பு உடை நெஞ்சம் தாம் கலந்தனவே
-- குறுந்தொகை 40

என்தாயும் உன்தாயும் யாருக்கு யார்சொந்தம்
என்தந்தை உன்தந்தைக்கு எவ்வழி யில்பந்தம்
என்னைநீ உன்னைநான் எவ்வாறு தான்அறிந்தோம்
செம்மண்ணுள் பெய்தமழை நீர்போலச் செம்மையாய்
அன்பினுள் நம்முள்ளம் ஒன்றாய்க் கலந்தனவே



யானே ஈண்டையேனே என் நலனே
ஏனல் காவலர் கவண் ஒலி வெரீஇ
கான யானை கை விடு பசும் கழை
மீன் எறி தூண்டிலின் நிவக்கும்
கானக நாடனொடு ஆண்டு ஒழிந்தன்றே
-- குறுந்தொகை 54

மதிமட்டும் இங்கிருக்க., மீந்திருக்கும் பெண்மையோ....
கதிர்காப்பான் கூட்டும் கவண்ஒலிக்கு அஞ்சி
மதயானைக் கைவிட்ட மூங்கிலைப் போல,
புதுமீனைக் கைப்பற்றும் தூண்டிலைப் போல,
பொதிகாட்டின் வேந்தனைத் தேடும் வெடுக்கெனவே !



பூ இடைப்படினும் யாண்டு கழிந்து அன்ன
நீர் உறை மகன்றில் புணர்ச்சி போல
பிரிவு அரிது ஆகிய தண்டா காமமொடு
உடன் உயிர் போகுக தில்ல கடன் அறிந்து
இருவேம் ஆகிய உலகத்து
ஒருவேம் ஆகிய புன்மை நாம் உயற்கே
-- குறுந்தொகை 57

மலர்நடுவே ஓர்நொடியே வந்தாலும் ஆண்டு
பலபோல் உருகும்நீர் வாழ் *மகன்றில் போல ..
அரிதாய்ப் பிரிவைக் கருதும் எமக்குள்
பிரிவுவந்தால் சேர்ந்தெம் உயிர்போகும் ....இப்பிறப்பில்
ஈருயிருர் ஓருயிராய் ஆனபிறகு இவ்வுலகில்
ஓருடலாய் வாழவைக்கும் துன்பத்தை வெல்வதற்கே.

மகன்றில் = இணைபிரியாமல் வாழும் நீர்வாழ் பறவை இனம்

---



இடிக்கும் கேளிர் நும் குறை ஆக
நிறுக்கல் ஆற்றினோ நன்று-மன் தில்ல
ஞாயிறு காயும் வெவ் அறை மருங்கில்
கை இல் ஊமன் கண்ணின் காக்கும்
வெண்ணெய் உணங்கல் போல
பரந்தன்று இ நோய் நோன்று கொளற்கு அரிதே
-- குறுந்தொகை 58

இடித்துரைக்கும் நட்பே! உமக்கு முடிந்தால்.,
வெடிக்கும்எம் காமத்தை எம்விருப்பம் போல்நிறுத்து.
ஞாயிறு சுட்டெரிக்கும் வெம்பாறை உச்சியில்
வாயில்லான் கையில்லான் காவல்கீழ் உள்ள
உருகிய வெண்ணையைப் போல்-பரவும் காமம்
பொறுத்துப்பின் நீக்குவது என்பது அரிதே !

---



கடும் புனல் தொடுத்த நடுங்கு அஞர் அள்ளல்
கவிர் இதழ் அன்ன தூவி செ வாய்
இரை தேர் நாரைக்கு எவ்வம் ஆக
தூஉம் துவலை துயர் கூர் வாடையும்
வாரார் போல்வர் நம் காதலர்
-- குறுந்தொகை 103

ஆற்றின் சுழல்பல சூழ்ந்தகுளிர்ச் சூழ்நிலையில்
சேற்றில்செம் மீனுக்குக் காத்திருக்கும் வேளையதில்.....
முள்முருங்கைப் பூதோற்கும் மெல்லிறகும், கூரிய
வில்தோற்கும் செவ்வலகும் கொண்டுள்ள நாரைக்கு....
நேர்இன்னல் உண்டாக்கச் சாரலுடன் சேர்ந்தடிக்கும்,
கூர்வாடைப் போதினிலும்...வாராரோ நம்தலைவர் !
கூறவர்க்கு தோழி_நான்என் வாழ்வழிப்பேன் என்றே !!



கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவு முளவோநீ யறியும் பூவே.
-- குறுந்தொகை 2

மகரந்தம் தேன்நாடி நாளெல்லாம் தேடி ,
நுகர்ந்துண்டு , பூக்களுக்குள் வாழ்ந்து வரும்வண்டே..!
என்எண்ணம் சொல்லாமல் , கண்டதைச் சொல்வாயா ,,,
என்இணையாள் , கொள்ளும் உறவில் மயிலியல்பாள் ,
பின்வரிசைப் பல்போல் மிகநெருக்கம் கொண்டிருப்பாள் ,
பெண்ணவளின் கூந்தலைக் காட்டிலும் நன்மணம்
கொண்டது எதுவுமுண்டோ நீஅறிந்த பூவினிலே...!

---



துரை. ந. உ
vce.projects@gmail.com

# 9. குறுந்தொகையின் அடிதொட்டு புதுக்கவிதை

– யேசுராஜன்

பைம் கால் கொக்கின் புன் புறத்து அன்ன
குண்டு நீர் ஆம்பலும் கூம்பின இனியே
வந்தன்று வாழியோ மாலை
ஒரு தான் அன்றே கங்குலும் உடைத்தே
-- குறுந்தொகை 122

விடியலை நோக்கி
நகர்கிறது இந்த இரவு
கொக்கின் முதுகை யொத்த
ஆம்பலும் குவிந்து விட
விடியதே இரவே
என்கிறது மனம்
எப்போது வருவாய்

---

கொங்கு தேர் வாழ்க்கை அம் சிறைத் தும்பி!
காமம் செப்பாது, கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின், மயில் இயல்
செறி எயிற்று, அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ? நீ அறியும் பூவே?
-- குறுந்தொகை 2

தேடுதலே
வாழ்க்கையான
தேனெடுக்கும் வண்டே சொல்
ஊரினிலே நாட்டினிலே
உண்டான பூக்களிலே
என்னவளின் கூந்தலின்
நறுமணம் போல கண்டதுண்டா

நிலத்தினும் பெரிதே வானினு முயர்ந்தன்று
நீரினு மாரள வின்றே சாரற்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பொருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே.
-- குறுந்தொகை 3

நிலம் பெரிது நீர் பெரிது
அவை மூடும் வான் பெரிதென்பார்
நிதம் எந்தன் நெஞ்சிலாடும்
நிலவொத்த நின் முகம்காணார்

---

நள்ளென் றன்றே யாமஞ் சொல்லவிந்
தினிதடங் கினரே மாக்கண் முனிவின்று
நனந்தலை யுலகமுந் துஞ்சும்
ஓர்யான் மன்ற துஞ்சா தேனே.
-- குறுந்தொகை 6

ஊரும் உலகமும் உணர்விழந்து
உருத்தெரியாமல் உறங்கிபோனதொரு- சாமத்தில் நான்
உறங்கவில்லை ஏனென
சொல்லத் தெரியவில்லை

---

யாவதும் அறிகிலர் கழறுவோரே
தாய் இல் முட்டை போல உள் கிடந்து
சாயின் அல்லது பிறிது எவன் உடைத்தே
யாமை பார்ப்பின் அன்ன
காமம் காதலர் கையற விடினே
-- குறுந்தொகை 152

மெள்ள வளருது என்காதல்
ஆமைக்குஞ்சைப்போல் மெதுவா
மெல்ல முடியாமலும் முழுங்க முடியாமலும்
தவிக்குது ஊரு - நம் காதல்
அவிஞ்ச முட்டைபோலாகும்னு நெனப்பு
தெரிஞ்சே நினைச்சேன் உன்னை மச்சான்
விடிஞ்சா போகும் பனிபோல
துன்பம் வடிஞ்சே போகும் விரசால.

---




யேசுராஜன்
yesurajantpr@gmail.com

# 10. ஆதி மொழி தொல்காப்பியம் பாணினீயம் பற்றிய ஒப்பீட்டு ஆய்வு நூல் - நூல் மதிப்புரை

– சேசாத்திரி சிரீதரன்






சட்டம்பி திருவடிகள் சுவாமி (1853 - 1924) கேரளத்தில் குமுக சீர்திருத்தத்திற்கு வித்திட்ட சிறீ நாராயண குருவிற்கு குருவாய் அமைந்தவர். தமிழிலும் சமற்கிருதத்திலும் ஆழ்ந்த புலமை பெற்றவர் இவர்1915 இல் இயற்றிய மொழியியல் ஒப்பாய்வு நூல் தான் **ஆதி மொழி** என்பது. அரிதினும் அரிதாக இதுகாறும் எவரும் செய்திராத வகையில் இந்நூலில் தமிழ் சமற்கிருதம் ஆகிய மொழிகளின் முதன்மையான இலக்கண நூல்களான **தொல்காப்பியம் பாணினீயம் ஆகியவற்றை ஒப்பிட்டு** இம்மொழிகளின் அமைப்பில் உள்ள ஒற்றுமையையும் வேற்றுமையையும் சிறந்த முறையில் ஆசிரியர் எடுத்துக்காட்டியுள்ளார். இவற்றோடு நில்லாமல் தமிழ், பிராகிருதம், சமற்கிருதம் ஆகியவற்றின் தொன்மையைப் பற்றிக் கூறும் போது தமிழ்

இம்மூன்றில் மூத்த முதுமொழி என்றும் பிராகிருதம் தமிழுக்குப் பின்னது என்றும் சமற்கிருதம் பிராகிருதத்திற்கும் பிற்பட்டது என்றும் நிறுவியுள்ளார். சமற்கிருத இலக்கணத்தினும் தமிழ் இலக்கணம் பழமையானது என்று கூறுகிறார்.
https://en.wikipedia.org/wiki/Chattampi_Swamikal

176 பக்கங்கள் கொண்ட இந்நூல் வித்தியாதிராச தரும சபையால் கடந்த 31/01/2016 அன்று அவ்வை திரு நடராசன் அவர்களால் வெளியிடப்பட்டது. நான் ஆனந்த மார்க்க பிரச்சாரக சங்கத்தில் ஊழ்கம் பயின்றுவந்த நாளில் 9 ஆண்டுகள் முன்னம் அதில் உறுப்பினராக இருந்த திரு பி. சுப்பிரமணியம் பிள்ளை என்ற மலையாளி தந்த குறுநூல் ஒன்றில் இந்த சட்டம்பி திருவடிகள் இயற்றிய ஒப்பாய்வு நூல் "ஆதிபாஷா" தமிழையே ஆதிமொழி எனக் குறிப்பதாக இருந்த செய்தியால் ஈர்ப்புற்று வித்தியாதிராச தரும சபையின் பொதுச் செயலர் திரு சி.கெ. வாசுக் குட்டன் அவர்களைத் தொடர்பு கொண்டு 1998 இல் கெ. மகேசுவரன் நாயரால் மலையாளத்தில் வெளியிடப்பட்ட இந்நூலைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட வேண்டும் என்று கோரிக்கை வைத்தேன். அதைப் **பேரா இரா. மதிவாணன்** நல்ல முறையில் செய்யவல்லவர் என்று கூறி இருவருக்கும் தொடர்பை ஏற்படுத்திவைத்து சில மாதங்களில்(2007 இல்) மொழிபெயர்ப்பு முடிவடைந்தது. பல்வேறு காரணங்களால் நூல் வெளியீடு தடைப்பட்டு எமது தொடர்ந்த வற்புறுத்தலால் 2016 சனவரி இல் வெளியானது.

இந்நூல் தமிழார்வலர்கள், தமிழ் சமற்கிருதம் அறிந்த அறிஞர்கள், அயலக பல்கலையில் பயிலும் மாணவர்கள் கற்றுவிக்கும் பேராசிரியர்கள் ஆகியோருக்குப் பெரிதும் உதவியாய் இருக்கும். விலை உரூ. 180/-

**உள்ளடக்கம்**

1. தொடக்கம் - பிராரம்பம்
2. எழுத்தியல் - அட்சர நிரூபணம்
3. புணரியல் - சந்தி நிரூபணம்
4. சொல்லியல் - பத விவஸ்தா நிரூபணம்
5. பால் இயல் - லிங்க நிரூபணம்
6. எண் இயல் - வசன நிரூபணம்
7. வேற்றுமை இயல் - விபக்தி நிரூபணம்
8. அடிச்சொல் இயல் - தாது நிரூபணம்
9. தமிழ் சமற்கிருதம் ஒற்றுமை வேற்றுமைகள்
10. ஆதி மொழி - ஆதிபாஷா

**தொடக்கம்** பக்கம். 2

வீசிதரங்க நியாயம்: தொடக்கத்தில் ஒரு அலை புறப்பட்டு கரையைத் தொடுவதற்கு முன்பே அடுத்தடுத்த அலைகள் தொடர்ந்து வந்து அலையடுக்குகளாக உருவெடுக்கின்றன. அது போல் முதலில் தோன்றிய ஒரு மொழியின் விளைவாக அடுத்தடுத்து பல மொழிகள் உருவெடுக்கும் வரலாற்றுக்கு அலை அடுக்கு முறை என்பது உவமையாகிறது.

கதம்ப மூல நியாயம்: கடம்ப மரத்தின் எல்லாப் பகுதிகளிலும் ஒரு சேர மொட்டுகள் அரும்பி அவை ஒரு சேர மலரும். இதைப் போலவே ஒரு நேரத்தில் உலகின் பல்வேறு இடங்களிலும் பல்வேறு மொழிகள் தோன்றியிருக்கக் கூடும் என்பதற்கு இது உவமையாகக் கூறப்படுகிறது.

**எழுத்தியல்** பக்கம் 25 - 26:

பிராகிருதம் சமற்கிருதமயமாக்கப்படாத தனக்கே உரிய முந்து எழுத்து வடிவங்களைத் தக்க வைத்துக் கொண்டிருப்பதால் சமற்கிருதத்தைவிடப் பிராகிருதம் காலத்தால் மிக மிக முந்தையது என்பது பெறப்படுகிறது.

மேலும் சமற்கிருதம் ஒருமை இருமை பல என்னும் எண்பாகுபாடு உள்ளது. அதனை வசனத்ரையம் என்கின்றனர். ஆனால் பிராகிருதத்தில் "த்விவசனஸ்ய பஹுவசனம்" எனக் கூறப்பட்டிருப்பதால் ஒருமை பன்மை எனும் இரண்டல்லாது இருமை (த்விவசனம்) என்பது அறவே இல்லை. சமற்கிருதத்திலிருந்து பிராகிருதம் தோன்றியிருந்தால் சமற்கிருதம் ஏற்றுக் கொண்ட இருமை எண் (த்விவசனம்) இல்லாமலிருக்கக் காரணமில்லை.

**புணரியல்** பக்கம் .48

ஏனைய உலக மொழிகளில் இல்லாத சொற்புணர்ச்சி (சந்தி) இலக்கணம் தமிழிலும் சமற்கிருதத்திலும் மட்டும் காணப்படுகின்றன.

**சொல்லியல்** பக்கம் 67

சமற்கிருதத்திலுள்ள சொற்கள் யாவும் 'கிரியா தாது' எனும் வினைச் சொற்களிலிருந்து தோன்றியவை. ஆனால் முன்னொட்டுகள் பெறாத தனித்த வினைச் சொற்கள் சமற்கிருதத்தில் இல்லை.

பக்கம் 69 - 70
சமற்கிருதத்தில் எல்லாச் சொற்களும் தாதுக்கள் எனும் சொல்லடியில் தோன்றினாலும் இந்த வடிவத்தில் வினைச் சொற்கள் ஆவதில்லை. அவற்றோடு முன்னொட்டுகள், பின்னொட்டுகள் சேர்ந்தால் தான் வினை வடிவம் பெறும். தமிழில் வினைச் சொற்களுக்கு முன்னொட்டு பின்னொட்டுப் போன்றவை அறவே தேவையில்லை. இவற்றை உற்று நோக்கும்போது தமிழ் சமற்கிருதம் எனும் இரண்டு மொழிகளுக்கும் இடையே உள்ள வலுவான பெரிய வேறுபாடு தெளிவாகத் தெரிகிறது.

பக்கம் 71 சமற்கிருதம் பேசப்படும் பேச்சு மொழியாக இல்லாததாலும் பல திசைகளிலிருந்தும் சொற்கள் வந்து சேரும் வாய்ப்பு இல்லை எனக்கருதி திசைச்சொல் என்னும் வகைப்பாட்டைச் சமற்கிருத இலக்கணத்தில் சேர்க்கவில்லை எனச் சிலர் கூறுகின்றனர். எனினும் தன்சொல் பிறசொல் எனும் இருவகை அதில் இல்லை என வாதிட முடியாது.

**பால் இயல்** பக்கம் 101
சமற்கிருதத்திலுள்ள பால் வேறுபாடுகள் குழப்பமும் பிழைபாடும் கொண்டவை என்பதைச் சமற்கிரதத்தத்தில் மாபெரும் புலமையாளராகவும் சமற்கிருதத்திற்கு அதிகாரிகளாகவும் உள்ள சமற்கிருத பெரும் பண்டிதர்கள் அறியாமல் இருக்கிறார்கள்.

**எண் இயல்** பக்கம் 107
தமிழிலுள்ள உயர்திணை அஃறிணைப் பிரிவுகள் சமற்கிருதத்தில் இல்லை. இவை காலங்கடந்து தமிழில் சேர்க்கப் பட்டவை என்று கூறுவதை ஏற்க முடியாது. உயர்திணை முன்பு வகுக்கப்பட்ட பின்னரே உயர்திணை அல்லாதது எனும் அஃறிணை காரணம் கருதிப் பெயரிடப்பட்டுள்ளது. ஆதலால் தமிழிலுள்ள உயர்திணை அஃறிணை வேறுபாடு தொடக்க காலத்திலேயே உண்டாகியிருக்க வேண்டும். இதுவே உத்திக்கும் பொருந்தியுள்ளது.

பக்கம் 109
சமற்கிருதத்தில் எண்ணிக்கையை வசனம் என்றும் பிறப்பு வழி ஆண் பெண் வேறுபாட்டை லிங்கம் என்றும் வேறுபடுத்திக் காட்டியிருக்கிறார்கள். ஆனால் தமிழில் இந்த இருவகைக்கும் வேறுபாடு காட்டாமல் பொதுவாகப் பால் எனப் பெயரிட்டது ஏன்?

இவற்றுக்குக் காரணம் என்னவெனில் வடமொழியிலக்கணப்பாங்கு ஏற்படுவதற்கு முன்பே மிகு தொன்மைக் காலத்தில் தமிழிலக்கண வகைப்பாடுகள்

தோன்றிவிட்டனவாதலால் அவற்றை மாற்றமின்றித் தமிழிலிணக்க வல்லுநர் பின்பற்றி வந்திருக்கிறார்கள் என்பதேயாகும்.

**ஆதிமொழி** பக்கம் 175

பல்வேறு உயிரினங்கள் எங்குத் தோன்றினவோ அங்குதான் மாந்த இனமும் தோன்றியிருக்க முடியும். முதல் மாந்தன் எங்குத் தோன்றினானோ அங்குத்தான் உலக முதன் மொழியும் தோன்றியிருக்க முடியும். அந்த மாந்தனின் மொழிகள் அவனுக்குப் பிறகு தோன்றிய மாந்த இனத்துக்கும் தாய்மொழியாக அமைந்திருக்கும்.

இலங்கை தொடங்கிய அடுத்தடுத்துள்ள நிலப்பகுதிகள் இன்னும் திராவிட மொழிகளின் ஊற்றிடங்களாக உள்ளன. தென்னிந்திய மொழிகளுக்குத் தாயாக உள்ள தமிழே பழந்திராவிட முதல் தாய்மொழியாக இருந்திருக்கும் என்னும் உண்மை இதனால் நிலை நாட்டப்படுகிறது. இப்பகுதியிலிருந்து உலக முழுவதும் பரவிய உலகமொழிகள் அனைத்துக்கும் தமிழே தாய்மொழி என்பது உறுதிப்படுவதால் தமிழை ஆதிமொழி என்று அழைக்கலாம்.

**நூல் கிட்டும் முகவரி:**

சிறீ வித்தியாதிராச தரும சபை ,
**எண்** F - 13, BBC Westend,
9A, கே. கே. சாலை,
சாலிக்கிராமம்,
சென்னை - 600 093.
அலைபேசி: **98414 28004** (வாசுகுட்டன்)

விலை உரூ. 180/-

---



சேசாத்திரி சிரீதரன்
sseshadri69@gmail.com

# 11. தமிழகச் சிற்பிகள் வரலாறு - நூல் மதிப்புரை

– முனைவர். சுபாஷிணி

தமிழகத்தின் எல்லாப் பகுதிகளிலும் பயணிக்கும் போதும் என் மனதை வெகுவாகக் கவர்வது தமிழக கட்டுமானக் கலைகளும் சிற்பங்களும் கல்வெட்டுக்களும் தான்.

ஒரு மண்டபத்தில் ஒரு சிறப்பென்றால் இன்னொரு மண்டபத்தில் மற்றொரு சிறப்பு. ஒரு கோயிலில் ஒரு பிரமாண்டம் என்றால் இன்னொரு கோயிலில் மற்றுமொரு பிரமாண்டம். ஒரு சிற்பம் ஒரு காரணத்திற்காக தனித்துவம் வாய்ந்ததாக விளங்குவது போல மற்றொரு சிற்பம் தனக்கேயுரிய மற்றொரு தனித்துவத்துவடன் விளங்குகின்றது. ஒரு சுவரோவியம் ஒரு தன்மையத்தது என வியக்கும் வேளை மற்றொன்று இன்னொரு வகையில் சிறப்பானதாக இருக்கின்றது. ஒரு கல்வெட்டுப் பாறை இப்படியும் ஒரு வேலைப்பாடா என அதிசயிக்க வைக்கும் அதே வேளை இன்னொரு கல்வெட்டு வேறொரு வகையில் சிறப்புக்களோடு காட்சியளிக்கின்றது. இப்படி என் ஒவ்வொரு முறை தமிழகத்துக்கான வருகையின் தேடுதல்களின் போதும் என் தேடுதல்களுக்கு அலுப்பு கொடுக்கா அதே வேளை புதியனவற்றை நான் பார்த்து அறிந்து கொள்ளும் நிலைதான் ஏற்படுகின்றது. இது என் தேடுதலின் தன்மையைச் சுவாரசியமானதாகவும் ஆக்கியிருக்கின்றது. இப்படி காணக் காண அற்புதங்களாக இருக்கும் தமிழக நிலப்பரப்பின் சிற்பக்கலை, கட்டுமானக் கலையைப் பற்றி அதன் ஆரம்ப காலத் தோற்றம், படிப்படியான வளர்ச்சி, வரலாற்றுக்கு முக்கியமான சான்றுகளின் விபரங்கள் என்ற வகையில் விரிவான தகவல்களைத் தருகின்ற ஒரு நூலை அண்மையில் பார்க்கும் வாய்ப்பு கிடைத்தது. பார்த்ததுமே அதனைப் பெற்றுக் கொண்டு வாசிக்க வேண்டும் என்ற ஆவலைத் தருகின்ற நூல்.

வரலாற்று ஆய்வாளர் திரு. நடன காசிநாதன் எழுதி வாஸ்து வேத ஆய்வு நிறுவனத்தின் வெளியீடாக 2006ம் ஆண்டு இதன் முதல் பதிப்பு நூல் வெளிவந்திருக்கின்றது. இந்த நூல் உருவாக ஊக்கம் தந்தவர் தமிழகத்தின் முக்கிய சிற்பியான டாக்டர்.வை.கணபதி ஸ்தபதி அவர்கள் தான் என நூலாசிரியர் தனது முகவுரையில் அதன் காரணங்களோடு விளக்குகின்றார்.




நூலின் முன்னுரையோடு ஸ்தபதிகள் ,சிற்பிகள் பற்றிய நீண்ட அறிமுக விளக்கத்தையும் டாக்டர்.வை.கணபதி ஸ்தபதி அவர்கள் இந்த நூலில் வழங்கியிருக்கின்றார்கள். தனது விளக்கத்தில் இக்காலத்தில் ஸ்தபதிகள் என்று குறிப்பிடப்படும் கட்டிடக் கலைஞர்களும் சிற்பக் கலைஞர்களும் பற்றிய மதிப்பு என்பது குறைந்து. கொத்தனாராகவும் கூலி வேலைசெய்பவராகவும் மதிக்கப்படும் நிலை இருக்கின்றது என்று குறிப்பிடுகின்றார். இதனை வாசிக்கும் போது, ஆங்கிலத்தில் ஆர்க்கிடெக்ட் என்று சொல்லும் போது ஏற்படும் தனி உயர் மதிப்பு தமிழில் கோயில் கட்டிடக் கலைஞர் என்றோ சிற்பி என்றோ ஏன் தமிழ் மக்கள் சிந்தனையில் தோன்றவில்லை என்பதை நாம் யோசிக்கவேண்டும் என்று தோன்றாமல் இல்லை.

நூலில் நூலாசிரியரின் நுண்ணுரை, டாக்டர்.வை.கணபதி ஸ்தபதி அவர்களின் முன்னுரை அகவுரைக்கு அடுத்தார் போல பதினெட்டு தலைப்புக்களில் தமிழகச் சிற்பிகளை பற்றி ஆராய்கின்றார் நூலாசிரியர்.
அவை ...

1. குமரிகண்ட காலத்தில் சிற்பிகள்
2. ஹரப்பன் நாகரிகக் காலத்தில் சிற்பிகள்
3. வேத காலத்தில் சிற்பிகள்
4. இதிகாச, புராணக் காலங்களில் சிற்பிகள்
5. பண்டைத் தமிழ்க் கல்வெட்டுக் காலத்தில் சிற்பிகள்
6. சங்க காலத்தில் சிற்பிகள்
7. காப்பியக் காலத்தில் சிற்பிகள்
8. பல்லவர் காலத்தில் சிற்பிகள்
9. முதற்காலப் பாண்டியர் காலத்தில் சிற்பிகள்
10. சோழர் காலத்தில் சிற்பிகள்
11. பிற்காலப் பாண்டியர் காலத்தில் சிற்பிகள்
12. சம்புவராயர் காலத்தில் சிற்பிகள்
13. விசய நகர மன்னர்கள் காலத்தில் சிற்பிகள்
14. நாயக்கர் காலத்தில் சிற்பிகள்
15. மராத்தியர் காலத்தில் சிற்பிகள்
16. பாளையக்காரர்கள் காலத்தில் சிற்பிகள்
17. பிற்காலங்களில் சிற்பிகள்
18. சிற்பங்களிலும் ஓவியங்களிலும் சிற்பிகள்

என்ற பதினெட்டு தலைப்புக்களாகத் தகவல்கள் விரிகின்றன.

இந்த நூலிற்குச் சிறப்பு சேர்க்கும் விசயங்களில் ஒன்றாக மயன் பற்றிய விளக்கங்களைக் காண்கின்றேன்.

கடல்கோளால் ஆட்கொள்ளப்பட்ட குமரிகண்டத்தில் பிறந்து மயன் என்னும் ஆதி சிற்பியே தொழிற் கருவிகள், மட்கலங்கள், ஓவியங்கள்,கட்டிடங்கள் ஆகியனபற்றிய ஆரம்ப நிலை தொழில்நுட்பக் கூறுகளைத் தமிழ் மக்களுக்கு அறிமுகப் படுத்தியவராக இந்த நூலின் முதற் பகுதி விளக்குகின்றது. இதற்கு ஆதாரமாக வைசம்பாயனம் என்ற நூலை ஆதாரமாகச் சுட்டுவதுடன், இந்நூல் மயன் தான் அறிந்த தொழில் நுட்பங்களை நூல்களாக எழுதி குமரி கண்டத்தில் செயல்பட்ட முதல் சங்கத்தில் அரங்கேற்றினார் என்றும் அதில் மயன் சிற்பமாச் செந்நூல், ஓவியச் செந்நூல், மனநிலச் செந்நூல், நிலமனச் செந்நூல், விண்கலச் செந்நூல், நாட்டியச் செந்நூல், இசைக் கலைச் செந்நூல், மூலிகைச் செந்நூல், தமிழியற் செந்நூல், கணிதமாச் செந்நூல், கோட்டுருச் செந்நூல் என்ற பதினோரு நூல்களை இயற்றியது பற்றிய குறிப்பு உள்ளமையையும் சுட்டுகின்றார். இது இந்த வைசம்பாயணம் என்னும் இம்மூல நூலைத் தேடிப் பெற்று வாசிக்க வேண்டும் என்ற ஆவலைத் தூண்டுவதாக அமைகின்றது.

குமரிகண்ட மயனின் பெயரிலேயே பலர் இருந்திருக்கலாம் என்றும் அவர்களும் கட்டிடக் கலைகளில் தேர்ந்தவர்களாகவும் சிற்பக் கலை வல்லுநர்களாகவும் இருந்திருக்கலாம் என்பதை இலக்கிய இதிகாசச் சான்றுகள் சுட்டுவதையும் இந்த நூலில் காண முடிகின்றது. உதாரணமாக இன்றைக்கு ஏறக்குறைய கி.மு1000 - 700 வரை எனக் கணக்கிடப்படும் இராமாயண மயன் பற்றிய குறிப்புக்கள் இருப்பதும் இங்குக் குறிப்பிடப்படுகின்றது. மயனின் மகள் மண்டோதரி என்ற ஒரு குறிப்பும் அர்ஜூனனுக்கு மயன் கட்டிய அவை மண்டபம் பற்றியும் வருகின்ற குறிப்புக்களை அறிய முடிகின்றது. காப்பியக் காலத்தில் மணிமேகலை காப்பியத்தில் மணிமேகலை ஒரு மலர்வனத்திற்குச் சென்றபோது அங்கே மயன் பண்டைய காலத்தில் தனது நூற்குறிப்பில் உள்ள கட்டுமான மரபினை ஒத்துக் கட்டப்பெற்ற பளிங்கு மண்டபத்தில் உதயகுமாரனுக்குப் பயந்து ஒளிந்து கொண்டமையை இளங்கோவடிகள் சுட்டுவதையும் அறிய முடிகின்றது. இதே போல சிலப்பதிகாரத்திலும் மனையறம்படுத்த காதையில் மயன் உருவாக்கிய நெறிமுறையில் தயாரிக்கப்பட்ட கட்டிலில் கண்ணகியும் கோவலனும் படுத்துறங்கினர் என்ற குறிப்பும் வருவது மயன் என்ற ஆதித் தமிழ் கட்டுமான ஆசானைப் பற்றி மேலும் வலியுறுத்திச் சொல்வதாக அமைகின்றது .

கல்வெட்டுகளை என்பது மிக உயர்ந்த மிக நுணுக்கமான நெறிமுறைகளைப் பின்பற்ற வேண்டிய தேவைகளுடன் கூடிய ஒரு கலை. நமக்கு இன்று கிடைக்கின்ற நூல்களின் வழியாகச் சங்க கால கட்டுமானம் என்பது செங்கற்கட்டடங்களை அடிப்படையாகக் கொண்டது என்பதை அறிகின்றோம். இன்றைக்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்னரே செங்கல் தயாரித்து அதனைக் கொண்டு கட்டிடங்களை எழுப்பிய தமிழர் தம் தொழில் நுட்பத் திறன் வியக்க வைக்கும் ஒன்றே என்பதில் சிறிதும் சந்தேகத்திற்கிடமேதுமில்லை.

நூலாசிரியர் இந்த நூலில் வழங்கியிருக்கும் மேலும் இரண்டு சிறப்பு விடயங்களாக அமைவது கல்வெட்டுக்கள் பற்றிய விளக்கங்களும் செப்பேட்டுகளைப் பற்றிய விரிவான தகவல்களும் என்று சொல்லலாம். பண்டைய தமிழ் எழுத்துக்களான பிராமி, வட்டெழுத்து அத்துடன் சமஸ்கிருத கிரந்த எழுத்துக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள் பல உதாரணங்களாக நூலில் கையாளப்பட்டுள்ளன. இச்செப்பேடுகள் தற்சமயம் இருக்கின்ற அருங்காட்சியகங்களைப் பற்றிய தகவல்கள் இவற்றை நேரில் பார்த்து ஆராய விரும்புவோருக்கு ஆரம்ப நிலைக் குறிப்புக்கள் வழங்கும் தன்மையும் சிறப்புக்குரியது என்றே கருதுகின்றேன்.

எப்படி ஓலைச்சுவடிகள் என்றால் அவை சோதிடம் சார்ந்தவை என்ற எண்ணம் பரவலாகப்பல தமிழ் மக்கள் மத்தியில் இருக்கின்றதோ அதே போல

கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் என்றாலே அவை மன்னர்கள் வரலாற்றுத் தகவல்களாக இருக்குமோ என்ற எண்ணம் பலருக்கும் இருப்பதுண்டு. கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் தமிழ் மக்களின் சமூகம் சார்ந்த விடயங்களைப் பதிவு செய்து வைத்த ஆதாரங்களாக அமைந்திருக்கின்றன என்பதை சில ஆதாரங்களின் வழி நூலாசிரியர் விவரிக்கின்றார். அதில் உதாரணமாக வரி பற்றிய விபரங்கள், ஒரு குடும்பத்தினர் தம்மை அடிமைகளாக விற்றுக் கொண்டதற்கான சான்று செப்பேடு, கொள்ளை நிகழ்வு ஒன்றைப் பற்றிய செய்தியைப் பதிந்த செப்பேடு என்பன போன்றவற்றை குறிப்பிடலாம். இப்படி வித்தியாசமான செப்பேடுகள் விசய நகர மன்னர்கள் காலத்தில், நாயக்கர் காலத்தில், சம்புவராயர், மராத்தியர் காலங்களில் வெளியிடப்பட்ட குறிப்புக்கள் கல்வெட்டு செப்பேடு தயாரிப்பு பற்றிய தகவல் களஞ்சியமாக இந்த நூலின் தரத்தை உயர்த்துவதாக உள்ளது.

இந்த நூலின் மிக முக்கிய அங்கமாக நான் காண்பது ஒவ்வொரு அத்தியாயத்தின் பின்னும் கொடுக்கப்பட்டிருக்கும் துணை நூற் குறிப்புப் பட்டியல். இந்தப் பட்டியலில் உள்ள நூல்கள் ஆய்வு மாணவர்களுக்கும் வரலாற்றுத்தேடல் உள்ளோருக்கும் மிக உதவும் தன்மை கொண்டவை என்பதில் மாற்றுக் கருத்தே இல்லை. தச்சர்கள், பொற்கொல்லர்கள், சிற்பிகள், சித்திரக் கலைஞர்கள் ஆகியோர் தங்கள் திறத்தால் விட்டுச் சென்றவையே இன்றைய தமிழர் தம் வரலாற்றுச் சான்றுகளாக நம் கண் முன்னே திகழ்கின்றன. அழிந்து வரும் கலைகளில் ஒன்றாக இன்று சிற்பக்கலை தமிழகத்தில் சுட்டப்படுவது வேதனைக்குரிய ஒரு விடயம். பண்டைய தமிழர் கட்டுமானக் கலைகள் இக்காலச் சூழலில் பல்கலைக்கழகங்களிலும் கல்லூரிகளிலும் பாடமாக அறிமுகப்படுத்தப்படுமேயானால் அது இக்கலை அதன் சிறப்புத்தன்மை கெடாது அறிவியற் கூறுகளின் பெருமையோடு மேலும் மிளிர வாய்ப்பு ஏற்படும்.

**விலை ரூ.350**

**பிரசுரிப்பாளர்: வாஸ்து வேத ஆய்வு நிறுவனம்**

---



முனைவர். சுபாஷிணி

ksubashini@gmail.com

# 12. மாங்குளம் தமிழி கல்வெட்டுக்கள்

## – முனைவர். சுபாஷிணி



தமிழகச் சிற்பிகளும் கல்வெட்டுக் கலைஞர்களும் தமிழ் மண்ணில் விட்டுச் சென்றிருக்கும் சான்றுகள் தமிழ் தொடர்பான ஆய்வுகளுக்கு மிக முக்கியமானவையாகத் திகழ்பவை. கி.மு 6 என்ற கால நிலையிலேயே கல்வெட்டு பொறிக்கும் திறன் பெற்றோராகத் தமிழர் தொழிற்கலை அறிவு பெற்றிருந்தார்கள் என்பதற்கு இது சான்றாக அமைவது என்பதோடு இக்காலத்திற்கு முன்பே தமிழ் மொழியின் வளர்ச்சி என்பது பேச்சு, வடிவம், இலக்கணம் என்ற வகையில் வளர்ச்சி பெற்றிருந்தது என்பதற்கு மிக நல்ல சான்றாகவும் அமைகின்றது.

கி.மு.5ம் நூற்றாண்டு வாக்கில் மதுரை நகரைச் சுற்றியுள்ள குன்றுகளில் பல சமண முனிவர்கள் தங்கியிருந்தமைக்கானச் சான்றுகளை இன்றும் பாறைகளில் உள்ள படுக்கைகள், தொல் தமிழ் எழுத்துக்கள் என்பனவற்றிலிருந்து அறியமுடிகின்றது. இம்முனிவர்களை அச்சயமம் பாண்டி நாட்டை ஆண்ட பாண்டிய மன்னர்கள் ஆதரித்து, இவர்கள் தங்கவும் பள்ளிகள் அமைத்து கல்விச்சேவை புரியவும் உதவி இருக்கின்றனர். பொருள் வளம் மிக்க வணிகப்பெருமக்களும் சமண முனிவர்கள் குன்றுகளின் பாறைப்பகுதிகளில் தங்கியிருக்க வசதியை உருவாக்கிக் கொடுத்திருக்கின்றனர். அத்தகைய செய்திகளை இப்பாறைகளில் வடிக்கப்பட்டுள்ள தொல் தமிழ் எழுத்துக்களின் வழி அறிந்து கொள்ள முடிகின்றது.

மாங்குளம், மதுரையிலிருந்து ஏறக்குறைய 20கிமீ.தூரத்தில் இருக்கும் ஊர். ரோவர்ட் சீவல் என்பவர் தாம் 1882ம் ஆண்டில் இங்கிருக்கும் மாங்குளம் கல்வெட்டுக்களைக் கண்டறிந்தவர் என்ற சிறப்பினைப் பெறுபவர். கல்லில் பொறித்த எழுத்துக்களைப் பார்த்து இவை என்ன குறியீடுகளோ என்று அவர் யோசித்திருக்கக்கூடும். ஆயினும் இவை என்ன எழுத்துக்கள் என்பது கடந்த நூற்றாண்டில் தான் உறுதி செய்யப்பட்டது. தமிழகத்தில் கிடைக்கக்கூடிய சமண நெறி சார்ந்த கல்வெட்டுக்களிலேயே இந்த மாங்குளம் கல்வெட்டுக்கள் தாம் மிகப்பழமையானவை என்ற சிறப்பைப் பெறுபவை.

இம்மலையில் ஐந்து குகைப்பகுதிகள் உள்ளன. சற்றே தூரத்தில் இடைவெளி விட்டு இவை அமைந்திருக்கின்றன. கற்படுக்கைகள் உள்ள பகுதிகளில் மழை நீர் வடிய உருவாக்கப்படும் காடி வெட்டப்பட்டுள்ளது. அதன் கீழே அல்லது அருகாமையில் கல்வெட்டுக்கள் வெட்டப்பட்டுள்ளன.

நெடுஞ்செழியன் என்ற சங்ககால பாண்டிய மன்னனின் பெயர் இங்குள்ள கல்வெட்டுக்களில் இருமுறை குறிப்பிடப்படுகின்றன. அதோடு செழியன், வழுதி என்ற பாண்டிய குடிப் பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன.

இங்குள்ள கல்வெட்டுக்கள்:

1.

கணிய் நந்தஅ ஸிரிய்இ குவ் அன்கேதம்மம் இத்தாஅ
நெடுஞ்செழியன் பண அன் கடல் அன் வழுத்திப்
கொட்டு பித்தஅ பளிஇய்

2.

கணிய் நத்திய் கொடிய் அவன்

3.

கணிய் நந்தஸிரிய் குஅன்தமம் ஈதா நெடுஞ்செழியன்
ஸாலகன் இளஞ்சடிகன் தந்தைய் சடிகன் சேஇயபளிய்

4.

கணி இ நதஸிரிய்குவ(ன்) வெள் அறைய் நிகமது காவிதிஇய்
காழிதிக அந்தை அஸீதன் பிணஉ கொடுபிதோன்

5.

சந்தரிதன் கொடுபிதோன்

6.

வெள்அறை நிகமதோர் கொடி ஓர்

**(குறிப்பு: பாண்டிய நாட்டு வரலாற்று மைய வெளியீடான மாமதுரை (ஆசிரியர்கள்-பொ.இராசேந்திரன், சொ.சாந்தலிங்கம்) என்ற நூலில் உள்ள குறிப்பு மேலே வழங்கப்பட்டுள்ளன.)**

தமிழ் எழுத்துக்களோடு சமஸ்கிருத எழுத்தும் கலந்த நிலையில் இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.

தமிழ் எழுத்தின் சிறப்பு எனச் சொல்லப்படும் ***ழ*** எழுத்து வெட்டப்பட்ட பழமையான கல்வெட்டு இவைதாம் என்பது குறிப்பிடப்பட வேண்டிய ஒன்றே.

இப்பகுதியில் 2007ம் ஆண்டில் தமிழக தொல்லியல் துறையினால் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வில் செங்கற்களினால் உருவாக்கப்பட்ட கட்டிட கட்டுமானப் பகுதி ஒன்றும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. இப்பகுதியில் கூறைகளுடன் கூடிய அமைப்பாக இது உருவாக்கப்பட்டமை அறியப்பட்டது. கூறைகளுக்கு இடையே மரத்துளைகள் உருவாக்கி அதனை மரச்சட்டங்களை வைத்து இணைத்து இரும்பினால் ஆன ஆணியை கொண்டு இணைத்து இக்கூறைகள் உருவாக்கப்பட்டிருக்கலாம். இங்கு கிடைத்த வெவேறு அளவிலான பழங்கால ஆணிகள் இதனை உறுதி செய்யும் வகையில் அமைந்திருக்கின்றது.

இந்த மாங்குளம் கல்வெட்டுப் பகுதி இன்று தமிழக தொல்லியல் துறையினால் பாதுகாக்கப்படும் சின்னமாக இருக்கின்றது. மேலே பாறைக்குச் செல்லும் பாதைகள் சிறப்பாக அமைக்கப்பட்டுள்ளன. ஆனால் படுக்கைகள் இருக்கும் பகுதிகளில் இங்கு வரும் பொதுமக்கள் தங்கள் பெயர்களை எழுதி,இப்புராதனச் சின்னங்களை சிதைத்து வருகின்றனர் என்பது வேதனைக்குறிய விடயம்.
அருகாமையில் இருக்கும் குடியானவர்களின் ஆடுகள் இப்பகுதியில் மேய்வதால் ஆட்டுப்புழுக்கைகள் நடைபாதையெங்கும் நிறைந்து கிடக்கின்றன.

இப்பகுதியை சுத்தம் செய்து பாதுகாக்கும் முயற்சி மிக அவசியம்.

*குறிப்பு: மாங்குளம் பகுதியில் கட்டுரையாளர் செய்த விழியப் பதிவு யூடியூபில் [https://www.youtube.com/watch?v=2uH2fyvkLlo&feature=youtu.be](https://www.youtube.com/watch?v=2uH2fyvkLlo&feature=youtu.be) இங்குள்ளது. ஏறக்குறைய 20 நிமிடப் பதிவு இது. மிக விரிவாக டாக்டர்.சொ.சொக்கலிங்கம் அவர்கள் மாங்குளம் கல்வெட்டுக்களின் காலம், அதன் சிறப்புக்கள் ஆய்வுகள் என தகவல்கள் வழங்குகின்றார்.*

---



முனைவர். சுபாஷிணி
ksubashini@gmail.com

# 13. கடைவெண் மலைக் கோட்டு நடுகல்

## – சேசாத்திரி சிறீதரன்



படம் உதவி: Arunkumar Pankaj

இந்தச் சிலை கச்சிராப்பாளையம் அருகில் வேடியப்பன் என்ற பெயரில் வழிபடும் நடுகல் ஆகும்.
"கடைவெண் மலைக் கோட்டு வேட்டுவரு இருவாய் தொளுக் கொண்டு பட்டான் கம்பாடரு மகன் சாமிக்கல்" - by Arunkumar Pankaj

நடுகல் தரும் செய்தி கடைவெண்மலைக் கோட்டு வேட்டுவருடைய இருவாய் (மலைப்பறவை) கூட்டத்தை (தொறு) கைப்பற்றி வீரசாவடைந்த கம்பாடர் என்பானுடைய படையாள் நினைவில் எழுப்பப்பட்ட வழிபாட்டுக்கல் என்பதே. தொறு அடிமைப்படுத்திய (tamed) என்ற பொருளில் இங்கு வழங்குகிறது. ஆநிரையை இச்சொல் இக்கல்வெட்டில் குறிக்கவில்லை

இந்நடுகல் இறந்தவர் நினைவில் வழிபாட்டுக் கல்லாக வைக்கப்பட்டுள்ளதால் இறந்தவர் உட்பட எவருடைய பெயரும் இதில் குறிக்கப்படவில்லை. குறிப்பாக வேந்தர், மன்னர், அதியரைசர் அவர்க்கு சேவர் கோன் என எவர் பெயரும் இடம்பெறவில்லை. கம்பாடர் என்பது சிலம்பத்தில் வல்லவர் எனப்பொருள்படும். அது ஆள் பெயர் அல்ல என்பது தெளிவு. சிலம்பாட்டம் > கம்பாட்டம்.

இன்று காடைக் கோழி வளர்ப்பு போல வேட்டுவர் இருவாய் எனும் பறவையை உணவு முதலானவற்றுக்கு வளர்த்திருக்க வேண்டும். அதைத் தான் வழிபடுநடுகல் மறவர் தம் கூட்டத்தாரோடு சென்று கவர்ந்து வந்துள்ளார். இவ்வினையில் ஈடுபட்டபோது இந்த நடுகல் மறவர் வேடுவரின் தாக்குதலுக்கு ஆட்பட்டு இறந்துள்ளார் என்றாலும் இவருடன் சென்ற கூட்டத்தார் தம் கொள்ளைவினையில் வெற்றிபெற்றனர்.

தமிழில் சாமி என்ற சொல் தெய்வத்தைக் குறிக்கும் ஆனால் சமற்கிருதத்தில் சுவாமி தலைவன் என்று பொருள்படும். சாமி என்ற தமிழ்ச் சொல் சுவாமி என்ற சமற்கிருத சொல்லில் இருந்து தான் வந்தது என்கின்றனர். ஆனால் எளியோரின் கல்வெட்டில் சுவாமி > சாமி என்ற சமற்கிருத சொல் இடம்பெறுவது இயலாதது. ஆதலால் 7 ஆம் நூற்றாண்டின் இக்கல்வெட்டில் இச்சொல் இடம்பெறுவது "சாமி" என்ற சொல் சமற்கிருத சுவாமி என்ற சொல்லில் இருந்து வந்ததல்ல என்று தெளிவாக்குகிறது.

---



சேசாத்திரி சிரீதரன்
sseshadri69@gmail.com

# 14. சேலம் ஆத்தூர் அருகே 16 ஆம் நூற்றாண்டு கல்வெட்டு கண்டுபிடிப்பு

– பொன்.வெங்கடேசன்

**தொல்லியல் படிவம்:**
சேலம் ஆத்தூர் அருகே 16 ஆம் நூற்றாண்டு கல்வெட்டு

**கண்டுபிடித்தவர்:**
தொல்லியல் முனைவோர் திரு. ஆறகழூர் பொன்.வெங்கடேசன்

**இடம்:**
சேலம் மாவட்டம் தலைவாசலுக்கு அருகே உள்ள நத்தக்கரை கிராமம்: சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டம் தலைவாசல் அருகே உள்ள வரலாற்று புகழ் மிக்க ஊர் ஆறகளூர். இந்த ஊருக்கு வடக்கு பகுதியில் சுமார் 2 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள ஊர் நத்தக்கரை.

**கல்வெட்டு:**
நத்தக்கரையில் வசிக்கும் தலைமை ஆசிரியர் மனோகரன் என்பவரின் வீட்டுக்கு பின்புறம் உள்ள தோட்டத்தில் 85 செ.மீ நீளமும், 45 செ.மீ. அகலமும் உள்ள கற்பலகையில் இரு புறங்களிலும் 49 வரிகளில் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது

இக்கல்வெட்டு கி.பி.1585 ஆம் ஆண்டு வெட்டப்பட்டுள்ளது. சுபமஸ்து ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் என நட்சத்திர குறிப்புகளோடு இக்கல்வெட்டு ஆரம்பமாகிறது.

ஆறகளூரில் உள்ள காமநாகேஸ்வரர் கோயிலில் உள்ள பெரியநாயகிக்கு, நத்தக்கரை கிராமம் நாயக்க மன்னர்களால் ஆற்றூர் (தற்போதைய ஆத்தூர்) நட்டவாரிடம் தானமாக தாரை வார்த்து வழங்கப்பட்டது என கல்வெட்டு தெரிவிக்கிறது.

மேலும், இக்கல்வெட்டு குறிப்பிடும் தானத்தை அழிவு செய்வோர் கங்கை கரையிலே சினைப் பசுவை கொன்ற பாவத்திற்கு உள்ளாவார்கள் என கல்வெட்டு தெரிவிக்கிறது.

இக்கல்வெட்டை நாட்டவர்கள் சொல்ல ஆற்றூரை (தற்போதைய ஆத்தூர்) சேர்ந்த நாட்டு கணக்கணான காமீஸ்வரன் பொறித்துள்ளார் என்பதை இக்கல்வெட்டின் மூலம்

அறிய முடிகிறது.

தலைவாசலுக்கு கிழக்கு, நாவல்குறிச்சிக்கு தெற்கு, பெரியேரிக்கு மேற்கு, இடைப்பட்ட நத்தகரை கிராமம் என கிராமத்தின் நான்கு எல்லைகளையும் கல்வெட்டு தெரிவிக்கிறது.

11 ஆம் நூற்றாண்டு முதல் 15ஆம் நூற்றாண்டு வரை ஆறகளூர் மகதை நாடு என்ற குறுநில நாட்டின் தலைநகராய் இருந்தது.

மூன்றாம் குலோத்துங்க சோழனின் தளபதியாய் இருந்த பொன் பரப்பின வாணகோவரையன் என்பவர் ஆறகளூரை தலைநகராக கொண்டு ஆட்சி புரிந்து வந்துள்ளார். சோழர்கள், பாண்டியர்கள், விஜயநகர பேரரசு, நாயக்கர்கள் கீழ் ஆட்சி நடந்துள்ளது.

எனவே, ஆறகளூரை சுற்றி உள்ள பகுதிகளில் இன்னும் புதிய கல்வெட்டுக்கள் கிடைக்க வாய்ப்புள்ளது.

**ஆய்வாளர்கள்:**
கல்வெட்டு ஆய்வாளர்கள் விழுப்புரம் வீரராகவன், மங்கை வீரராகவன், பொன்.வெங்கடேசன் ஆகியோர் அடங்கிய குழு இந்த கல்வெட்டை ஆய்வு செய்தது

**படங்கள்:**



# 15. ஆலத்தூர் - சமணக்கோயில்

– து.சுந்தரம்

**ஆலத்தூர் - அமைவிடம்:**

கோவை மாவட்டம் அன்னூர் அருகே மொண்டிபாளையம் என்று ஓர் ஊர் அமைந்துள்ளது. அவ்வூரில் உள்ள பெருமாள் கோயிலும் அங்கு ஆண்டுதோறும் நடக்கும் தீமிதித் திருவிழாவும் இம்மாவட்டப்பகுதியில் பேர் பெற்றவை. (கோவைப்பகுதியில் தீ மிதிக்கும் கோயிற்சடங்கு, "குண்டம்" என மக்கள் வழக்கில் அழைக்கப்படுகிறது. குண்டம் என்பதற்குக் குழி என்பது பொருள். எனவே நெருப்புக்குழியை மக்கள் குண்டம் என அழைப்பது முற்றிலும் பொருந்தும். கோயிலோடு தொடர்புபடுத்தும்போது அதுவே, "பூக்குழி"என்றாகிறது.) சிறப்புப் பெற்ற மொண்டிபாளையத்துக்கு அருகில் இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் ஒரு சிற்றூர் உண்டு.

**சமணக்கோயில் கண்டுபிடிப்பு:**

**வெளியே அறியப்படாத அச்சிற்றூர், ஒரு நாளில் வரலாற்று வெளிச்சம் பெற்றது. காரணம் அங்கே ஒரு சமணக்கோயில் கண்டுபிடிக்கப்பட்டது. அவ்வூர்தான் ஆலத்தூர். கண்டுபிடித்தவர், கோவை மாவட்டம் அவிநாசியைச் சேர்ந்த தமிழ்ப்பேராசிரியர் மா.கணேசனார் ஆவார். இவர், கோவை மாவட்டக் கல்வெட்டுகளை முதன்முதலில் தொகுத்து நூலாக வெளியிட்டவர்.** (அதன்பிறகு, 2006-ஆம் ஆண்டுதான், தொல்லியல் துறையின் "கோயமுத்தூர் மாவட்டக் கல்வெட்டுகள்" நூல் வெளியானது.) முனைவர் பட்டத்துக்கான ஆய்வில் ஈடுபட்டிருந்தபோது 1980-82-ஆம் ஆண்டுக் கால கட்டத்தில் அவர் இக்கோயிலைக் கண்டறிந்தார். அவர் பார்க்கும்போது கோயில் மிகச்சிதைந்த நிலையில் இருந்தது. கோயிலின் முன் வாசலின் கதவு, நிறைய வேலைப்பாடுகளோடு அழகுறக் காணப்பட்டது. கோயிலின் தென்புறமுள்ள ஒரு குழியில் இரண்டு அடி உயரமுள்ள ஒரு சிலை புதைந்து கிடந்தது. சிலை பார்ப்பதற்கு அழகாக இருந்தது. அது ஒரு தீர்த்தங்கரர் சிற்பம். (பின்னாளில் இந்தத் தீர்த்தங்கரர் சிற்பம் தோண்டியெடுக்கப்பட்டுக் கோவை அகழ்வைப்பகத்தில் வைக்கப்பட்டது.) கோயிலில், நான்கு வட்டெழுத்துக் கல்வெட்டுகளும் இரண்டு தமிழ்க் கல்வெட்டுகளும் இருந்தன. அவர் தம் ஆய்வில் கண்டறிந்த செய்திகள் வருமாறு:

**"கி.பி.9-ஆம் நூற்றாண்டைச்சேர்ந்த அச்சமணக்கோயில், ஒரு சமணப்பள்ளியாகவும் இயங்கிவந்தது. இங்கு எழுந்தருளியிருந்தவர் ஒரு சமணத்தீர்த்தங்கரர் ஆவார். ஒன்பதாம் நூற்றாண்டில் கொங்குநாட்டில் சமணசமயம் சிறந்து விளங்கியது. 12-ஆம்**

நூற்றாண்டில் வாழ்ந்த கொங்குச் சோழனாகிய குலோத்துங்கர், இந்த ஊரை அவிநாசி சிவன் கோயிலுக்குத் தானமாக வழங்கியுள்ளார். அக்காலத்தில், கொங்குநாட்டில் சமணர்களுக்கும் சைவர்களுக்கும் பெரும் போராட்டம் நடந்துள்ளது. சைவர்கள், மன்ன்ன் துணையோடு சமணப்பள்ளிகளை இடித்து அழித்திருக்கலாம். சில சமணப்பள்ளிகள் சிவன் கோவில்களாக மாற்றப்பட்டன. சமணப்பள்ளிகள் சிவன்கோவில்களாக மாறியுள்ளதை வரலாற்று அறிஞர் சி.எம். இராமச்சந்திரன் செட்டியார் 'கொங்குநாடும் சமணமும்' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்."

**அவிநாசி சிவன்கோவிலும்-ஆலத்தூர் சமணக்கோவிலும்:**

மேலே குறிப்பிட்ட கண்டுபிடிப்பு, ஆய்வு ஆகியவற்றுக்குப் பின்னர் வேறொரு ஆய்வு நிகழ்வில், அவிநாசியிலுள்ள அவிநாசிலிங்கேசுவர்ர் கோயில் கல்வெட்டொன்றை ஆய்வுசெய்து பேராசிரியர் கணேசனார் வெளியிட்ட செய்திகள் பின்வருமாறு:

"பண்டைய காலத்தில் கோயில்களே வழக்குமன்றங்களாகத் திகழ்ந்தன என்பதற்கு நமது கோயில்களில் காணப்படும் கல்வெட்டுகளில் சான்றுகள் உள்ளன. அவிநாசிலிங்கேசுவரர் கோயிலில் உள்ள கல்வெட்டிலும், ஆலத்தூர் சமணக்கோயிலில் உள்ள கல்வெட்டிலும், அக்கோயில்களே வழக்குமன்றங்களாகத் திகழ்ந்தன என்பதைத் தெளிவுபடுத்தும் விதமான செய்திகள் உள்ளன.

திருப்பணிக்கு வரிப்பணம்.

கொங்குச்சோழமன்னன் திரிபுவனச்சக்கரவர்த்தி குலோத்துங்க சோழதேவன் தனது நான்காம் ஆட்சியாண்டில் (கி.பி.1200) தற்போதைய ஆலத்தூரான நிலைமை அழகியசோழ நல்லூரிலும் மற்றும் அதன் எல்லைகளிலும் வசூலிக்கப்படுகிற வருவாய்களான நத்தவரி, மன்றுபாடு, தெண்டக்குற்றம் முதலியவற்றை அவிநாசிலிங்கேசுவரர்க்கு அமுதுபடிக்காகவும், திருப்பணிச் செலவுகளுக்காகவும் வழங்கியதாக அவிநாசிக் கல்வெட்டில் செதுக்கிவைத்துள்ளான்.

அதேசமயம் ஆலத்தூரில் உள்ள வீரசங்காதப்பெரும்பள்ளியின் கருவறையின் முன்மண்டப மேற்குச்சுவரில் ஒய்சள அரசன் வீரவல்லாளன் (கி.பி. 1332) செதுக்கிவைத்துள்ள கல்வெட்டில், ஆலத்தூரிலும் அதைச்சுற்றியுள்ள எல்லைகளிலும் வரும் வருவாய்களை இந்த ஊரில் உள்ள அணியாது அழகியாராகிய தீர்த்தங்கரருக்கு கி.பி.9-ஆம் நூற்றாண்டின் சோழ மன்னன் வழங்கியதாக் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆறுநாட்டார் சபை.

இந்த இரு கல்வெட்டுகளிலும் வெவ்வேறு விதமான கருத்துகள் வெட்டிவைக்கப்பட்டிருந்ததால் ஆலத்தூரில் வருவாயை யார் வசூலிப்பது என்பதில் சிக்கல் ஏற்பட்ட்து. எனவே, ஆலத்தூர் சமணப்பள்ளியைச் சேர்ந்தவர்களும், அவிநாசிலிங்கேசுவரர் கோயிலைச் சேர்ந்தவர்களும் சிக்கலைத் தீர்ப்பதற்காக 'ஆறுநாட்டார் சபை' என்னும் அறங்கூறும் அவையத்தாரை நாடினார்கள். பேரூர்நாடு,

**வடபரிசாரநாடு, வீரசோழவளநாடு, ஐங்கரைநாடு, குறுப்புநாடு, நாலூர்ப்பற்றுநாடு என்ற ஆறு நாடுகளைச்சேர்ந்த சபையே ஆறுநாட்டார் சபையாகும். இவ்வழக்கு சமணம், சைவம் ஆகிய இரு சமயக் கோவில்களைப்பற்றியது என்பதை மனதில்கொண்டு ஆறூநாட்டார் சபை ஆய்வுகளை மேற்கொண்ட்து. இரு கோவில்களும் வடபரிசாரநாட்டைச் சேர்ந்தவை என்பதையும், தானம் செய்யப்பட்ட ஆலத்தூரையும் அதன் எல்லைகளையும் ஆய்வு செய்த்தோடு இரண்டு கல்வெட்டுகளின் உண்மைத் தன்மைகளையும் ஆராய்ந்து தீர்ப்பு வழங்கினார்கள்.**

தீர்ப்பு.

**அந்தத் தீர்ப்பில், ஆலத்தூர் மற்றும் அதன் எல்லைப்பகுதிகளில் வரும் வருவாய் இவ்விரு சமயக்கோவில்களுக்கும் பொதுவானது என்றும், ஆலத்தூரின் தெற்குப்பகுதித் தெருவும், சமணக்கோயிலும், அதைச்சுற்றியுள்ள சமணர் குடியிருப்புகளும் சமணதேவருக்குச் சொந்தமானது என்றும், மற்ற பகுதிகள் அனைத்தும் அவிநாசிலிங்கேசுவரருக்குச் சொந்தமானது என்றும் தீர்ப்பு வழங்கினார்கள். தீர்ப்பின் முடிவில் ஆறுநாட்டவரோம் என்று எழுதிக் கையெழுத்திட்டுள்ளனர். ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகளுக்கு முன்பே சான்றோர்கள் வழங்கிய தீர்ப்பு நம்மைப் பெரிதும் வியப்பில் ஆழ்த்துகிறது."**

இத்தகைய வரலாற்றுப் பின்புலத்தைக்கொண்ட ஆலத்தூர் சமணக்கோயிலையும் கல்வெட்டுகளையும் காணக் கட்டுரையாசிரியர் 2012-ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதம் சென்றபோது கண்டு உணர்ந்தவை இங்கே பகிர்ந்துகொள்ளப்படுகின்றன.

**கோயில் அமைவிடம்:**

சமணக்கோயில் எனினும், நீண்ட காலமாகச் சிவன்கோவிலாகவே மக்களால் கருதப்பட்ட சிவன்கோயிலுக்கு எப்படிச் செல்வது என ஒரு சிலரிடம் கேட்டபோது சரியான வழி புலப்படவில்லை. பாழடைந்த கோயில் என்னும் அளவில் ஊர் மக்களுக்கு அக்கோயில் அறிமுகமாயுள்ளது. ஒருவாறு, ஒரு பாதை காண்பிக்கப்பட அப்பாதையில் செல்ல நுழைந்தால் வளர்ந்து நின்ற முள்மரங்கள் போகவிடாது தடுத்தன. பின்னர், சரியான வழி என்று ஒருவர் சொல்ல, அவ்வூரின் ஒரு வீதியிலிருந்த, உடையார் வீட்டிற்குச் சென்று வழி கேட்டேன். வீட்டுக்குடையவர், மண்ணுடையார் என்னும் தொழிற்பிரிவினரான வேட்கோவர் ஆவார். உள்ளே நுழைந்ததும், ஆங்காங்கே மண் சட்டிகள், பானைகள், அடுப்புகள் எனப் பல மட்கலன்கள். வீட்டுக்குடையவர் வீட்டுக்குள் அழைத்துச் சென்று வீட்டின் பின்புறமுள்ள புறக்கடையைக் காண்பித்தார். வீட்டின் தொழுவமாகப் பயன்பாட்டில் இருக்கும் அந்த இடத்தில் மாடுகள், மாட்டுச்சாணம், வைக்கோல் பொதிகள், உடைந்த சட்டிபானைகள், காய்ந்த மரக்கழிகள், காய்ந்த பனை,தென்னை ஓலை மட்டைகள், குப்பை,கூலங்கள் புடை சூழ, முள்மரங்களினூடே ஏதோ ஒரு கட்டுமானம் தெரிந்தது. அருகில் சென்று பார்த்தபின்னரே கோயிலின் சுவர்களும், கூரைப்பகுதியின் கற்களும் வெளிப்பட்டன.

கட்டுமானத்தின் முன்புறப்பகுதி வழியே உள்ளே நுழைந்து சென்றதும் காணப்பட்டது, கருவறையை அடுத்த முன்மண்டபம். அதற்கு அப்பால், கருவறையைக் காணோம். கருவறையின் நுழைவாயில் நிலைக்கால்களோடு இருந்தது. கருவறை முற்றிலும் அழிந்து இருந்த இடம் தெரியாமல் மேடிட்டுக் கிடந்தது. கட்டுமானக்கற்கள் அங்கொன்றும் இங்கொன்றும் எனச் சிதைந்த தோற்றத்தில் இருந்தன. முன்மண்டபச் சுவர்களில் ஆங்காங்கே கற்கள் பெயர்ந்து, மேற்கூரையும், தூண்களும் சிதைந்து காணப்பட்டன. முன்னரே சொன்னதுபோல், கோயிலைச்சுற்றிலும் முள்மரங்களும், புதர்ச்செடிகளும் மூடிப் பாழுங்கோயிலாகத் தெரிந்த தோற்றத்தைக்கண்டு, வரலாறு பேசும் அரிய கல்வெட்டுகளைத் தாங்கி நிற்கும் ஒரு கோயிலுக்கு இதுதான் இறுதிக்காலமோ என்று மனம் துன்புற்றது.

**சமணமதத்தின் பழமைச் சின்னம்:**

ஆலத்தூரே ஒரு வரலாற்றுப்பின்னணி கொண்ட ஊராகும். பழங்காலத்திலேயே, கோவைப்பகுதியிலிருந்து கருநாடகத்துக்குச் செல்லும் வணிக வழியில் இவ்வூர் இருந்துள்ளது. அக்காலத்தில் வணிகர்கள் பெரும்பாலும் சமண சமயத்தைச் சார்ந்தவர்களாக இருந்த காரணத்தால், சமண வணிகர்கள் இக்கோயிலைக் கட்டியிருக்கக்கூடும் என்றொரு கருத்து நிலவுகிறது. இக்கோயில் கல்வெட்டில், கோயிலானது **“வீரசங்காதப்பெரும்பள்ளி”** என அழைக்கப்படுகிறது. **“வீரசங்கம்” என்னும் ஜைனச் சங்கம், விழுப்புரம் மாவட்டம் திருநறுங்கொண்டை என்னும் ஊரில் தொடங்கப்பட்டு செயல்பட்டுவந்துள்ளது என்பது வரலாற்றுக்குறிப்பு. அந்த வீரசங்கத்தைச் சேர்ந்தவர்களால் கட்டப்பட்டதால் வீரசங்காதப்பெரும்பள்ளி என அழைக்கப்பட்டிருக்கலாம்.**

**கல்வெட்டுகள்:**

கொங்குநாட்டை ஆண்ட கொங்குச் சோழர்களில் முதலாம் அரசன் கோநாட்டான் வீரசோழன் ஆவான். இவனது ஆட்சிக்காலம் கி.பி. 942-980 ஆகும். கோநாட்டான் வீரசோழனின் முப்பதேழாம் ஆட்சியாண்டில் (கி.பி. 979) செதுக்கப்பட்ட ஒரு கல்வெட்டு இக்கோயிலில் இருந்துள்ளது. (கோயிலின் வாசல் கல்லில் செதுக்கப்பட்ட இக்கல்வெட்டு தற்போது கோவை அகழ்வைப்பகத்தில் வைக்கப்பட்டுள்ளது. எனவே, **இக்கோயில் ஆயிரம் ஆண்டுப்பழமை பெற்றது எனத் தெளியலாம். இக்கல்வெட்டின் இன்னொரு சிறப்பு, இது “வட்டெழுத்து”என்னும் வகையைச் சேர்ந்த தமிழ் எழுத்தால் பொறிக்கப்பட்டுள்ளதாகும்**.மற்றுமொரு கல்வெட்டு - இதுவும் வட்டெழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது - சேர அரசர் ஒருவரின் மனைவியான வானவன்மாதேவி சிற்றாச்சர் என்பவர் இந்த ஜைனக்கோயிலைப் புதுப்பித்தார் என்னும் செய்தியைத் தெரிவிக்கிறது.
(”புதுப்பித்தார்” என்பதைக் **கல்வெட்டு ”புதுக்குவித்தார்” என்று குறிப்பிடுகிறது**.)

இவ்வரசியார், கருநாடகத்தைச் சேர்ந்த சிந்தரையர் மகள் என்னும் குறிப்பும் இக்கல்வெட்டில் வருவது, அக்காலத்தில் அரசர்களிடையே இருந்த மண உறவு பற்றிய செய்திகளை அறிந்துகொள்ள உதவுகிறது. இக்கல்வெட்டில், **ஆலத்தூர் அடிகள் பள்ளி** என்றொரு தொடர் வருகிறது. இது, வீரசங்காதப்பெரும்பள்ளி என்னும் பெயருடைய பள்ளி, மக்கள் வழக்கில் சுருக்கமாக ஆலத்தூர் அடிகள் பள்ளி என வழங்கியதைச் சுட்டுகிறது. **"அடிகள்"**என்னும் சொல் அங்கே நோக்கத்தக்கது. துறவிகளுக்குச் சமணர் நடுவில் வழங்கிய அருமையானதொரு தமிழ்ச் சொல் இந்த **"அடிகள்"**.சமணத்துறவியரையும், சமணப்பெரியாரையும் "அடிகள்" என்னும் சொல்லாலும், **"குரவர்"** என்னும் சொல்லாலும் அழைத்தனர். ("**குரத்தி" என்பது பெண்பால் பெயர்) இந்த மரபே, சைவ சமயத்திலும் பின்பற்றப்பட்டது போலும்! இல்லையெனில் நாயன்மார் நால்வரைச் சைவ சமயக்குரவர் நால்வர்** என்று அழைத்திருப்பரா? (அப்பூதியடிகள் என்னும் பெயரையும் இங்கு நினைவில் கொள்க.) **"அடிகள்" என்னும் சொல் உயர்ந்தோரைக் குறிப்பதாலேயே, தமிழ்த்தென்றல் திரு.வி.க. அவர்கள், மகாத்மா காந்தியைக் "காந்தியடிகள்" என அழைத்தார் எனக்கொள்ளலாம்**.மற்றுமொரு கல்வெட்டு, அர்த்தபுயங்க தேவர் என்பவர் மண்டபம் அமைத்துக்கொடுத்ததைச் சொல்கிறது. இன்னொரு கல்வெட்டு, கோவில் கதவுநிலை சமைப்பித்ததைக் கூறுகிறது. கொங்குச்சோழன் குலோத்துங்கன், ஒய்சள அரசன் வீரவல்லாளன் ஆகியோரின் கல்வெட்டுகள் பற்றி மேலே பேராசிரியர் மா.கணேசனாரது குறிப்புகளில் பார்த்தோம். வீரவல்லாளன் கல்வெட்டில், கோயிலில் எழுதருளியிருந்த அமணதேவர் (தீர்த்தங்கரர்),"அணிஆதழகிய நாயனார்" எனக்குறிப்பிடப்படுகிறார். திக்கு (திசை) ஒன்றைத்தவிர்த்து வேறு ஆடை அணியாத அமணதேவரை அழகான தமிழ்ச் சொல் கொண்டு "அணிஆதழகிய நாயனார்" எனக்கூறுவது சிறப்பினும் சிறப்பு.

இவ்வாறாக, மொத்தம் ஆறுகல்வெட்டுகள் இக்கோவிலில் உள்ளன. பெரும்பாலானவை, முற்றிலும் சிதையாமல் இருப்பதால், தொன்மைச் சிறப்புள்ள கல்வெட்டுகளையும், கல்வெட்டுகள் அடங்கியுள்ள மண்டபச் சுவர்களையும் பாதுகாக்கவேண்டிய கடமை அரசுக்கும், தொல்லியல் துறைக்கும் மிக உண்டு.

**கல்வெட்டுகளின் பாடங்களும் சில விளக்கங்களும்:**

1. **கோநாட்டான் வீரசோழன் கல்வெட்டு** :
   கல்வெட்டுப்பாடம்: (தொல்லியல்துறையின் நூலிலிருந்து)

1. **ஸ்வஸ்திஶ்ரீ கோநாட்டான் வீ**
2. **ர சோழப்பெருமாநடிகளுக்கு திரு**
3. **வெழுத்திட்டுச் செல்லாநின்ற யாண்டு முப்**

4. பத்தேழாவது ஆனித்திங்கள் முதல் ஆளுடை
5. யார் வீரசங்காதப் பெரும்பள்ளி ....யி..
6. ..... ப ..... த்த ....... நியாயத்தார்தம்......
7. து....லினசெ.....ளிநால்..... திங்கள்ளி
8. மு ழெயும் முக .........
9. ........ யான் வழி ஏழெச்சம் ஒழியாமல் அறுவான்

கோநாட்டான் வீரசோழன் கல்வெட்டு



**கோநாட்டான் வீரசோழன் கல்வெட்டுவட்டெழுத்தில்**

**கல்வெட்டுப்பாடம் - பார்வைப்படி (ஒரு சில வரிகள்)**

இன்றைய வரிவடிவில்:

ஸ்வஸ்திஸ்ரீ கோநாட்
ர சோழப்பெருமாநடிக
வெழுத்தி டுச் செல்லாநி யா முப்
த்தே வது ஆனித்திங் மு ல்
ம்பள்ளி ....யி..
............நி யத்தார்

கருவறை வாசல்கால் கல்வெட்டு (வட்டெழுத்தில்)



கல்வெட்டுப்பாடம்: (தொல்லியல்துறையின் நூலிலிருந்து)

1. பெங்கல்
2. லூர் வண்ணா
3. ன் நீலன்
4. செல்லன்
5. மணவாட்டி
6. காவஞ்சாத்தி
7. யையும் ம

8. கள் செல்லங்
9. கணத்தியையும்
10. சார்த்தி
11. நாட்டுவித்த
12. கல்நிலை

கருவறை வாசல்கால் கல்வெட்டு (வட்டெழுத்தில்)
கல்வெட்டுப்பாடம் - பார்வைப்படி (ஒரு சில வரிகள்)



இன்றைய வரிவடிவில்:

1. பொன்கல்ல்
2. லூர் வண்ணா
3. ன் நீல
4. செல்லன்
5. மணவாட்டி

6. காவஞ்சாத்தி
7. யையும் மக
8. ள் செல்ல
9. கணத்தி
10. ம்சாத்

**குறிப்பு:**

வரி 1 துறை நூலில் "பெங்கல்" எனப் படிக்கப்பட்டுள்ளது. ஆனால், கல்வெட்டில் "பொன்கல்ல்" என்றுள்ளது.

வரி 7 துறை நூலில் "யையும் ம" எனப் படிக்கப்பட்டுள்ளது. "க" எழுத்து அடுத்தவரியில் சேர்க்கப்பட்டுள்ளது. ஆனால், கல்வெட்டில் "யையும் மக" என்றுள்ளது.

**கருவறைச்சுவர்க்கல்வெட்டு - அணிஆதழகிய நாயனார் இடம்பெறும் கல்வெட்டு**



**கல்வெட்டுப்பாடம்:** (தொல்லியல்துறையின் நூலிலிருந்து)

1. கீரச வருஷத்து ஆடி மாதம் 2ஆம் தியதி தெ
2. ண்ணாயக்கர் கோட்டைக்குத்தெற்கும்
3. ஆறுநாட்டு நாட்டவரோம் வடப
4. ரிசாரநாட்டு ஆலத்தூர் அமண
5. தேவர் அணி ஆதழகிய நாயனாற்கும்

6. புக்கொளியூர் அவிநாசி ஆளுடையாற்கு
7. ம் தன்மசாதனம் பண்ணி குடுத்த பரி
8. சாவது இந்த ஆலத்தூ முழுதும்

**கருவறைச்சுவர்க்கல்வெட்டு - அணிஆதழகிய நாயனார்**

**இடம்பெறும் கல்வெட்டு - பார்வைப்படியில் சில வரிகள்**



இன்றைய வரிவடிவில்:

1. ருஷத்து ஆடி மா
2. கர் கோட்டை
3. டு நாட்டவ
4. ட்டு ஆலத்தூர்
5. அணி ஆதழகிய நாய
6. யூர் அவிநாசி ஆ
7. சாதனம் பண்ணி குடு
8. ஆலத்தூ மு(ழு)தும்

வழக்குமன்றத் தீர்ப்புகூறும் கல்வெட்டுப்பாடம்:

1. ஸ்வஸ்திஶ்ரீ வீரவல்லாள தேவர்க்கு
2. மேல் செல்லாநின்ற ஆங்
3. கீரச வருஷத்து ஆடிமாதம் 2ஆம் டியதி தெ
4. ண்ஆயக்கர் கோட்டைக்குத் தெற்கும்

5. ஆறுநாட்டவரோம் வடப
6. ரிசார நாட்டு ஆலத்தூர் அமண
7. தேவர் அணிஆதழகிய நாயனாற்க்கும்
8. புக்கொளியூர் அவிநாசி ஆளுடையாற்க்கு
9. ம் தன்மசாதனம் பண்ணிக் குடுத்த பரி
10. சாவது இந்த ஆலத்தூர் முழுதும் அவி
11. நாசி ஆளுடையார்க்கு திரிபுவனச்சக்
12. கரவர்த்தி குடுத்தான் என்றும் அணியா
13. தழகியார்க்கு சேரமான் சக்கரவர்த்தி குடுத்தார்
14. என்றும் இரண்டு கோயில் தானதரும்
15. தேவர் சிரீதனமும் சோமப்பருக்கும்
16. கணி ஸ்ரீயக்கி உடையார்முன்பும்
17. நாட்டார் முன்பு முறபட்டு இரண்டு சா
18. தனமும் காட்டுகையில் இரண்டு சா
19. தனமும் பார்த்த அளவில் இரண்டும் பூ
20. ர்வ சாதனம் ஆனபடிஆலே இரண்
21. டு கோயிலுக்கும் பொதுவாகு இந்த ஊ
22. ர் தெற்கில் தெருவும் இறை இறுப்பு கீழை கு
23. டி சூழும் அமணதேவற்கும் இம்மருவாதி பிற
24. வும் திருமலையில் வெட்டு
25. வித்துக் குடுத்தமைக்கு இதுவே சாதனமா
26. கவும் அறுதிபியெர் சாதனமா
27. வதாக கடவதல்ல ஆகவும் இ
28. துக்கு இருபாலாக பிரித்து குடுத்தோம்
29. ஆறுநாட்டவரோம் அமணதே
30. வர் அணிஆதழகிய நாயநார் இந்த தன்மம் விலக்கினவன்
31. ஏழெச்சம் அறுவான் ஸ்ரீ ஜிநான்ம ரகைக்ஷ

முடிவுரை:

தமிழகத்தில் ஏறத்தாழ 150 ஊர்களில் ஜைனக்கல்வெட்டுகளும், 20-25 ஊர்களில் ஜைனக்கோவில்களும் உள்ள நிலையில், இவையனைத்தும் சிதையாமல் உள்ளன என்று சொல்வதற்கில்லை. எஞ்சியுள்ள இக்கோயில்களில் பல சிதைந்தும், பல,

புதுப்பிக்க முடியும் என்ற நிலையிலும் இருக்கக்கூடும். அந்தவகையில், ஆலத்தூர் ஜைனக்கோயிலின் இப்போதுள்ள முன்மண்டபம் ஒரு சில அடிப்படைப்பணிகள் மூலமாகவே புதுப்பிக்கப்பட்டுப் பாதுகாக்கப்படும் உடன்பாடான சூழ்நிலையே தற்போது காணப்படுகிறது.

இத்தகு சிறப்பையும், பாரம்பரியப் பெருமையையும், வரலாற்றுப்பதிவையும் பெற்ற ஜைன மதத்தின் தொன்மை எச்சங்களையும், சின்னங்களையும் பாதுகாக்கத் தொல்லியல் ஆர்வலர்களோடு துணை நின்று செயல்பட ஜைன அன்பர்களும் கடமையுணர்வோடு இணைவார்கள் என்னும் நம்பிக்கையும் தோன்றுகிறது. அரசு, தொல்லியல்துறை, தொல்லியல் ஆர்வலர்கள், செல்வம் பெற்ற புரவலர்கள், ஊர்மக்கள், ஜைன அன்பர்கள் என அனைவரையும் ஒருங்கிணைக்க வல்ல வழி யாது அல்லது அமைப்பினர் யார் என்பது பெரிய கேள்வி.

**குறிப்பு** : கட்டுரை ஆசிரியர், 2012-ஆம் ஆண்டில் ஆலத்தூர் சென்றபோது காணப்பட்ட கோயிலின் சிதைந்த நிலை, மீண்டும் 2015-ஆம் ஆண்டு ஜூன் மாதம் சென்றபோது பின்னும் பாழ் பட்டுக் காணப்பட்டது. ஒளிப்படங்கள் சான்று பகரும். 2012-இல் கோயில் சுவர்களை நெருங்கிக் கல்வெட்டுகளை ஒளிப்படம் எடுக்கும் சூழ்நிலை இருந்தது. 2015-இல், அச்சூழ்நிலைகூட இல்லை. புதர் மண்டியிருந்ததால், இம்முறை கல்வெட்டுப்படங்களை எடுக்க இயலவில்லை.

2012-ஆம் ஆண்டு - கோயிலின் நிலை



## 2015-ஆம் ஆண்டு - கோயிலின் நிலை











சமர்ப்பணம்:

கோயிலை வரலாற்றுலகுக்கு வெளிக்கொணர்ந்த
மறைந்த அவிநாசி கிழார் - கல்வெட்டுக்காவலர்
முனைவர் மா.கணேசன் அவர்களுக்கு.

---



து.சுந்தரம்

கல்வெட்டு ஆராய்ச்சியாளர் கோவை.

doraisundaram18@gmail.com

அலை பேசி : 9444939156

# 16. பெரியகுயிலி

## – து.சுந்தரம்

கோவைக்கருகிலுள்ள ஒரு சிற்றூர் பெரிய குயிலி. அவ்வூரில் இருக்கும் பூசையாளர் சுப்பிரமணியம் என்பவர் அண்மையில் எனக்கு அறிமுகமானார். அவர், அவ்வூரில் அமைந்துள்ள குயிலியம்மன் கோவில் பூசைப்பொறுப்பை ஏற்றுக்கொண்டுள்ளதோடல்லாமல் அக்கோயிலைப் புதுப்பித்துக்கட்டும் திருப்பணியில் உழைப்பு மற்றும் பொருள் (செல்வம்) ஆகியவற்றைக் கொடையாகத் தந்தவர். கல்வெட்டுகள் கிடைக்கக் கூடிய இடங்கள் என நான் கருதித் தேர்வு செய்து தேடலை மேற்கொள்ளுகின்ற இடங்களில் ஒன்றாய்ப் பெரியகுயிலியும் அமையவே, அவரிடம் தொடர்புகொண்டு அவ்வூர் மற்றும் அதன் சுற்றுப்பகுதியில் கல்வெட்டுகள், பழஞ்சிற்பங்கள் போன்ற தொன்மைத் தடயங்கள் உள்ளனவா எனக் கேட்டிருந்தேன். அத்தகு இடங்கள் ஒரு சில காணப்படுவதாக அவர் கூறியதால் 9-02-2016 அன்று வரலாற்று ஆர்வலர்களான நண்பர்கள் திரு. மீனாட்சிசுந்தரம், திரு.ஜெயசங்கர் ஆகியோருடன் அங்கு சென்றேன்.

தொல்லியல் நோக்கில் அமைந்த ஒரு பயணம். கல்வெட்டுகளில் ஒரு தொடர் பயின்றுவருவதைப் பார்க்கலாம். அத்தொடர், “விளையினும் விளையாதொழியினும்” என்று அமையும். அதாவது, ஒரு நிலத்தின்மீது காணி அல்லது உரிமை கொண்ட ஒருவர் அல்லது ஓர் அமைப்பு வரி செலுத்தும்போது, நிலத்தில் விளைந்தாலும் விளைச்சல் இல்லாது போனாலும் வரி கட்டும் கடமை யினின்றும் பிறழ மாட்டோம் என்னும் உறுதி மொழிவதை அத்தொடர் சுட்டும். அது போன்றே, தொல்லியல் தடயங்கள் கிடைக்கவும் கூடும். கிடைக்காமலும் போகும். ஆனால், தேடல் தொடரும். அவ்வாறு மேற்கொண்ட பயணம் பெரியகுயிலி ஊரைப்பொறுத்தவரையிலும் ஏமாற்றம் அளிக்கவில்லை.

முதன்முதலாகப் பார்த்த இடம் குயிலியம்மன் கோயில். குயிலியம்மன் கோயில் கொண்டதால் ஊர்ப்பெயர் குயிலி என்று வழங்கியிருக்கலாம். ஊர்ப்பெரியவர்களுக்கு, ஊரின் பெயர்க்காரணம் தெரியவில்லை. கோவை, நெல்லை, மயிலை என ஊர்ப்பெயர்கள் வழங்கும் வழக்கத்தை ஒட்டி மக்கள் ”குயிலை” என அழைக்கின்றனர். அருகிலேயே இன்னொரு சிறிய ஊரும் இருப்பதால் பெரியகுயிலி, சின்னக்குயிலி என இரு பெயர்கள். குயிலியம்மன் கோயிலில், தற்போது, குயிலியம்மன் முதன்மைத்தெய்வம் எனினும், கோயிலினுள்ளே ஒரு “ஆதி குயிலியம்ம”னும் உண்டு.

**கல் ஊஞ்சல்**

பெரும்பாலும், எல்லா அம்மன் கோவில்களிலும் கல்லால் எழுப்பப்பட்ட ஓர் ஊஞ்சல் அமைந்திருக்கும். நீண்டுயர்ந்த இரு கற்றூண்கள் அருகருகே நாட்டப்பெற்றிருக்க, அவ்விரு தூண்களையும் மேலே இணைத்த நிலையில் ஒரு கிடந்த கல். அதிலிருந்து தொங்கும் சங்கிலிகளில் பிணைத்த ஒரு மரப்பலகை ஊஞ்சல். மக்கள் வேண்டுதல் வைத்து வணங்கி, அம்மனின் திருமேனியை ஊஞ்சலில் அமர்த்தி ஆட்டி அம்மனை மகிழ்விப்பர். அம்மன் நள்ளிரவில் அவ்வூஞ்சலில் அமர்ந்து ஆடிக்களிப்பதாகவும் மக்களிடையே ஒரு நம்பிக்கை நிலவுகிறது.



ஊஞ்சலின் ஒரு தூணில், கல் ஊஞ்சலை அமைத்துக்கொடுத்தவர் யார் என்பது ஒரு கல்வெட்டாகப் பொறிக்கப்பட்டுள்ளது. 1922-ஆம் ஆண்டு பொறிக்கப்பட்ட எழுத்துகள். தொண்ணூற்று நான்கு ஆண்டுகள் பழமை. எனவே, எழுத்துகளை ஒரு பள்ளி மாணவன் கூட எளிதில் படிக்க இயலும். இருப்பினும், கல்லின்மீதுள்ள பொறிப்பு என்பதால் சற்றே கடினம். கல்வெட்டின் பாடம் கீழே:

1. **1922**
2. **ஆடி**
3. **28 தே**
4. **குயி**
5. **லாத்தா**

6. ளுக்கு
7. கண்
8. ணப்
9. பாளை
10. யம்
11. வி.
12. ரங்
13. க போ
14. யன்

கண்ணப்பாளையம் ஊரைச்சேர்ந்த ரங்கபோயன் என்பவர், 1922-ஆம் ஆண்டு, ஆடி மாதம் 28-ஆம் தேதியன்று ஊஞ்சல் அமைத்துக்கொடுத்துள்ளார்.



**நினைவுக்கல் சிற்பம்**

சுற்றுச்சுவருடன் கூடிய கோயிலின் வெளிப்புறத்தில் கல் ஊஞ்சல் அமைந்துள்ளது போலவே, வெளிப்புறத்தில் கோயிலின் வலப்பக்கத்தில் ஒரு சிறு கோயில் அமைப்பு காணப்படுகிறது. ஏறக்குறைய ஆறடி உயரமுள்ள, பக்கத்துக்கு மூன்று என்னும் அளவில் ஆறு கற்றூண்களும், அவற்றை இணைத்து மேலே கிடத்திய இரு கற்றூண்களும், இவ்விரு கற்களுக்கிடையில் கூரையாகப் பாவப்பட்ட பலகைக்கற்களும் ஓர் அறையாகக் கோயில் தோற்றத்தைத் தருகின்றன. அறையின் உள்ளே, ஆணும் பெண்ணுமாய் ஒரு புடைப்புச்சிற்பம். இது ஒரு (Memory Stone) நினைவுக்கல்லாகும். கோவைப்பகுதியில் பல்வேறு நினைவுக்கற்கள் காணப்படுகின்றன. இவை யாவும் இறந்துபோன வீரர்கள், தலைவர்கள், பெண்கள் ஆகியோருக்காக எழுப்பப்பட்ட நினைவுக்கற்களாகும். கால்நடைச் சமுதாயம் ஓங்கியிருந்த நிலையில், கால்நடைகளைக்காக்கும் பணியில் ஈடுபட்டுப் புலியுடன் போராடி இறந்த வீரர்கள், கால்நடைகளைக்கவர்ந்து சென்ற எதிர்க்குழுவினரிடமிருந்து அவற்றை மீட்கும் முயற்சியில் (ஆநிரை மீட்டல்) எதிர்க்குழுவின் வீரர்களுடன் போரிட்டு இறந்த வீரர்கள், ஊர் அல்லது ஒரு குழுவின் தலைமைப் பொறுப்பை ஏற்று அரிய பணிகளைச் செய்து இறந்த தலைவர்கள் மற்றும் இவ்வகை வீரர்/தலைவர் ஆகியோருடன் உடன்கட்டை ஏறி இறந்த அவர்தம் மனைவியர் ஆகிய பலருக்கும் நினைவுக்கற்கள் எடுக்கப்பட்டு அவர்களை வணங்கும் வழக்கம் உண்டு. வீரக்கல், நடுகல், புலிகுத்திக்கல், நரிகடிச்சான் கல், சாமிக்கல், மாஸ்திக்கல் (மாசதிக்கல்) எனப் பல்வேறு பெயர்களால் கிராம மக்கள் வழங்குவர். அவற்றைப்பற்றிய செவிவழிக் கதைகளும் மக்களிடையே வழங்குவதுண்டு. அது போன்ற ஒரு நினைவுக்கல்தான் மேலே குறிப்பிட்ட நினைவுக்கல் சிற்பம்.





சிற்பத்திலுள்ள ஆணின் தலைப்பகுதியில் முடி, கொண்டை அமைப்பாக இல்லாமல், தலைப்பாகையுடன் உள்ளது. தலைப்பாகையில் ஒரு தலையணி இருப்பதுபோல் காணப்படுகிறது. மேல்நோக்கி முறுக்கிய மீசை. செவியணியும், கைவளையும், கழுத்தில், கழுத்தை ஒட்டியணியப்பட்ட கண்டமாலையும், அதனை அடுத்துத் தொங்கலாக அணியப்பட்ட நீண்ட மாலையும் காணப்படுகின்றன. ஆடை இடையிலிருந்து தொடங்கிப் பாதம் வரை காணப்படுகிறது. இடையின் இருபக்கங்களிலும் சுங்கு எனப்படும் ஆடைத்தொங்கல்கள் உள்ளன. பெண் வலப்புறம் கொண்டை முடியுடனும், இடையிலிருந்து பாதம் வரை ஆடையுடனும் காணப்படுகிறாள். கழுத்தில் அணிகள் எவையும் காணப்படுவதில்லை; கைவளைகளும் புலப்படாத நிலையில் கணவனோடு சேர்ந்து இறந்துபோன சதிப்பெண்ணாக இச்சிற்பத்தைக் கருதலாம். இக்கருத்தை ஊர் மக்களிடையே வழங்கும் கதை இருப்பின் ஒப்புநோக்கலாம். பெண் கைகூப்பி வணங்கும் தோற்றம் ஆணின் சிற்பத்தில் இல்லை. மாறாகக் கைகளைக் குவித்து வைத்துள்ளது குறிப்பிடத்தக்கது.

**கருப்பராயன் (கன்னிமார்) கல் (கல்வெட்டுப்பொறிப்புடன்)**

பூசையாளர் சுப்பிரமணியம் அடுத்து எங்களை ஒரு தோட்டத்துக்கு அழைத்துச்சென்றார். பெரியகுயிலி ஊர்ப்பகுதி வறட்சியான ஒரு பகுதி. இருப்பினும் ஓரிரு இடங்களில் முன்னாளில் முன்னோர் சிலர் வெட்டிவைத்த பெரிய கிணறுகள் அமைந்துள்ள தோட்டப்பகுதிகளில், கிணற்று நீரை இறைத்துச் சொட்டுநீர்ப் பாசனம் செய்கின்றனர். அவ்வாறான ஒரு தோட்டப்பகுதிக்கு நாங்கள் சென்றோம். அவரைப்பயிர் பூக்களோடும், சிறு சிறு பிஞ்சுக்காய்களோடும் வளர்ந்து அந்தச் சிறிய இடத்துக்குப் பசுமையான தோற்றத்தை வழங்கியிருந்தது. கிணற்றின் அருகில், ஒரு மரத்தடியில் சில கற்கள். கருப்பராயன், கன்னிமார் கடவுளர் என மக்கள் வழிபடுகின்றனர். லிங்கத்தின் தலைப்பகுதி போன்ற தோற்றத்தில் அகன்ற பெரியதொரு கல். அதையடுத்து, நீள் சதுர வடிவில் ஒருகல். அதன் நடுப்பகுதி செங்குத்தாய் நீண்டு அதில் நாகம் செதுக்கப்பட்டிருந்தது. இக்கல்லின் பரப்பில், வலப்புறம் சிறிய தூண் அமைப்பில் ஒரு புடைப்புச்சிற்பம். மீதியுள்ள சமதளப்பரப்பில் எழுத்துப்பொறிப்புகள் உள்ளன என்று சுப்பிரமணியம் கூறினார். இவை யாவும் ஒரே கல்லில் செதுக்கப்பட்டிருந்தன. இக்கல்லின் முன்புறம் உருண்டை வடிவில் சிறு சிறு கற்கள். அவை ஏழு கன்னிமார் கடவுளரைக் குறிப்பன. ஐந்து கன்னிமாரே காணப்பட்டனர். இரண்டு கன்னிமார் கற்களை யாரோ சொந்த வழிபாட்டுக்காக எடுத்துச் சென்றுவிட்டனர் என்பது புதிய செய்தியாக இருந்தது. வழிபாட்டுக்காக எண்ணெய் பூசிப்பூசிக் கல்பரப்பு முழுதும் எண்ணெய்ப்பற்று. கூர்ந்து நோக்கியபோது எழுத்துகள் இருப்பது உறுதியாயிற்று.



இரும்புத்தகடு மூலம் எண்ணெய்ப்பற்றைச் சுரண்டி எடுத்தோம். அடை அடையாக, எண்ணெய்ச்செக்கில் வெளிப்படும் பிண்ணாக்குச் செதிள்கள் போல எண்ணெய்ப்பற்று வெளியேறியது. இரும்புப் புருசு மூலம் கல்பரப்பைத் தேய்த்தபின் எழுத்துகள் ஒருவாறு புலப்பட்டன. இரண்டு வரிகள் மட்டுமே புலப்பட்டன. எழுத்தமைதியை ஆராயும்போது கல்வெட்டின் காலம் கி.பி. 13 அல்லது கி.பி 14-ஆம் நூற்றாண்டு ஆகலாம் எனக் கருதமுடிகிறது. வெள்ளைச் சுண்ணாம்பை நீரில் கலந்து கல்வெட்டின்மீது பூசிக் காயவிட்டபின் எழுத்துகளைப் படிக்க முயன்றோம். கல்வெட்டின் பாடத்தை அப்போதே சரியாகக் படிக்க இயலவில்லை. முதல் வரியில் " ராயண வ" என்னும் சொல்லும், அடுத்தவரியில் "க்கு திரா த ரா ச" என்னும் சொல்லும் புலனாயின.. ஆனால் கல்வெட்டின் ஒளிப்படத்தைக் கணினியில் உருப்பெருக்கம் செய்து ஆய்ந்து பார்த்ததில் கல்வெட்டின் இருவரிப் பாடம் கீழ்வருமாறு அமைந்திருந்தது.

கல்வெட்டின் பாடம்:

**(வீ ர நா) ரா ய ண வ தி**
**க்கு (அ) தி ரா ச ரா ச (ந்)**



**கல்வெட்டு சொல்லும் செய்திகள்**

கல்வெட்டின் இரு வரிகள் நமக்குப் பல செய்திகளைச் சொல்லுகின்றன. **"வதி" என்னும் சொல் வாய்க்காலைக் குறிக்கும்.** வாய்க்கால், வதி, ஏரி, மன்னறை (காடழித்து வேளாண் நிலமாக்கிய பகுதி) ஆகிய இடங்கள் அரசர் பெயரால் வழங்கப்படுதல் மரபு. **கோவை சங்கமேசுவரர் கோயில் கல்வெட்டொன்றில் (கோவைமாவட்டக் கல்வெட்டுகள்-க.வெ.எண்;** 90/2004) **"சிவபாதசேகர மன்னறை" என்றும், பேரூர் அழகிய சிற்றம்பலக்கோயில் கல்வெட்டொன்றில் (கோவைமாவட்டக் கல்வெட்டுகள்-க.வெ.எண்** 118/2004) **"வீரகேரள விலாடகுல மாணிக்க வதி" மற்றும் "அதிராஜராஜ வாய்க்கால்" என்றும் வருவதைக் காண்க.** அது போல், நம் கல்வெட்டிலும் **"வீரநாராயணவதிக்கு"** என வருகிறது. மேலும், **"அதிராசராச"** என்னும் அரசர் பெயரும் காணப்படுகிறது. கோயிலுக்கு நிலம் கொடையளிக்கப்பட்ட செய்திகள் கொண்ட கல்வெட்டுகளில், நிலத்தின் எல்லை வரையறுத்துச் சொல்லப்படும்போது நிலத்தை ஒட்டிய நான்கு திசைகளில் அமைந்திருக்கும் வதி, வாய்க்கால், மன்னறை, நிலம் போன்றவற்றின் குறிப்புகள் சொல்லப்படும். அது போலவே இக்கல்வெட்டிலும் சொற்கள் வருவதால் இக்கல்வெட்டு, நிலக்கொடை மற்றும் நிலத்தின் எல்லை பற்றிய செய்திகளைக் கொண்ட கல்வெட்டு என்பது உறுதியாகின்றது.

நிலக்கொடை கோயிலுக்கு அளிக்கப்பட்டதா அன்றி வேறு காரணம் பற்றியா என்பது தெளிவாகவில்லை. காரணம், கல்வெட்டின் தொடக்கப்பகுதி இக்கல்வெட்டில் இல்லை. "ஸ்வஸ்திஸ்ரீ" எனத்தொடங்கும் முதல்வரியுடன் கூடிய கல்வெட்டுப்பகுதி பிறிதொரு கல்லில் வெட்டப்பட்டிருக்க வேண்டும். அந்தக் கல் கிடைத்தால்தான் கொடை பற்றிய செய்தியும், எந்த அரசன் காலத்தது என்பதும் தெரியவரும். இக்கல்வெட்டின் கீழ்ப்பகுதி நிலத்தில் புதையுண்டு கிடப்பதால், நிலத்தின் கீழுள்ள பகுதியையும் தோண்டி எடுத்துப்பார்த்தால் இன்னும் தெளிவான விளக்கங்கள் கிடைக்க வாய்ப்புள்ளது. இது பற்றி நில உடைமையாளர் மற்றும் ஊர்க்கவுண்டர்கள் ஆகியோரிடம் பேசி ஏற்பாடுகள் செய்யவேண்டியுள்ளது. எனவே, மேற்கொண்டு கல்வெட்டுச் செய்திகள் கல்வெட்டினை மீளாய்வு செய்தபின்னரே கிடைக்கும்.

**அய்யாசாமி கோயில்**

அடுத்து நாங்கள் சென்ற இடம் சிறு சிறு கோயில்களாகப் பல கோயில்கள் அமைந்திருந்த தோட்ட ஒரு வளாகம். முதலில் அய்யாசாமி கோயில். பல ஊர்களில் அய்யாசாமி கோயில்கள் உள்ளன. இங்கு நாம் பார்த்த கோயில் ஊர்ப்பொதுக்கோயில் எனினும், பகல கூட்டத்தைச்சேர்ந்தவர்களின் பூசைப்பொறுப்பில் வழிவழியாக வந்துள்ளது. இறைவனின் திருமேனி ஒரு சிறிய படிமம். வலது காலை நேராக ஊன்றியும் இடது காலை மடக்கியும் வைத்த நிலையில் இறைவன் காணப்படுகிறார். பூணூல் அணிந்துள்ளார். இவர் ஒரு குழந்தை சாமி என்னும் கருத்து நிலவினாலும் இங்குள்ள திருவுருவம் மீசையுடன் காணப்படுகிறது. கைகளில் சங்கு சக்கரம் ஏந்தியது போலக் காணப்படுகிறது. விஷ்ணுவுடன் தொடர்புப்படுத்துகின்றனர்.



**முட்டாள் ராக்கியப்பன் கோயில்**

இப்பெயரில் வணங்கப்படும் இறைவனின் சிற்பம் ஒரு நினைவுக்கல் சிற்பத்தையே காட்டுகின்றது. ஒரு வீரர் தலைவனின் உருவத்தைக்கொண்டுள்ளது. நெடியதாய் நின்ற தோற்றம். தலைமுடியின் நடுப்பகுதி உச்சியில் நன்கு முடியப்பட்டுக் கட்டப்பட்டுள்ளது. கட்டப்படாத முடி சடை முடியாகப் பக்கவாட்டில் தொங்குகிறது. முகத்தில் மேல்நோக்கிய நிலையில் முறுக்கு மீசை. கழுத்தில் நிறைய அணிகலன்கள். கைகளில் வளைகளும் கால்களில் கழல்களும் உள்ளன. கால்களில் கழலோடு சேர்ந்து சிலம்பு போன்ற ஓர் அணிகலன் காணப்படுகிறது. பாதங்களில் பாதக்குறடு அணிந்துள்ளார். கைகள் கூப்பியிருந்தாலும் கைகளுக்கிடையில் ஒரு குறுவாள் உள்ளது. இடையிலும் ஒரு குறுவாள் உள்ளது. முழங்கால் வரையிலான ஆடை. இடையாடையிலும் அணிகலன்கள் காணப்படுகின்றன. அணிகலன் ஒன்றில் தாயத்துப்போன்ற ஒரு பொருள் காணப்படுகிறது. ஆடையின் இருபுறமும் சுங்குகள். சிற்பத்தின் வலது புறம் சூலம் போன்ற ஓர் ஆயுதம் காட்டப்பட்டுள்ளது. ஆனால், சூல நுனியில் இரு நீட்சிகளே உள்ளன. மொத்தத்தில், பெரும்பதவியிலிருக்கும் வீரர் தலைவனின் நினைவுக்கல்லாக இதைக் கருதுமாறு தோற்றம்கொண்டுள்ளது. ”முட்டாள்’ என்னும் முன்னொட்டுச் சொல்லின் விளக்கம் தெரியவில்லை. சிற்பத்தின் நேர்த்தியான வடிவமைப்பு இதன் காலம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டுக்கு முந்தையது எனக் கருதவைக்கிறது.



வாயில் கதவின் இரு பக்கச் சுவர்களின் அடிப்பகுதியில் சிற்பத்தொகுதியுள்ள இரு சிறு கற்கள் உள்ளன. ஒன்றில் இரு யாளி உருவங்களும் ஒரு யானை உருவமும் செதுக்கப்பட்டுள்ளன. மற்றொன்றில் இரு குரங்குகள் கைகளில் ஒரு பொருளை வைத்து விளையாடுவது போன்ற உருவமும் இரு வீரர்கள் போரிடுவது போன்ற உருவமும் செதுக்கப்பட்டுள்ளன. கோயில்களில் சுவர்ப்பகுதி முடிந்து கூரைப்பகுதி தொடங்கும் இடத்தில் யாளி வரிசை, பூதகண வரிசை காணப்படும். அத்தகைய வரிசைக் கற்களில் இரண்டினை இங்கே வைத்துப் பதித்துள்ளனர் என்று தெரிகிறது.

**பேச்சியம்மன், மசிறியாத்தா கோயில்**

இக்கோயிலில், பேச்சியம்மன், மசிறியம்மன், அன்னையர் எழுவர் (கன்னிமார்) திருவுருவங்கள் உள்ளன. சிற்பங்கள் பிற்காலத்தவை. பேச்சியம்மன் சிற்பத்தில் கைகளில் சங்கு சக்கரங்கள் வைஷ்ணவியை ஒத்துள்ளன. மசிறியாத்தா சிற்பம் கையில் குழந்தையுடன் காணப்படுகிறது. ராக்கியப்பன், பேச்சியாத்தா, மசிறியாத்தா கோயில்கள் இப்பகுதியிலிருக்கும் பூந்துறை காடை கூட்டத்தவர் வழிபாட்டுக்குரியவை.



**ஆநிரை தொடர்பான வீரக்கல்**

இறுதியாக, ஒரு தென்னந்தோப்பில் மண்ணில் புதையுண்டு கிடந்த ஒரு வீரக்கல்லைப் பார்த்தோம். கி.பி. 15/16 -ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்கக்கூடும் என்று கருதத்தக்க ஒரு வீரக்கல் சிற்பம். அது. ஒரு வீரன் பகை வீரனுடன் போரிடும் காட்சியை நினைவு படுத்தும் வகையில் அமைந்துள்ளது.மார்பளவு மட்டுமே உள்ள அச்சிற்பத்தில் பகை வீரனின் உருவம் புலப்படவில்லை. மண்ணுக்குள் புதையுண்ட பகுதியைத் தோண்டி எடுத்தபின்னரே அச்சிற்பம் ஆநிரை கவர்தலோடு தொடர்புள்ளதா என உறுதிப்படுத்த இயலும். வேளாண் பணியின் போது இச்சிற்பம் வெளிப்பட்டதாகவும், அரசுக்குத் தகவல் தரப்பட்டு, அரசு வருவாய்ப்பிரிவின் அலுவலர்கள் இச்சிற்பத்தை வந்து பார்த்துப்போனதாகவும் சொன்னார்கள்.

**முடிவுரை**

கட்டுரையின் தொடக்கத்தில் குறிப்பிட்டதுபோல, பெரியகுயிலி ஊர்ப்பகுதி தொல்லியல் சார்ந்த பகுதி என அறியப்படுகிறது. இப்பகுதியில் பழங்கோயில் ஒன்று இருந்துள்ளது என்றும் அழிந்துபோன அதன் எச்சங்களாகச் சில சிற்பங்களும் கற்றூண்களும் பல இடங்களில் சிதறுண்டு போனதாகவும் இங்குள்ளவர்கள் கூறுகிறார்கள். மேலும் சில சான்றுகள் கிடைத்தால் இச்செய்தி மெய்யாகக் கூடும்.

---



து.சுந்தரம்
கல்வெட்டு ஆராய்ச்சியாளர் கோவை.
doraisundaram18@gmail.com
அலை பேசி : 9444939156

# 17. முதல் இந்தி எதிர்ப்பு போராட்டத்தினை தொடங்கி வைத்தது யார்...?

– கவுதம் சன்னா



ஈவெரா அவர்களை பெரியார் என அழைக்கக் காரணம் யார்..?
அகில இந்தியாவிற்குமான முதல் தலித் பெண் தலைவர் யார்..?

முதல் இந்தி எதிர்ப்பு • சென்னை மாகாண பிரதம அமைச்சர் ராஜாஜி 1937 ஆகஸ்ட் 10ம் நாளன்று இந்தி மொழி கட்டாயமாக்கப்படும் என்று அறிவித்தார். அது மக்களிடையே கொந்தளிப்பை உருவாக்கியிருந்தது. ஆனால் அது ஒருங்கிணைக்கப்படவில்லை இதை பயன்படுத்திக் கொண்ட ராஜாஜி 21.04.1938 அன்று ஓர் ஆணையை பிறப்பித்து பள்ளிகளில் கட்டாய இந்தி மொழியைக் கட்டாயமாக்கினார். எல்லோரும் கொதித்தார்கள். ஆனால் யார் தொடங்குவது என்பதில் ஏனோ தயக்கம் இருந்தது. இந்த தயக்கத்தை முதலில் உடைத்தவர் அன்னை மீனம்பாள் அவர்கள். (காண்க பேட்டி). அதன் தொடர்ச்சியாய் சென்னை தி.நகரில்
நடத்தப்பட்ட முதல் இந்தி திணிப்பு எதிர்ப்புக் கூட்டம் தந்தை சிவராஜ் தலைமையில் நடந்தது. அந்த வரலாற்றுச் சிறப்புமிக்க கூட்டத்தையும் போராட்டதையும் தனது வீர உரையால் தொடங்கி வைத்தவர் அன்னை மீனாம்பாள் அவர்கள். (கொடுக்கப்பட்ட படத்தில் தி நகரில் நடைபெறும் முதல் இந்தி எதிர்ப்பு கூட்ட மேடையில் நாற்காலியில் அமர்ந்திருப்பவர் தந்தை சிவராஜ். கீழே



அமர்ந்திருப்பவர் அன்னை மீனாம்பாள், மைக் முன் பேசுபவர் சி.என்.அண்ணாதுரை அவர்கள்)



கூட்டம் முடிந்த பிறகு போராட்டம் தீவிரமானது. எல்லா தலைவர்களும் அன்னை மீனாம்பாள் இல்லத்திற்கு அவரையும் தந்தை சிவராஜ் அவர்களையும் பார்க்க வந்தவண்ணம் இருந்தனர். அதில் ஒருவராக கிஆபெ விசுவநாதத்துடன் வந்த ஜெகதீசன் உண்ணாவிரதம் இருக்க வேண்டும் என்று அன்னை மீனாம்பாள் அவர்களிடம் கேட்டார், உடனே தன் வீட்டிலேயே உண்ணாவிரதம் இருக்கலாம் என்று அம்மையார் அவருக்கு இடம் கொடுத்தார். விளைவாய் 01.05.1938 முதல் ஜெகதீசன் சாகும்வரை உண்ணாவிரத்தை தொடங்கினார். போராட்டம் சூடு பிடித்தது. (பார்க்க அன்னை மீனாம்பாளின் பேட்டி).




எனவே.. 1938 ஏப்ரல் கடைசி வாரத்தில் தொடங்கி 1940ல் முடிந்த இந்தி எதிர்ப்பு போராட்டத்தை தொடங்கி அதை வளர்த்தெடுத்தவர் அன்னை மீனாம்பாள். அதனால்தான் சுதேச மித்திரன் இதழ் இந்தி எதிர்ப்பு போராட்டத்தின் தலைவர் என்று அன்னை மீனாம்பாள் அவர்களை பதிவு செய்தது (காண்க படங்கள்..)

இத்தனை ஆதாரங்கள் இருந்தும் அன்னை மீனாம்பாள் மற்றும் தந்தை சிவராஜ் ஆகியோருக்கு இந்தி எதிர்ப்பு போராட்டத்தை உயர்த்திப் பிடிக்கும் எந்த முற்போக்காளர்களும் உரிய அங்கீகாரம் வழங்க மறுக்கிறார்களே ஏன்...?

பாள் ஆகியோர் பேசிக் கொண்டிருந்தபோது, காந்தியாருக்கு மகாத்மா என்ற பட்டம் கொடுத்து அழைக்கிறார்கள்; நாம், நம் மக்களுக்காக எல்லாவற்றிலும் முன்னின்று பாடுபடுகிற ஈ.வெ.ரா. அவர்களுக்கு ஒரு பட்டம் கொடுத்து அழைக்க வேண்டும் என்று முடிவு செய்தோம். அப்பொழுது தான் ''பெரியார்'' என்று அழைப்பது என்று முடிவு செய்து, பிறகு பெண்கள் மாநாடு கூட்டி பெரியார் என்று பட்டம் கொடுத்தோம். அதை ஒரு முக்கிய நிகழ்ச்சியாக தன் வாழ்நாளில் நான் கருதுகின்றேன்.

கேள்வி: வேறு முக்கிய நிகழ்ச்சிகள்...

பெரியார் • காந்திக்கு மகாத்மா என்று பட்டம் இருப்பதுபோல ஈவெரா அவர்களுக்கு ஒரு பட்டத்தை நாம் ஏன் தரக்கூடாது என்று டாக்டர் தர்மாம்பாள், நாராயிணி அம்மாள் ஆகியோரை கேட்டேன், பிறகு பெரியார் என்று பட்டத்தை தேர்ந்தெடுத்து 13.11.1938 அன்று நடந்த பெண்கள் மாநாட்டினை அன்னை மீனாம்பாள் கொடியேற்றி தொடங்கி வைக்க, நீலாம்பாள் அம்மையார் தலைமையுரை ஆற்றினார். பிறகு ஈவெரா அவர்களுக்கு பெரியார் என பட்டம் அளிக்கப்பட்டது. ஈவெரா பெரியார் ஆனார். ஆனால் அன்னை மீனாம்பாள் என்ன ஆனார் வரலாற்றில்..?

பெண்ணியத் தலைவர் • திராவிட இயக்கதினருடன் சில வேளை நட்புடனும் சில வேளை முரண்பட்டும் இருந்த அன்னை மீனாம்பாள் எம்.சி.ராஜா, டாக்டர் அம்பேத்கர், தந்தை சிவராஜ் ஆகியோர் முக்கியத் தலைவர்களாக இருந்த டிப்ரஸ்டு கிளாஸ் இயக்கத்தின் முன்னணித் தலைவர்களில் ஒருவர் அன்னை மீனாம்பாள். பிறகு பட்டியலினக் கூட்டமைப்பு, இந்திய குடியரசு கட்சி ஆகியவற்றில் முக்கிய தலைவராக இருந்ததுடன், சென்னை மாகாணம் மற்றும் இந்திய அளவிலான மாதர் சங்க இயக்கத்தின் முன்னணித் தலைவர்.

# மீனாம்பாள் சிவராஜ் அவர்களுடன்... (ஒரு நேர்முகப் பேட்டி)

1902 ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 26 ஆம் நாள் இரங்கூனில் பிறந்த மீனாம்பாள் சிவராஜ் அவர்கள், கண் பார்வையற்ற நிலையிலும் இன்றும்கூட பழைய செய்திகளை நினைவாற்றலுடன் கூறுவதில் திறமை உடையவராக இருக்கிறார் என்பதை 6-11-90 அன்று அவரை சென்னை டிரான்சன் கார்டன் தெருவில் உள்ள (கெல்லீஸ்) அவரது இல்லத்தில் சந்தித்த போது தெளிவாக உணர முடிந்தது.

காவல்துறையில் துணை ஆணையாளராக பதவியாற்றி ஓய்வுபெற்ற அவரது மகன் தயாசங்கர் இல்லத்தில்தான் மூதாட்டியார் அவர்கள் இருந்து வருகிறார்கள்.

நீதிக்கட்சி, சுயமரியாதை இயக்கத்துடன் துவக்கத்தில் தொடர்பு கொண்டு உயிரோடு இருக்கக்கூடிய விரல்விட்டு எண்ணக்கூடியவர்களுள் ஒருவராக இருக்கக் கூடியவர் என்பதால், நீதிக்கட்சி பவள விழா மலரில் அவரை நேர்முகமாகக் கண்டு பழைய நினைவுகளை புதிய தலைமுறையினரின் வெளிச்சத்துக்குக் கொண்டுவர வேண்டும் என்ற அவாவில் அவரைச் சந்தித்தோம். திராவிடர் கழகத் தலைமை நிலைய செயலாளர் கவிஞர் கலி.பூங்குன்றனுடன் வடசென்னை மாவட்ட திராவிடர் கழகத் துணைத் தலைவர் வி.எம்.நாராயணன், 'எக்ஸ்ரே' கருணாகரன் ஆகியோர் உடன் வந்திருந்தனர்.

கேள்வி: தங்களுக்கும் நீதிக்கட்சிக்கும் சுயமரியாதை இயக்கத்துக்கும் தொடர்பு எப்படி ஏற்



மீனாம்பாள், அம்பேத்கர், சிவராஜ்

பட்டது?

பதில்: என்னுடைய பெரியப்பா வேணுகோபால் பிள்ளை இந்த இயக்கங்களுடன் தொடர்பு கொண்டவர். கடப்பையில் நகராட்சி ஆணையாளராகப் பணிபுரிந்தவர்.

சென்னை ஸ்பர்டாங் சாலையில் டாக்டர் டி.எம்.நாயர் ஆற்றிய உரை புகழ்பெற்ற ஒன்றாகும். அந்தக் கூட்டத்தை ஏற்பாடு செய்தவர்களே இவர்தான். இந்த முறையிலே எங்கள் குடும்பத் தொடர்பு நீதிக்கட்சியோடு இருந்தது.

ஒருநாள் சி.டி.நாயகம் அவர்கள் எங்கள் வீட்டுக்கு வந்தார். அப்பொழுது ராஜாஜி பிரதமராக இந்தியைத் திணித்த சமயம். பார்ப்பனர்கள் சூழ்ச்சியால் இந்தி திணிக்கப்படுகிறது. இதனை நாம் தடுத்து நிறுத்தாவிட்டால், வரும் காலத்தில் நம் பிள்ளைகள் பெரிதும் பாதிக்கப்படுவார்கள். நாம் பெரியாரோடு சேர்ந்து கொண்டு ஏதாவது செய்தாக வேண்டும் என்று கூறினார்.

எனது துணைவர் சிவராஜ் அவர்கள் யோசிக்கலாம் என்றார். நான் திருமணம் ஆன புதுசு. அப்பொழுது சட்டென்று சொன்னேன். இதில் யோசிக்க என்ன இருக்கிறது? தீவிரமாக இந்தியை எதிர்க்கத்தான் வேண்டும் என்று சொன்னேன். குழந்தை சொல்லுது; சரி என்று சொல்லுங்கள் என்றார் சி.டி.நாயகம்.

முதலில் சென்னை தியாகராயர் நகரில் பொதுக்கூட்டம் ஏற்பாடாயிற்று. அந்தக் கூட்டத்தை கயல்கலி தான் துவக்கிவைக்க வேண்டும் என்றார் சி.டி.நாயகம். அந்த முறையிலே முதன்முதலாக நான் கலந்துகொண்ட பொதுக்கூட்டம் அது. பெண் ஒருவர் பேசுகிறார் என்றவுடன், ஆச்சரியத்துடன் கூடினார்கள். ஏனென்றால் அந்தக் காலத்தில் பெண்கள் எல்லாம் பொதுக் கூட்டத்தில் கலந்துகொள்வதோ பேசுவதோ மிகவும் அதிசயம்.

அடுத்து இராயப்பேட்டை பெரிய பாளையத்தம்மன் கோவில் தெருவில் உள்ள பெரிய மைதானத்தில் எனது தலைமையில் இந்தி எதிர்ப்புப் பொதுக்கூட்டம். இந்தியை எதிர்த்துத் தீர்மானம் போடப்பட்டது. அந்தத் தீர்மானத்தை எடுத்துக் கொண்டு பிரதமர் ராஜாஜியைச் சந்திக்கச் சென்றார்கள். நான் நல்ல எண்ணத்தோடு தான் இந்தியைக் கொண்டு வந்திருக்கிறேன். சுதந்திரம் வந்தால் இந்தியாவுக்குப் பொது மொழி இந்திதான். இதை ஏன் எதிர்க்கிறீர்கள் என்று ராஜாஜி பதில் கூறி அனுப்பி விட்டார்.

இதனைத் தொடர்ந்து நாட்டில் ஏராளமான அளவில் இந்தி எதிர்ப்புப் பொதுக்கூட்டங்கள் நடக்கத் தொடங்கின. மீர்சாப்பேட்டை, தேனாம்பேட்டை என்று பரவியது.

ஒருநாள் சி.ஆ.பெ.விசுவநாதம் இராயப்பேட்டை ஆண்டியப்பத் தெருவில் உள்ள (கதவு எண் 12) எங்கள் வீட்டுக்கு வந்தார். அவருடன் ஸ்டாலின் செகதீசன் என்பவரையும் அழைத்து வந்தார்.

இந்தியை எதிர்த்து எங்கள் வீட்டிலேயே ஸ்டாலின் செகதீசன் என்பவர் உண்ணாவிரதம் இருக்கத் தொடங்கினார். ஏராளமான பொதுமக்களும் பிரமுகர்களும் எங்கள் வீட்டுக்கு வர ஆரம்பித்தார்கள்.

சென்னைக் கடற்கரையில் பெரியார் தலைமையில் பொதுக் கூட்டம் நடைபெறுவதாக இருந்தது. பெரியாரைக் கைது செய்துவிட்டார்கள். பட்டுக்கோட்டை கே.வி.அழகிரிசாமியையும் கைது செய்துவிட்டார்கள். அந்த நேரத்தில் நான் அந்தக் கூட்டத்தில் கலந்துகொண்டு பேசினேன். ராஜாஜி என்னைக் கைது செய்யவில்லை. அதற்கு ஒரு காரணம் உண்டு. அந்தக் காலகட்டத்தில் வெள்ளைக்காரர்கள் வீட்டில் எல்லாம் சமையல்காரர்களாக (பட்லர்) பெரும்பாலும் தாழ்த்தப்பட்டவர்கள் இருந்தார்கள். அவர்கள் எல்லாம் ராஜாஜியிடம் சென்று, மீனாம்பாள் அம்மாளை எந்தக் காரணத்தை முன்னிட்டும் கைது செய்யக்கூடாது; மீறி கைது செய்தால் நாங்கள் வேலைக்குப் போகமாட்டோம் என்று கூறிவிட்டார்கள். ராஜாஜியும் எப்படியோ என்னைக் கைது செய்யவேண்டாம் என்று கூறிவிட்டார்.

கேள்வி: தாழ்த்தப்பட்ட மக்களுக்குத் தாங்கள் ஆற்றிய குறிப்பிடத்தக்க பணி என்ன?

பதில்: அகில இந்திய அளவில் தாழ்த்தப்பட்டோர் அமைப்புக்கு "All India Scheduled Caste Federation" என்ற ஒரு அமைப்பு ஏற்படுத்தப்பட வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. பல மாநிலங்களில் எம்.சி.ராஜா அவர்களைத் தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள். உத்திரப்பிரதேசம், வங்காளம் போன்ற இடங்களில் எம்.சி.ராஜா அவர்களைத் தேர்ந்தெடுத்தனர். மத்தியப் பிரதேசத்தில் டாக்டர் அம்பேத்கரைத் தேர்ந்தெடுத்தார்கள்.

சென்னையிலே மாநாடு கூட்டி டாக்டர் அம்பேத்கர் அவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று முடிவு செய்தோம். எம்.சி.ராஜா எங்களுக்கெல்லாம் ஒரு வகையில் உறவினர். உறவினர்கள் எல்லாம் என்னிடம் வந்து உறவுக்காரர் என்றுகூடப் பார்க்காமல் இப்படி செய்கிறீர்களே என்றார்கள். நாட்டின் எதிர்காலத்தைப் பார்க்கவேண்டுமா - சொந்தபந்தத்தைப் பார்க்கவேண்டுமா என்று திருப்பிக் கேட்டேன்.

மாநாடு எங்கு நடத்துவது என்று யோசித்துக் கொண்டிருந்தோம். அப்பொழுது சென்னை அல்லாண்டு திடலில் நீதிக்கட்சியின் மாநாடு நடக்க ஏற்பாடு செய்யப்பட்டு இருந்தது. அது 1939 டிசம்பர் மாதத்தில்! அந்த மாநாட்டுப் பந்தலிலேயே ஒரு குறிப்பிட்ட நேரம் தாழ்த்தப்பட்டோர் மாநாடு நடத்துவதற்கு வாய்ப்பு அளித்தார்கள்.

நீதிக்கட்சி மாநாட்டின் செயலாளராக இருந்த சுந்தர்ராவ் நாயுடு இந்த உதவியைச் செய்ய முன்வந்தார்.

அந்தக் காலத்தில் பணத்துக்குப் பெருங் கஷ்டம். நான் போட்டிருந்த நான்கு பவுன் வளையல்களை அடமானம் வைத்து மற்ற செலவுகளைச் செய்தோம். இரண்டு மூன்று மணிநேரத்துக்குள்ளாகவே சுவரொட்டி அச்சிட்டு ஒட்டி மாநாட்டைச் சிறப்பாக நடத்திவிட்டோம். மாநாட்டில் டாக்டர் அம்பேத்கர் அவர்களைத் தலைவராகத் தேர்ந்தெடுத்து தீர்மானத்தை அம்பேத்கர் அவர்களுக்கே அனுப்பி வைத்தோம்.

ஆனால் அம்பேத்கர் அவர்கள் தலைவர் பொறுப்பை ஏற்க மறுத்துவிட்டார். 'நான் கோபக்காரன், எனக்கு இந்தப் பதவி எல்லாம் ஒத்துவராது. நீயே இரு' என்று கூறி எனது கணவர் சிவராஜ் அவர்களைத் தலைவராக நியமித்தார்.

நாக்பூரில் மாநாடு நடத்தி சிவராஜ் அவர்கள் தலைவராக முறைப்படி அறிவிக்கப்பட்டார். அந்த மாநாட்டை ஏற்பாடு செய்தவரே டாக்டர் அம்பேத்கர் அவர்கள்தான்.

தமிழ்நாட்டைச் சேர்ந்த ஒருவர் அகில இந்திய அமைப்பின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டது அப்பொழுது ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகவே கருதப்பட்டது.

கேள்வி: தந்தை பெரியார் அவர்களோடு தாங்கள் இணைந்து பணியாற்றிய நிகழ்ச்சிகள் பற்றிக் கூறுங்கள்.

பதில்: நான் ஏராளமான சுயமரியாதைத் திருமணங்களுக்குத் தலைமை தாங்கி நடத்தி இருக்கிறேன். பெரியார் அவர்கள் கலந்துகொண்ட திருமணங்களிலும் கலந்துகொண்டு பேசி இருக்கிறேன்.

சென்னை பெரம்பூரில் என் தலைமையிலும், பெரியார் தலைமையிலும் ஒரு சுயமரியாதைத் திருமணம் நடைபெற்றது. கடுமையான மழை, தாழ்த்தப்பட்டோர் பகுதி... ஒரே சேறும் சகதியுமாகிவிட்டது. திருமணம் முடிந்து சாப்பிட்டுப் போகச் சொன்னார்கள். நான் ஏதோ சமாதானம் சொல்லி சாப்பிடவில்லை. பெரியார் என்ன செய்தார் தெரியுமா? மேலே இருந்த ஓலையைக் கீழே எடுத்துப் போட்டு அப்படியே உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்துவிட்டார். பெரியார் எந்தவித ஏற்றத்தாழ்வும் பார்க்க மாட்டார்.

நான், நாராயணி அம்மாள், சக்கர் தருமாம்பாள் ஆகியோர் பேசிக் கொண்டிருந்தபோது, காந்தியாருக்கு மகாத்மா என்ற பட்டம் கொடுத்து அழைக்கிறார்கள்; நாம், நம் மக்களுக்காக எல்லாவற்றிலும் முன்னின்று பாடுபடுகிற ஈ.வெ.ரா. அவர்களுக்கு ஒரு பட்டம் கொடுத்து அழைக்க வேண்டும் என்று முடிவு செய்தோம். அப்பொழுது தான் ''பெரியார்'' என்று அழைப்பது என்று முடிவு செய்து, பிறகு பெண்கள் மாநாடு கூட்டி பெரியார் என்று பட்டம் கொடுத்தோம். அதை ஒரு முக்கிய நிகழ்ச்சியாக என் வாழ்நாளில் நான் கருதுகின்றேன்.

கேள்வி: வேறு முக்கிய நிகழ்ச்சிகள்...

பதில்: நான் எனது கணவர் சிவராஜ் அவர்களுடன் பம்பாயில் உள்ள அம்பேத்கர் அவர்கள் வீட்டுக்குச் சென்று இருக்கிறேன். அவரே சமையல் செய்து எங்களுக்கு விருந்து பரிமாறிய நிகழ்ச்சி மறக்கமுடியாத ஒன்று.

சென்னைக்கு வேல்ஸ் இளவரசர் வந்தபோது, எங்களுக்குத் தனி அழைப்புக் கொடுக்கப்பட்டு, அந்த விருந்தில் கலந்துகொண்டோம்.

சென்னை, அண்ணாமலைப் பல்கலைக் கழக செனட் உறுப்பினராக இருந்திருக்கின்றேன். கவுரவ மாஜிஸ்ட்ரேட் போன்ற பொறுப்புகளில் இருந்திருக்கின்றேன். ''இரங்கூனில் எனது பாட்டனார் மதுரைப்பிள்ளை பிரபல வணிகர், விக்டோரியா, மதுரை மீனாட்சி என்கிற இரண்டு 'வாருகள்' அவருக்குச் சொந்தமானவை. இண்டர்மீடியட் படித்துவிட்டுத் திருமணத்துக்காக 16-வது வயதில் சென்னைக்கு வந்தேன். எனது கணவர் சிவராஜ் எனது அத்தைமகன் ஆவார். அந்தக் காலத்திலேயே வக்கீலுக்குப் படித்தவர். அப்பொழுதெல்லாம் இந்த சமுதாயத்தில் இவ்வளவு தூரம் படித்தவர்கள் மிகவும் குறைவு. அம்பேத்கர் அவர்களுடன் நெருக்கமான தொடர்பு கொண்டிருந்தார். தாழ்த்தப்பட்ட ஏழை எளிய மக்களுக்கு இலவசமாகச் சட்ட உதவிகள் செய்வார்.

*(பழைய நினைவுகளைப் பசுமை மாறாமல் எடுத்துச் சொன்ன மூதாட்டியாருக்கு நன்றி தெரிவித்து விடைபெற்று வந்தோம்)*

**வால் பிடித்ததா?**

ஜஸ்டிஸ் கட்சிக்காரர்கள் ஆங்கிலேயர்களின் பாதந்தாங்கிகள் என்ற அபாண்டத்தை அன்றைக்கும் சரி - இன்றைக்கும் சரி சில அரசியல்வாதிகள் சுமத்துவது வழக்கம். உண்மை என்னவென்றால் நீதிக்கட்சித் தலைவர் பனகல் அரசர் (இராமராய நிங்கார்) முதலமைச்சராக இருந்த காலகட்டத்தில்தான் ஆங்கிலேயர் ஆதிக்கத்திலிருந்த மருத்துவத்துறையை அப்படியே இந்தியமயமாக்கினார். அதனால் ஆங்கிலேயர்கள் பனகல் அரசர் அவர்களிடம் கொண்டிருந்த வெறுப்பிற்கோ அளவே கிடையாது.

பல்வேறு பதவிகளை வகித்த அன்னை மீனாம்பாள் கௌரவ நீதிபதியாகவும் இருந்திருக்கிறார். சென்னையில் எங்கு நீங்கள் மீனாம்பாள் பெயரில் உள்ள குடியிறுப்புகள், தெருக்களை பார்க்க நேர்ந்தால் அது அன்னை மீனாம்பாள் அவர்களின் நினைவாக வைக்கப்பட்டதே.. மக்களின் அன்பை அவ்வளவு பெற்றிருந்தார் அன்னை மீனாம்பாள்.
இந்தப் பெண்கள் தின நாளில் அன்னை மீனாம்பாள் அவர்களின் போராட்ட சாதனைகளை முன்வைத்து அனைவருக்கும் பெண்கள் தின நல்வாழ்த்துக்கள் தெரிவித்துக் கொள்கிறேன்..

அன்னை மீனம்பாள் அவர்களின் புகழ்பெற்ற முழக்கம்
••பெண்களின் விடுதலையே ஆண்களின் விடுதலை••

மேலும், இந்த ஆண்டாவது அன்னை மீனாம்பாள் அவர்களின் பெயரில் விருது ஒன்று அறிவிக்கப்படும் என எதிர்பார்க்கிறேன். ஆயினும், பலசிறப்புகள் வாய்ந்த இந்த பெரும் ஆளுமையை மறைத்தது யார்...? மறந்தது யார்...?

---



கவுதம் சன்னா
g.sannah@gmail.com

# 18. மது விலக்கு நாயகர்

## – கரந்தை ஜெயக்குமார்

ஆண்டு 1947, மார்ச் 23.

தேர்தலில் வெற்றி பெற்று, மக்களின் மகத்தான ஆதரவுடன், அம்மனிதர் பிரதம மந்திரியாக பொறுப்பேற்ற நாள். நாட்டின் வரலாற்றில் ஒரு பொன்னாள்.

பதவி ஏற்றவுடன் கட்சிக்காரர்களை அழைத்தார். உத்தரவு போட்டார்.

**பாராட்டு விழாக்கள் கூடாது, கூடவே கூடாது.**

அப்படியும் தொண்டர்களும், கட்சிக்காரர்களும் அழைக்கத்தான் செய்தார்கள்.

**நான் அரசாங்கத்தை நடத்துவதா? இல்லை இம்மாதிரிக் கூட்டங்களில் கலந்து பேசிக்கொண்டே இருப்பதா? திடமாக மறுத்தார்.**

ஒரு முறை உயர் நீதி மன்ற நீதிபதியைக் கூட சந்திக்க மறுத்தார்.

**சந்திப்பதற்காக எழுதிக் கொடுத்த அனுமதிச் சீட்டில், சந்திக்க விரும்புவதன் காரணம் என்ற இடம் நிரப்பப் படாமலேயே இருந்தது. அதனால் தவறான சிபாரிசுக்காக வருகிறார் என முடிவு செய்து, அவரைச் சந்திக்க மறுத்தேன். அமைச்சர்களும் நீதிபதிகளும் மற்றவர் கடமைகளில் குறுக்கிடாமல் இருந்தால்தானே, அரசு இயந்திரம் செம்மையாக, நேர்மையாக இயங்கும்.**

**மக்களுடைய நன்மைக்காகத்தான் நாம் பதவியில் இருக்கிறோம். பெரிய மனிதர்களுக்கும், நமக்கு வேண்டியவர்களுக்கும் சலுகை காட்டுவதற்கு அல்ல.**

எத்துனை நேர்மையான மனிதர்.

இவர் பிரதம மந்திரியாக பொறுப்பேற்பதற்கு முன்னமே, ஒரு திடமான முடிவில் இருந்தார்.

**மது விலக்கு.**
மது விலக்கினை அமல் படுத்தியாக வேண்டும்.

மதுவின் பிடியில் இருந்து, நாட்டு மக்களை, போதையின் கரம் பற்றித் தள்ளாடும் இளைஞர்களை மீட்டே ஆக வேண்டும்.

மதுவில்லா தேசமாக மாற்றிக் காட்டியே ஆக வேண்டும்.

இப்படிப்பட்ட உயரிய மனிதர், மக்களின் மகத்தான ஆதரவுடன், பிரதம மந்திரியாகவும் ஆகிவிட்டார். பிறகென்ன.

**25 மாவட்டங்களைக் கொண்ட நாட்டில், எட்டு மாவட்டங்களில் மட்டுமே மதுவிலக்கு, பெயரளவில் இருந்த காலம் அது.**

குடிகாரர்கள் மதுவைத் தேடி, மற்ற மாவட்டங்களுக்கு நடையாய் நடந்து, தள்ளாடியபடி, திரும்பிக் கொண்டிருந்த காலம் அது.

25 மாவட்டங்களிலும் மது விலக்கு.
இன்று முதல் அமல் படுத்தப் படுகிறது.

அரசு அதிகாரிகள் எவ்வளவோ எடுத்துரைத்தனர். பூரண மதுவிலக்கு சாத்தியமல்ல. குடிகாரர்களைத் திருத்த முடியாது. அவர்களின் மனதை மாற்ற முடியாது.

**முயன்றால் முடியாதது இல்லை. இனி ஒவ்வொரு மாவட்டத்திலும், ஒவ்வொரு சிற்றூரிலும், சிற்றூரின் ஒவ்வொரு தெருவிலும், மதுவின் வாடை கூட வீசக் கூடாது.**

கண்டிப்பாய் உத்தரவு போட்டார்.

அன்றே தேயிலைக் கழகத்தாரை அழைத்தார். கலந்து பேசினார். அடுத்த நாள் அடுத்த அறிவிப்பு வந்தது.

இனி அடுத்து வரும் இரண்டு மாதங்களுக்கு, அனைத்து மாவட்டங்களிலும், அனைத்து ஊர்களிலும், அனைத்து சிற்றூர்களிலும், நாட்டின் ஒவ்வொரு தெருக்களிலும் வசிக்கும் அனைத்து மக்களுக்கும் தேநீர் இலவசம்.

ஊரெங்கும் தேநீர் கடைகள் திறக்கப் பட்டன. விரும்பும் மக்கள், ஒரு நாளைக்கு எத்துனை முறை வேண்டுமானாலும், இலவசமாகவே தேநீர் அருந்தலாம்.

**மதுவை மனம் நாடுகிறதா?**
**வா, வா, வந்து தேநீர் குடி. எவ்வளவு வேண்டுமானாலும் குடி.**

நண்பர்களே, எப்படி இந்தத் திட்டம். குடிப் பழக்கத்திற்கு மாற்றாக, தேநீர் பருகும் பழக்கத்தை ஏற்படுத்தினார்.

அனேகமாக இதுதான், இந்நாட்டின் முதல் இலவசத் திட்டமாக இருக்கும்.

எத்துனை பயனுள்ள, பொருள் பொதிந்த இலவசத் திட்டம்.

இது மட்டுமல்ல, மது அருந்துவதைக் கைவிடுவதால், ஏற்படும் பயன்கள் பற்றி ஊர் தோறும் நாடகங்கள், கதாகாலேட்சபங்கள், பஜனைகள் நடத்தப் பெற்றன.

இதற்கே வியக்கிறீர்களே இன்னும் இருக்கிறது.

சடுகுடு, பிள்ளையார் பாண்டு, கிளித் தட்டு, தெருக் கூத்து முதலிய கிராமிய விளையாட்டுக்களும், கலைகளும் கிராமப்புற மேம்பாட்டு அலுவலர்கள் மூலமாக கிராமம் தோறும் மீண்டும் உயிர்பிக்கப் பெற்றன.

மக்கள் மதுவை மறந்தனர்.

உடல் நலனில் தேறினர்.

குடும்பமே உயர்வென்று போற்றத் தொடங்கினார்.

குடும்பங்கள் செழித்தன. நாடு தழைத்தது.

நண்பர்களே, படிக்கப் படிக்க மெய் சிலிர்க்கிறது அல்லவா, வாசிக்க வாசிக்க நெஞ்சம் நெகிழ்கிறது அல்லவா, நினைக்க நினைக்க மனம் ஆனந்தக் கூத்தாடுகிறது அல்லவா.

இதைச் சாதித்துக் காட்டிய பிரதம மந்திரி எந்த நாட்டைச் சார்ந்தவர் தெரியுமா?

நமது நாட்டைச் சார்ந்தவர்.

என்ன என்ன, நமது நாட்டைச் சார்ந்தவரா?

நமது நாடேதான். இம் மாமனிதர் அரியனை ஏரிய காலத்தில், அதாவது, நமது நாட்டு விடுதலைக்கு முன், மாநில முதல்வர்களை பிரதம மந்திரி என்றுதான் அழைத்தார்கள்.

நம் நாடு சுதந்திரம் பெற்ற பின்னர்தான், மத்தியில் ஆள்பவரை பிரதம மந்திரி என்றும், மாநிலத்தை ஆள்பவரை பிரிமியர் என்றும் அழைக்கத் தொடங்கினார்கள்.

1950 ஆம் ஆண்டு சனவரி 26 இல், அரசியல் நிர்ணய சபை, நிறைவேற்றிய சுதந்திர இந்தியாவின், அரசியல் அமைப்புச் சட்டப்படி, இந்த பிரிமியர்கள், முதலமைச்சர்கள் ஆனார்கள்.

நமக்குத் தெரிந்த செய்திதான் இது. ஆனாலும் நம்மில் பலர் மறந்து போன செய்தி.

அப்படியானால், அடுத்த கேள்வி, நம் முன்னே தோன்றுகிறது அல்லவா? நாட்டின் பிரதம மந்திரி இல்லை என்றால், இவர் மாநிலத்தின் பிரதம மந்திரி அல்லவா?

ஆம், அப்படியானால், எந்த மாநிலத்தின் பிரதம மந்திரி இவர்.

சொல்லட்டுமா? சொன்னால் நம்புவீர்களா?

நம்பித்தான் ஆக வேண்டும்.

ஏனெனில் இது வரலாற்றின் பக்கங்களில் உளி கொண்டு, செதுக்கப் பெற்ற உண்மை.

ஒரு முறை மூச்சை, இழுத்து விட்டுக் கொள்ளுங்கள்.



இவர், நம்
சென்னை மாகாணத்தின்
பிரதம மந்திரி

ஆம்
சென்னை இராஜதானியின்
பிரிமியர்

நம் பெருமைமிகு தமிழ் நாட்டின்
முதலமைச்சர்

இவர்தான்

ஓமந்தூரார்

ஓ.பி.ராமசாமி ரெட்டியார்

ஓமந்தூரார், பெரிய வளைவு, ராமசாமி ரெட்டியார்.

ஓமந்தூராரின் நினைவினைப் போற்றுவோம்.

நன்றி:

கரந்தை ஜெயக்குமார் வலைத்தளம்

http://karanthaijayakumar.blogspot.com/

---



கரந்தை ஜெயக்குமார்

karanthaikj@gmail.com

**அலைபேசி எண்** 94434 76716

# 19. ராஜா தேசிங்கு

## – கோ.செங்குட்டுவன்

"தேஜ் சிங்", "ஜெயாசிங்", "தஜாப்சிங்" - இப்படித்தான் ஆங்கிலேய ஆவணங்கள் உச்சரிக்கின்றன. ஆனால், நாம் அழைப்பது ராஜா தேசிங்கு அல்லது தேசிங்கு ராஜா. இந்த ரஜபுத்திர இளைஞனுக்கு வயதோ 21. செஞ்சி மண்ணில் ஆட்சிசெய்தது, மொத்தமே 10 மாதங்கள்தான். ஆனால் வரலாற்றில் நீங்காத இடத்தைப் பிடித்து விட்டார்.

இவனதுத் தந்தை சொரூப் சிங். முகலாய மாமன்னன் ஔரங்கசீபின் புண்டேலா (பன்டேல்கன்ட்) தளபதியாக இருந்தவர். 1700 ஜனவரியில் செஞ்சியின் ஆளுநராக சொரூப்சிங்கை நியமித்தார் ஔரங்கசீப். இப்போது அவரது ஆளுகையின் கீழ் வழுதாவூர், திண்டிவனம், திருவாமாத்தூர், அசப்பூர், திருக்கோவலூர், வேட்டவலம் ஆகியப் பகுதிகள் அடங்கியிருந்தன. நாம் இங்குப் பார்க்கப்போவது ராஜா தேசிங்கு குறித்து என்பதானால், சொரூப்சிங்கை விடைபெற வைக்கலாம் எனக் கருதுகிறேன். 1713 இறுதியில் அல்லது 1714 தொடக்கத்தில் இவர் இறந்திருக்கலாம். அப்போது பேரரசுக்கு இவர் நிலுவையில் வைத்திருந்த வரி 70லட்சம் ரூபாய்.

தந்தையின் மரணச் செய்தியறிந்து, பண்டேல்கன்ட்டில் இருந்து தனது இளம் மனைவி இராணிபாயுடன் செஞ்சி விரைந்து வந்தார் ராஜா தேசிங்கு. தந்தைக்கான இறுதிக் காரியங்களை செய்தக் கையுடன், 1714 ஜனவரியில் செஞ்சி அரசுக்கானப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டார். "என்ன இருந்தாலும் ஆற்காடு நவாபிடம் அனுமதி பெற வேண்டாமா?" உடனிருந்தவர்கள் தயக்கத்துடன் கேட்டனர். "என் தந்தைக்கு பரம்பரை அரசுரிமை வழங்கியவர் நவாப் அல்ல. டெல்லிப் பேரரசர். நான் பதவியேற்க யாருடைய அனுமதியும் தேவையில்லை" எனும் அனல் கக்கும் வார்த்தைகள்தான் தேசிங்கிடமிருந்து வந்தது. செஞ்சியின் ஆட்சித் தொடர்ந்தது.

தேசிங்கின் செயல் நவாபிடம் கோபத்தை ஏற்படுத்தியது. இதற்கு அவரது எதிர்வினை வேறுவிதமாக இருந்தது. சொரூப்சிங் செலுத்த வேண்டிய வரி இன்னும் நிலுவையில் இருக்கிறதே! இதனை வசூலித்துவர, தனது செயலாளர் தோடர்மாலை செஞ்சிக்கு அனுப்பி வைத்தார். மேலச்சேரியில் முகாமிட்டிருந்த நவாபின் செயலாளரை, ராஜா தேசிங்கு சென்று பார்த்தார். அப்போதும் அவர் குதிரையைவிட்டு கீழே இறங்கவில்லை. இதனைத் தொடர்ந்து தக்க விவரங்களுடன் கோட்டைக்குச் சென்ற தோடர்மால், செஞ்சி அரசரைச் சந்தித்தார்.

“வரியா? நிலுவையா? நான் செலுத்த வேண்டுமா?” இப்போதும் தேசிங்கின் கண்கள் சிவந்தது. தோடர்மால் கொண்டுவந்த கடிதம் தரையைத் தொட்டது. தொடர்ந்து அமைதி காத்த தோடர்மால், கடிதத்தினை பொறுமையுடன் குனிந்து எடுத்துக் கொண்டார். இதுகுறித்தத் தகவலை நவாபிற்குச் சொல்லவும் அவர் தவறவில்லை. தேசிங்கின் செய்கைகள் ஆற்காட்டு ஆட்சியைத் தொடர்ந்து அவமதிப்பதாக இருக்கிறதே என ஆத்திரமடைந்த நவாப் சாதத்துல்லாகான், செஞ்சியின் மீது படையெடுக்க முடிவு செய்தார்.

ஆற்காடு படை செஞ்சியை நோக்கி முன்னேறியது. இதில் இடம்பெற்றிருந்த வீரர்களின் எண்ணிக்கை 30 ஆயிரம். இதையறிந்த ராஜாதேசிங்கு, எதிரிகளை சந்திக்கப் புறப்பட்டுவிட்டார். அப்போது அவருடன், உயிர் நண்பனான, வழுதாவூர் கில்லேதார் மகமத்கான் உள்ளிட்ட 800இல் இருந்து ஆயிரம் பேர் மட்டுமே. வராக நதிக்கரையில் கடலி எனுமிடத்தில் இரண்டு படைகளும் நேருக்கு நேர் மோதிக் கொண்டன. மகமத்கான் வீழ்த்தப்பட்டார்.

இதனால் தேசிங்கின் தாக்குதலில் வேகம் அதிகரித்தது. நவாபின் தளபதியான தௌலத்கான், தேசிங்கின் வாளுக்கு இறையானான். பழிக்குப் பழி! இதனால் அதிர்ச்சியடைந்த ஆற்காட்டுப்படை, தேசிங்கை சூழ்ந்தது. வீரன் ஒருவனது துப்பாக்கியில் இருந்து சீறிய குண்டுக்குப் பலியானார் தேசிங்கு. இது நடந்தது 03.10.1714.

முன்னதாக, போருக்குப் போவது பற்றி உத்தரவுக் கேட்க சென்றபோது, சிங்கவரத்தில் பள்ளிகொண்டிருக்கும் பெருமாள், தலையைத் திருப்பிக் கொண்டதாகவும் கூறப்படுகிறது. தேசிங்கு-மகமத்கான் நட்பு, இந்து-முஸ்லிம் ஒற்றுமைக்கானக் கருத்தாக இருக்கிறது. மண மேடையில் அமர்ந்திருந்த மகமத்கான், நண்பன்-செஞ்சி அரசனுக்குப் பாதிப்பு என்றவுடன், மணமாலையை உதறிவிட்டு, போர்க்களத்துக்குச் சென்றதும், வீரமரணம் அடைந்ததும் வியந்து போற்றப்படுகிறது.

நவாபின் ஆட்சியில் 100க்கும் மேற்பட்ட பாளையங்கள் இருந்தபோதிலும், வரி செலுத்த மாட்டேன் எனச்சொன்ன தேசிங்கின் அசாத்திய துணிச்சல் வரலாற்று ஆய்வாளர்களால் பாராட்டப்படுகிறது. அதே நேரம் மிகப்பலம் பொருந்திய எதிரிப் படையை, சிறிய எண்ணிக்கையிலான வீரர்களை மட்டுமே வைத்துக் கொண்டு, ராஜா தேசிங்கு எதிர்கொண்டு சென்றது சரியா? எனும் விவாதங்கள் நடந்து கொண்டிருக்கின்றன.

விவாதங்களும் விமர்சனங்களும், ஆய்வுகளும் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது. அதே சமயம், ராஜா தேசிங்கு (அ) தேசிங்கு ராஜாவின் புகழ்பாடும் கதைப்பாடல்கள் ஏராளம். இந்தக் கதைகளை வரலாறாக எடுத்துக் கொள்வதும், கதையாகவே பார்ப்பதும் அவரவர் விருப்பம்!

கடலியில் நடந்தப் போரில் ராஜா தேசிங்கு சுட்டுக் கொல்லப்பட்டாலும், அவரை உயிருடன் பிடிக்க வேண்டுமென்பதுதான் ஆற்காடு நவாப் சாதத்துல்லாகானின் விருப்பமாம். ஆச்சரியமாக இருக்கிறதா? உண்மையுங்கூட!



**இராணிபாயுடன் ராஜாதேசிங்கு சிற்பம்**
**கோட்டை அருங்காட்சியகம், செஞ்சி**

தந்தைக்கு வழங்கப்பட்டிருந்த உரிமையைப் பயன்படுத்தி, ஆட்சிக் கட்டிலில் அமர்ந்த தேசிங்கின் செயல், ஆற்காட்டை அவமதிப்பதாகத்தான் இருந்தது. ஆனால் இதற்கான எதிர்வினை என்பது உடனடியாக நிகழவில்லையே?

10 மாதங்கள் தேசிங்கின் ஆட்சி அனுமதிக்கப்பட்டுதானே வந்தது?

செஞ்சியின் வரி பாக்கியை வசூலிக்க டெல்லியில் இருந்து வந்துவிட்டார்கள். அவர்களுடன் தன்னுடைய செயலாளரையும் செஞ்சிக்கு அனுப்பி வைக்கிறார் நவாப். சென்ற இடத்தில் குதிரையின் மீதிருந்தே, லாலா தோடர்மாலுக்கு வணக்கம் சொன்னது, அவர் எடுத்துச் சென்ற கடிதத்தைத் தரையில் வீசியது - போன்ற நிகழ்வுகள் சாதத்துல்லாகானின் நெஞ்சில் கனன்று கொண்டிருந்த நெருப்பை விசிறியது என்று சொல்லலாம்.

ராஜா தேசிங்குப் படையில் இருந்தவர்கள் சில நூறு பேர்கள்தாம். ஆற்காட்டுப் படையிலோ பல ஆயிரம் பேர். ஆனாலும் தேசிங்கை உயிருடன் பிடிக்க வேண்டும் என்பதுதான் நவாபின் ஆணை. அதற்கானக் காரணம்? தெரியவில்லை!

படைத்தளபதிகளுள் ஒருவரான தௌலத்கானை, தேசிங்குக் குத்திக் கொன்றார். அப்போதும்கூட, “அவரைக் கொல்லுங்கள்” என்று நவாப் கட்டளையிடவில்லை.

இந்தப் போரில் நவாப்புக்கு மிகவும் கைகொடுத்தவர் வெங்கடகிரி (நெல்லூர் மாவட்டம்) கில்லேதாரான பங்காரு யச்சம நாயக்கர். அவரும்கூட, தன் படையினரிடம் “தேசிங்கை உயிருடன் பிடிக்க வேண்டுமென்று”தான் ஆணையிட் டிருந்தாராம். ஒருகட்டத்தில் தேசிங்கின் குதிரையின் கால்கள் வெட்டப்பட்டன. இதனால் தரையில் நின்று ஈட்டியைச் சுழற்ற வேண்டிய நிலை. இப்போதும்கூட தேசிங்குக் கொல்லப்பட வில்லை.

யச்சம நாயக்கரின் படைப்பிரிவைச் சேர்ந்த ஒருவன், கேடயத்தைப் பாதுகாப்பாக வைத்துக் கொண்டு, தேசிங்கை உயிருடன் பிடிக்க நெருங்கினான். அப்போது அவனைத் தனது ஈட்டியால் குத்திக் கொன்றார் தேசிங்கு. இப்போதுதான் “கொல்லுங்கள்” எனும் உத்தரவு யச்சம நாயக்கரிடம் இருந்து வெளியானது. துப்பாக்கியைத் தயாராக வைத்திருந்த வீரன் ஒருவன் தேசிங்கை சுட்டுக் கொன்றான்.

செஞ்சி அரசாங்கம் நவாபின் கைகளில் வெகுசீக்கிரத்தில் விழுந்தது. கோட்டைக்கு எடுத்துச் செல்லப்பட்ட தேசிங்கின் உடல் அரசு மரியாதையுடன் தகனம் செய்யப்பட்டது. ரஜபுத்திர வழக்கப்படி, கணவன் உடலுடன் உடன்கட்டையேறுவதற்கு ராணிபாய் அனுமதிக்கப்பட்டாள். ராஜா தேசிங்கு உடல் எரியூட்டப்பட்டதாகச் சொல்லப்படும் செட்டிக்குளக்கரையில், அரச, வேப்ப மரங்கள் நடப்பட்டு பூங்கா ஒன்றும் உருவாக்கப்பட்டது.

இராணிபாயின் நினைவாக, ஆற்காடு அருகே உள்ள ஒரு ஊருக்கு ராணிப்பேட்டை எனும் பெயரை வைத்தார் நவாப். செஞ்சியின் ஆட்சியில் இருந்த தேசிங்கின் ஆதரவாளர்கள் தொடர்ந்து பணிபுரிய அனுமதிக்கப்பட்டனர். விருப்பமில்லை என்றவர்கள், பண்டேல் கன்ட்டுக்கு அனுப்ப ப்பட்டனர். தேசிங்கு வீழ்ந்த இடத்தில் வெற்றி நகரம் எனும் பொருள் வழங்கும் “பதேபட்” என்ற புதிய

நகரம் உருவாக்கப்பட்டது. தேசிங்கு, அவரதுக் குதிரை, மகமத்கான் ஆகியோருக்குக் கல்லறைகள் ஏற்படுத்திக் கொள்ளவும் அனுமதி வழங்கப்பட்டது. போரில் உயிர்நீத்த மகமத்கானின் நண்பர்கள் இருவருக்குக் கோட்டைக்கு வெகுஅருகில் கல்லறைகள் ஏற்படுத்திக் கொள்ள அனுமதியளிக்கப்பட்டது.



இத்தனை நிகழ்வுகளுக்கு மத்தியிலும், "தேசிங்குடன் போர் புரிவதற்கு, டெல்லி பேரரசிடம், நவாப் சாதத்துல்லாகான் அனுமதி பெற்றாரா?" - இதுவரை விடை தெரியாத ஒரு வினா இது! ராஜாதேசிங்கை வீழ்த்தி, வெற்றி பெற்றதன் நினைவாக எழுப்பப்பட்ட சாதத்துல்லா கான் மசூதி, செஞ்சிக் கோட்டை வளாகத்தில் இன்றும் கம்பீரமாக நின்று கொண்டிருக்கிறது. இங்குப் பொறிக்கப்பட்டிருந்த பெர்ஷியன் மொழிக் கல்வொட்டொன்று இவ்வாறு சொல்கிறது:

"மேன்மைக்குரிய சாதத்துல்லாகானுக்கு ஹைதரின் ஆசிகள் கிடைக்கட்டும். எல்லாம் வல்ல இறைவனின் இணையற்ற கருணையினால் செஞ்சிக் கோட்டையை இவர் கைப்பற்றினார்".

---



கோ.செங்குட்டுவன்
ko.senguttuvan@gmail.com

# 20. சென்னையின் நீர்வழித்தடங்கள் - அடையாறும் அதன் கரைகளும்

– நரசய்யா

உலகின் நாகரிகங்கள் எல்லாமே நீர்வழித்தடங்களின் கரைகளில் தான் துவங்கின. அப்படித்தான் இந்தியாவின் முதல் நாகரிகமான சிந்துசமவெளியும், சிந்துநதிக் கரையில் துவங்கிற்று. சங்கப் பாடல்களில், தமிழக ஆறுகளின் பயனும் அவற்றின் பெருமையும் பாடப்பட்டுள்ளன. தமிழகக் கடல்வழி வணிகம், ஆறுகள் கடலில் சங்கமிக்கும் இடங்களில் இருந்த நகரங்களில் தான் பெருமளவில் நடந்து கொண்டிருந்தது.

அன்றைய நாட்களில், நாகரிகத்தில் இந்தியர்களைவிடப் பின்தங்கியிருந்த ஐரோப்பியர்கள், கடல்வழி வணிகத்தின் பெருமையை முற்றிலும் உணர்ந்து, இந்தியாவின் செல்வத்தையும் தெரிந்து கொண்டு, 15ம் நூற்றாண்டில் இந்தியாவை நோக்கித் தம் பார்வையைத் திருப்பினர்.அன்று, இந்திய நாடு ஒற்றுமை குலைந்து பல சிற்றரசர்கள் தமக்குள் போர் புரிந்து கொண்டிருந்த நேரம். ஐரோப்பியர்களின் ஆளுமைக்கு ஒரு பெரும் நல்வரவளிக்கும் விருந்தாகவே ஆகிவிட்டது.

பொருளீட்டுவதற்காக ஸ்பானியர்களுக்கும் போர்த்துகீசியர்களுக்கும் கீழைநாடுகளை நோக்கிச் செல்லும் அவா ஏற்பட்டபோது, அவர்களுக்குள் ஏற்பட்ட போட்டியைத் தீர்த்து வைக்க அன்றைய போப்பாண்டவர் முன் வந்தார். ஏனெனில் அவ்விரு நாட்டினரும் கத்தோலிக்க மதத்தைப் பின்பற்றுபவர்கள். அவர்கள் மத்தியஸ்தத்திற்கு போப்பாண்டவரை நோக்கினர். 'பேப்பல் புல்' என்றறியப்பட்ட போப்பாண்டவரின் ஆணை, 1493ம் ஆண்டு மே மாதம் வெளியிடப்பட்டது. அதன்படி உலகை அசோரஸ் என்ற தீவின் வழியாக, வடக்கிலிருந்து தெற்காக இரண்டாகப் பிரித்து, கிழக்குப் பகுதிகளை போர்த்துகீசியர்களுக்கும் மேற்குப் பகுதிகளை ஸ்பானியர்களுக்கும் அவர் பகிர்ந்தளித்தார்.

**ஆங்கிலேயர்களின் தேர்வு:**

நில, நீர் ஆக்கிரமிப்புகள் ஒன்றும் புதிதல்ல; அன்றே துவங்கி விட்டன. வேடிக்கை என்னவெனில் இவ்வுலகம் போப்பாண்டவருக்கும் சொந்தமானதல்ல! அவ்வாறுதான் வாஸ்கோடகாமா, கோழிக்கோடு வந்தடைந்து மெல்ல மெல்ல இன்றைய கேரள நாட்டின் முக்கியப் பகுதியைப் போர்த்துகீசியர்களுடையதாக்கிக் கொண்டான்! அங்கிருந்து போர்த்துகீசியர்கள், கோரமண்டலக் கரையிலும் தமது

ஆக்கிர மிப்பைக் கிறிஸ்தவ மத பரப்புதலுடன் துவக்கினர். 16ம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் அவர்கள், இன்றைய சாந்தோமை அடைந்தனர். சாந்தோம், அன்று மயிலாப்பூரின் ஒரு பகுதியாக இருந்தது. பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே, மயிலாப்பூர் ஒரு பாதுகாக்கப்பட்ட துறைமுகமாக விளங்கியதற்குச் சான்று, பொன்னேரி, வீற்றிருந்த பெருமாள் கோவிலில், 11ம் நூற்றாண்டின் கல்வெட்டாகக் காணக் கிடைக்கின்றது. மயிலாப்பூரின் தெற்குப் பகுதி, அடையாறு கடலில் சங்கமிக்கும் இடத்திற்கு சற்றே வடக்கில் இருந்தது. கோரமண்டல் கரை வந்த போர்த்துகீசியர்கள், அடையாறு சங்கமிக்கும் இடத்தைத் தேர்ந்தெடுத்து அதன் வடக்கில், தமது கோட்டை ஒன்றை அமைத்தனர்.

தமது வணிகத்திற்காக, ஆங்கிலேயர்கள், 17ம் நூற்றாண்டு துவக்கத்தில், கோரமண்டலக் கரையில் ஒரு ஆற்றின் முகத்துவாரத்தைத் தான் தேடிக் கொண்டிருந்தனர். அடையாறு முகத்துவாரம் சிறந்ததாகத் தெரிந்தாலும், அருகில் போர்த்துகீசியர்கள் இருந்தமையால், கூவம் முகத்துவாரத்தைத் தேர்ந்தெடுத்தனர். வடக்கில் பழவேற்காடு, டச்சுக்காரர்கள் கைகளில் இருந்தது. போர்த்துக்கீசியர்களின் சாந்தோம் கோட்டை, ஆங்கிலேயர்களால் 17ம் நூற்றாண்டு இறுதியில், தரைமட்டமாக்கப்பட்டது. 1749ல் அந்த இடம், ஆங்கிலேயர்களுக்குச் சொந்தமாகிற்று. அப்போது அடையாறு, ஒரு சிறந்த ஆறாகத் திகழ்ந்தது. அது கடலில் கலக்குமிடம் - கழிமுகப் பகுதி, இயற்கையின் எழில் மிகு பகுதியாக அமைந்திருந்தது. பறவைகளின் ஒரு பெரும் சரணாலயமாகவும் இருந்தது. கடந்த, 1639ல் இங்கு வந்த ஆங்கிலேய வணிகர்களான ஆண்ட்ரூ கோகன் எனபவரும் பிரான்சிஸ் டே என்பவரும், அன்றைய நாயக்க அரசப் பிரதிநிதியான தாமரல வெங்கடாத்ரியுடன் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டு, கூவம் முகத்துவாரத்தில் தமது வணிக தலத்தை நிறுவிக் கொண்டனர். அதுதான் பின் செயின்ட் ஜார்ஜ் கோட்டையாக உருவானது. அப்போது, சாந்தோமில் போர்த்துகீசியர் பலம் சற்றே குறைந்திருந்தது. ஆங்கிலேயர் பிராடஸ்டண்டு பிரிவை சேர்ந்தவர்கள்; போர்த்துகீசியர்கள் கத்தோலிக்கர்கள். ஆகையால் இருவரிடையேயும் பகை புகைந்து கொண்டு இருந்தது.



**பண்ணை வீடுகள்:**

அழகான அடையாற்றங்கரையோ ஆங்கிலேயர்களுக்கு அழைப்பு விடுத்துக் கொண்டே இருந்தது. இருமருங்கிலும் பசுமை நிறந்து கண்கொள்ளாக் காட்சியாக அது இருந்தது. நீளத்தில் கூவத்தை விட குறைவான அடையாற்றின் பிறப்பிடம் கூடுவாஞ்சேரி செம்பரம்பாக்கம் ஏரியருகில், செம்பரம்பாக்கம் போன்ற சில நீர்நிலைகளின் உபரிநீரும், மற்ற சில ஆறுகளின் உபரிநீரும் அடையாற்றில் கலந்து ஓடுகிறது. இந்தியாவின் சிறந்த நதிகளைப் போல ஏதோ மலைப்பாங்கான இடத்தில் தோன்றிய நதியல்ல அடையாறு; ஏரிகளின் உபரிநீர் வடியும் ஒரு வடிகால் தான். அங்கிருந்து, 40 கி.மீ., ஓடிய பின், கடலில் சங்கமிக்கிறது. சென்னை நகரத்தில், நந்தம்பாக்கம் வாயிலாக நுழையும் அடையாறு, நகரத்துள் 13.5 கி.மீ., துாரத்திற்கு ஓடுகிறது. கூவத்தைப் போலல்லாது, இதன் முகத்துவாரம் விரிந்து பரந்து கிடக்கிறது. இந்த முகத்துவார பரப்பளவு, 300 ஏக்கர். சென்ற நூற்றாண்டின் முதல் பாதி வரை இப்பகுதி, சிறந்த மீன்வள நீர்ப் பரப்பாக இருந்தது. மீனவர்கள் வாழ்வாதாரமாகவும் விளங்கியது. சுற்றிலும் பெரும் மீனவ சமுதாயமே செழிப்பாகத் தனது வாழ்க்கையை ஓட்டிக் கொண்டிருந்தது. சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில், மாசு மிக்க பகுதியாக மாறி மீன்வளம் செத்து விட்டது. சுனாமியின் போது நடந்த நல்ல நிகழ்வு, பின்னோக்கி வந்த பேரலைகளால் (அவை சைதாப்பேட்டை வரை வெள்ளமெடுத்தன) அடையாற்றின் பெரும்பகுதி சுத்தப்படுத்தப்பட்டு விட்டது தான்! பதினேழாம் நூற்றாண்டின் இறுதி வரை, ஆங்கிலேயர் சென்னையின் இன்றைய தெற்குப் பகுதிக்கு வரவில்லை. பதினெட்டாம் நூற்றாண்டிலும், அதன் பின்னரும் தமது ஆக்கிரமிப்புகளை அவர்கள் அதிகரித்துக் கொண்டிருக்கையில், தெற்கு நோக்கி நகர்ந்தனர்.

சிறு கிராமங்கள் வழியாக எழில் மிகு நதியாக ஓடிக்கொண்டிருந்த அடையாற்றின் இரு மருங்கிலும், சிறு கோவில்களும் வசிக்குமிடங்களும் அமைந்திருந்தன. சலனமற்ற அந்நாட்களின் வாழ்வு சிறந்ததாக இருந்திருக்க வேண்டும். ஆங்கிலேயர்கள் இயற்கையை ரசித்தவர்கள். அடையாற்று கரையினில் அவர்கள் பண்ணை வீடுகள் கட்ட துவங்கினர். இந்த இடத்தைப் பற்றிய முதற்குறிப்பு, மெட்ராஸ் கலெக்டரின் 1806ம் ஆண்டு அறிக்கையில் தென்படுகிறது [1]. அதன்படி ஒரு பெரும் பரப்பளவு (50 காணி நிலம்) பனை மரத் தோட்டமாக இருந்தது. அதன் உரிமையாளர் வெங்கடாசலபதி என்பவர். 1807ம் ஆண்டில் அதிகார பூர்வமாக இந்த சொத்துரிமை அவருக்குக் கலெக்டரால் அளிக்கப்பட்டது. அதற்குப் பின்புலமாக இருந்தவர் ஆலந்த நாராயணசுவாமி நாயக் என்பவர். அங்கு இரு சிறு கோவில்களும் இருந்தன. அதில் ஒன்று கடாரி அம்மன் கோவில். இந்த நாயக், அடையாற்றின் வடகரை முழுவதையும் சொந்தம் கொண்டாடியவர்! துரதிர்ஷ்டவசமாக இவர் முத்துக் குளிப்பதில் போட்டிருந்த செல்வமெல்லாம், 1821ல் தொலைந்து விட,

இவ்விடங்கள் ஆங்கிலேய பிரபுக்களுக்கு விற்கப்பட்டன. கடந்த, 1792ல் இருந்து, 1831 வரை ஐ.சி.எஸ்., அதிகாரியாக இருந்த, எல்.ஜி.கே.முர்ரே என்பவரிடம், நாயக் கடன்பட்டிருந்தார். ஆகையால் அவர் கைக்கு, நாயக்கின் பெரும் பகுதி சொத்துகள் போய்விட்டன.

**பிராடீஸ் கேசில்:**

அவர் இந்த நிலங்களை, எட்வர்ட் பிரான்சிஸ் எலியட் என்பவருக்கு விற்றார். இவர் பெயரில் தான் எலியட்ஸ் பீச் இன்று அறியப்படுகிறது. இந்த எலியட்டின் தந்தை, மெட்ராஸ் கவர்னராக 1814 - 1820 காலகட்டத்தில் இருந்தவர்.பின்னர் பல கைகள் மாறி நிலங்கள் பக், நார்ட்டன் போன்றோருக்குச் சொந்தமாயின. அடையாற்று கரையை ஒட்டிய இடங்கள் விற்கப்பட்டு, அங்கு ஆங்கிலேயர்கள் தமது பண்ணை வீடுகளைக் கட்டிக் கொண்டனர். மேற்கு முனையில் அவ்வாறு கட்டப்பட்ட வீடுகளில் ஒன்று தான் கிரேஞ்ச் என்று அன்றறியப்பட்ட இன்றைய காஞ்சி என்னும் இல்லம். இப்போது அண்ணா மேலாண்மைக் கல்லூரி. 1853ம் ஆண்டு ஜான் ப்ரூஸ் நார்ட்டன் (நன்கறியப்பட்ட வக்கீல் நார்ட்டனின் தந்தை) என்பவரால் இது கட்டப்பட்டது. அன்றைய பிராடீஸ் கேசில் - இன்றைய தென்றல் (இசைக் கல்லூரி) எனப்படும் கட்டடத்தின் கதையே விசித்திரமானது. சாந்தோமின் தெற்குப் பகுதியில், கிவிபிள் தீவு என்பது அடையாறு முகத்துவாரத்தில் உள்ளது. இப்போது அது கல்லறைகள் நிறைந்த இடம்.

அதன் தெற்கில் அடையாற்றங்கரையின் எழிலில் மயங்கிய ஜேம்ஸ் பிராடீ என்ற ஆங்கிலேயர், இங்கு, 11 ஏக்கர் நிலத்தை வாங்கி,1796 - -98ல் ஒரு பெரும் மாளிகை கட்டினார். அதன் பெயர்தான் பிராடீஸ் கேசில்.

அங்கு குடியேறும் முன்னரே அவர் மனைவி ஒரு கெட்ட கனவு கண்டதாகவும், அதனால் அவருக்கு அவ்வீடு செல்லத் தயக்கம் இருந்ததாகவும், பென்னி என்ற ஆங்கிலப் பெண்மணி, 'கோரமண்டல் கோஸ்ட்' என்ற பத்திரிகையில் கூறியுள்ளார். அவர்கள் அங்கு குடியேறியவுடன் அவர்களது, 600 ஆண்டுகள் பழமையான குடும்ப ஆவணங்கள், ஒரு தீ விபத்தில் சாம்பலாயின. சில நாட்களுக்குப் பின், பிராடி ஒரு படகில் தனது வீட்டருகில் அடையாற்றில் பொழுது போக்கச் சென்று கொண்டிருக்கையில், படகு கவிழ்ந்து அவர் அங்கேயே மூழ்கி இறந்தார். தாளாத துயரத்தில் அவரது மனைவி அங்கிருந்து வேறு வீட்டிற்குச் சென்றுவிட்டார். கடந்த, 1866ம் ஆண்டில் ஜான் மெக்கைவர் என்பவர் இங்கு குடியேறினார். 1866 டிச., 23ம் தேதி அன்று கிறிஸ்துமஸ் கொண்டாட இவ்வீட்டிற்கு கர்னல் டெம்பிள் என்பவர் விருந்தாளியாக வந்திருந்தார். அவர் மெக்கைவரின் இரு குமாரிகளையும் அழைத்துக் கொண்டு, கேப்டன் ஹோப் ஸ்கட்மோர் போஸ்டாக் என்பவருடன் ஒரு படகில் உல்லாசமாகச் சென்றார். ஆனால் அடையாற்றின்

துரோகத்தால் (அப்படித்தான் அவர்கள் கருதினர்) அந்த படகு கவிழ்ந்ததில் அடையாற்றின் பசிக்கு, போஸ்டோக் தவிர மற்றவர்கள் விருந்தாகினர். அன்றிலிருந்து அந்த மாளிகை பேய் மாளிகையாகிவிட்டது! இன்று பிராடீஸ் கேசில் என்ற பெயர் மாற்றப்பட்டு, தென்றல் என்ற பெயரில், இசைக் கல்லூரி செயல்படுகிறது [2].

கடந்த, 1700களில் அடையாறுதான் சென்னையின் தெற்கு எல்லையாகத் திகழ்ந்தது. ஆயினும் இரண்டு ஆங்கிலேயர்கள் ஆற்றைத் தாண்டித் தெற்கில் பண்ணை வீடுகள் கட்டினர்.

**அடையாற்றின் பாலங்களும், பண்ணை வீடுகளும்**




அடையாறு மற்ற நதிகளைப் போல, மலைப் பாங்கான இடத்தில் தோன்றவில்லை. மற்ற நதிகளுக்கு, மூலம், மேல் அல்லது நடுப் பகுதி கீழ்ப் பகுதி என்று மூன்று பகுதிகள் உண்டு. அடையாற்றை அவ்வாறு பிரிக்க முடியாது.

மாறாக மொத்த நீரோட்டமும் கீழ்ப் பகுதியாகவே உள்ளது. அதாவது சமவெளியில் நீர்நிலைகளில் இருந்து வெளியேறும் உபரி நீரை எடுத்துச் செல்லும் ஒரு நீர்வழித் தடம் தான் அடையாறாக ஓடுகிறது.

மணிமங்கலம் ஏரியில், இதன் துவக்கம் இருந்தாலும், இதன் நீர்வரத்து பல ஏரிகள், குளங்கள்,- முக்கியமாக செம்பரம்பாக்கம் ஏரி ஆகியவற்றில் இருந்து தான் துவங்குகிறது.

இந்த ஆற்றின் ஆழம், 0.50 மீ., முதல் 0.75 மீ., வரை உள்ளது. ஆற்றுப் படுகை, 10.50 மீ., முதல் 200 மீ., வரை, இடங்களைப் பொறுத்து பெருகியும் குறுகியும் உள்ளது. வங்காள விரிகுடாவில் கலக்கும் இதன் நீர் பரிமாணத்தில், காலத்திற்கு தகுந்தாற்போல மாறுபடுகிறது. மழைக்காலத்தில் அதிகமாகவும் மற்ற மாதங்களில் குறைவாகவும் இருக்கும்.

பல இடங்களில் ஆழம் மிகக் குறைவாக இருப்பதாலும், கோடையில் முற்றிலும் வற்றியே காணப்பட்டதாலும் இந்த ஆற்றைக் கடக்க, பாலங்கள் எதுவும் காலனி ஆட்சிக்கு முன்னர் கட்டப்படவில்லை.

அவ்வாறு காலனி ஆட்சி ஆரம்ப கட்டத்தில் கட்டப்பட்ட கடவு, உண்மையில் ஒரு பாலமல்ல. 'காஸ்வே' என்று ஆங்கிலத்தில் அறியப்பட்ட இந்த மாதிரியான கடவுகள், தரைப்பாலங்கள் என்றழைக்கப்பட்டன. அவை ஆற்றின் நீர்மட்டத்திற்கு ஆற்றைக் கடப்பதற்குத் தகுந்தாற்போல மாட்டுவண்டிகள் செல்லவும் மனிதர்கள் செல்லவும் பயன்பட்டன. வெள்ளம் வரும் போது அவை நீரில் மூழ்கிவிடும்!

அந்த வகையில் முதல் முறையாக அடையாற்றைக் கடக்கக் கட்டப்பட்ட தரைப்பாலம், 'மார்மலாங்க் காஸ்வே'. 'மார்மலாங்க்' என்பது மாம்பலம் என்பதின் திரிபு. மாம்பலம் என்ற பெயரே மஹாபில்வக்ஷேத்திரம் என்ற பெயரிலிருந்து வந்ததாகக் கூறப்படுகிறது. ஆனால் இதற்குச் சரித்திரச் சான்று கிடைக்கவில்லை.

**மார்மலாங்க் காஸ்வே** (1):

ஆர்மேனியர்கள் (அரண்மனைக்காரர்கள் என்ற வழிமொழிச் சொல்லிலும் அறியப்பட்டவர்கள்) மதராசுக்கு, 1666ம் ஆண்டிலேயே வந்துவிட்டனர். இப்போது அந்த வம்சாவளியில் சென்னையில் அதிகமாக எவரும் இருப்பதாகத் தெரியவில்லை.

பெர்ஷியாவிலிருந்து வந்த இந்த வணிகர்கள், மதராஸ் வணிகத்தில், முக்கியமாக விலையுயர்ந்த கற்கள், துணிமணிகள் ஏற்றுமதியில் பங்கு பெற்றனர். 1688ம் ஆண்டில் இருந்து, கம்பெனி வணிகத்தில் தீவிரமாகப் பங்கேற்றனர்.

அவர்களில் ஒரு சிறந்த வணிகப் பெருமகன், கோஜா பெட்ரஸ் உஸ்கான் என்பவர். அவர்தான், 1726ம் ஆண்டில், 'மார்மலாங்க்' தரைப்பாலத்தைக் கட்டியவர். அதற்கான சான்று இருமொழிக் கல்வெட்டுச் சாசனமாக இன்றும் காணக் கிடைக்கிறது.

கத்தோலிக்கரான இவர்தான், பரங்கிமலையில் ஏறுவதற்கு வசதியாகப் படிகளும் கட்டியவர். பாலமும் அந்த படிகளும் அவரது சொந்தச் செலவில் அமைக்கப்பட்டன. 'உஸ்கான் அறக்கட்டளை' அவர் உருவாக்கியது தான். அதற்கான ஆவணங்கள் இன்றும் உள்ளன.

அவர், 1751, ஜனவரி 15 அன்று காலமானார்; உடல் வேப்பேரியில் அடக்கம் செய்யப்பட்டது. அவர் அன்று கட்டிய அந்த பாலம், 196கூம் ஆண்டில், முழு பாலமாக மாற்றப்பட்டு, மறைமலை அடிகள் பாலம் என, பெயரும் மாற்றப் பட்டது.

கி.பி., 18ம் நூற்றாண்டில் தரைப்பாலம் கட்டிய பிறகு தான் அடையாற்றைக் கடக்கும் வசதிகள் ஏற்பட்டன. முக்கியமாகக் கத்தோலிக்கர்கள் தான் அந்த பாலத்தைப் பயன்படுத்தினர். ஆங்கிலேயர்கள் அப்போது அந்த வடகரையில், அதிகமாகக் கவனம் செலுத்தவில்லை. வடக்கு, கிழக்குப் பகுதிகள் சையதுகான் என்பவர் கைவசம் வந்தது. அவர் பெயரால், பின்னாளில் சையதுகான் பேட்டையாகிக் காலப்போக்கில் சைதாப்பேட்டையாகப் பரிணமித்தது.

**அடையாற்றின் இரண்டாவது பாலம்:**

எல்பின்ஸ்டன் என்பவர்,1837- 1842ம் ஆண்டு வரை, மதராசின் கவர்னராக இருந்தார். இவர் தான் மெரீனா கடற்கரையை உருவாக்கியவர். 1840ம் ஆண்டில், அடையாற்றில் இரண்டாவது பாலம் கட்டப்பட்டு, அதற்கு இவரது பெயரும் சூட்டப்பட்டது. இந்த பாலம் தான், 1973ல், 58 லட்சம் ரூபாய் செலவில், திரு.வி.க., பாலமாக மாறியது. இரண்டு ஆண்டுகளுக்கு முன், இந்த பாலத்துடன் புதிய பாலம் கட்டப்பட்டு, விரிவாக்கப்பட்டது. பழைய பாலம் இன்றும் உள்ளது.

கடந்த, 1876- 78 காலகட்டத்தில் ஒரு பெரும் புயல் மதராசைத் தாக்கியபோது பழைய பாலம் வெகுவாகப் பாதிக்கப்பட்டது. பாலத்தின் ஒரு தூண் புயலால் தகர்க்கப்பட்டது.


பிரிட்டிஷ் காலத்தில் கட்டப்பட்ட அடையாறு எல்பின்ஸ்டன் பாலம்,
இதன் அருகில் தான் தற்போதைய புதிய திரு.வி.க., பாலம் கட்டப்பட்டுள்ளது.

கடந்த, 1840ம் ஆண்டு வரை, அடையாற்றின் வடபகுதியில் தான் பண்ணை இல்லங்கள் கட்டப்பட்டன. கைமாறி விட்ட வீடுகளில் பல, இப்போது அரசுக்குச் சொந்தமாக உள்ளன. சில, தனியார் வசமுள்ளன. இன்று போட்கிளப் இயங்குமிடம், 1892ம் ஆண்டு வரை ஒரு ஆங்கிலேயருக்குச் சொந்தமான பண்ணை வீடாகத்தான் அடையாற்றை ஒட்டி இருந்தது.

மற்றொன்று 'யெர்ரோலைட்' என்ற பெயர் கொண்டது. இன்று அங்குதான் ஆந்திர மஹிள சபா உள்ளது. சற்றே வடபுறம் இருந்த, 'பக் ஹவுஸ்' இப்போது, சத்ய சாய்பாபா பிரார்த்தனை மையமாக செயல்படுகிறது.

இந்த பாலம் கட்டிய பின், அடையாற்றின் தெற்குப் பகுதி ஆங்கிலேயர்களின் ஆவலைத் தூண்டியது. அவ்வாறு தெற்குக் கரையில், கடற்கரையருகில் கட்டப்பட்ட இல்லங்களில் முக்கியமானது, 27 ஏக்கரில், ஹட்டல்ஸ்டோன் தோட்டம். 1780ம் ஆண்டில், ஜான் ஹட்டல்ஸ்டோன் என்ற ஆங்கிலேயரால் உருவாக்கப்பட்டது. அதே போல தென்கரையில், சிறிதே மேற்கில், எல்பின்ஸ்டன் தோட்டம் உருவானது.

ஆக இந்த இரண்டு கட்டடங்கள் தான், எல்பின்ஸ்டன் பாலத்தின் தெற்கில் இரு மருங்கிலும் இருந்தன. வேறு பெரிய வீடுகள் எதுவும் கிடையாது. 19ம் நூற்றாண்டில், அன்றைய அரசு அலுவலகங்கள் உதகமண்டலத்திற்கு மாற்றப்பட்டன. அதனால், கேட்பாரற்று இருந்த இந்த தோட்ட வீடுகளும், முதல் வாய்ப்பு கிடைத்தபோது விற்கப்பட்டன.

**தியாசபிகல் சொசைட்டி**:

வரலாறு எதிர்பாராத திருப்பங்களை தன்னுள் அடக்கியுள்ளது. அதில் ஒன்று அடையாறு தியாசபிகல் சொசைட்டி மதராசுக்கு வந்த நிகழ்வு.

அதன் துவக்கம் அமெரிக்காவில். ரஷ்யப் பெண்மணியான ஹெலனா பெட்ரோவ்னா பிளாவட்ஸ்கியும், கர்னல் ஹென்றி ஆல்காட் என்பவரும், தியாசபிகல் சொசைட்டி எனப்படும் பிரம்மஞான சபையை அமெரிக்காவில், 1875ல் நிறுவினர்.

இந்தியாவில் அந்த சபையின் தலைமையகத்தை நிறுவ நாட்டம் கொண்ட அவர்கள், ஒரு இடத்தை தேடிக் கொண்டிருந்தனர். பம்பாய், காசி முதலிய இடங்களில் சில நாட்கள் கழித்த பின், காசியிலிருந்து மதராஸ் வந்த அவர்கள், ஹட்டல்ஸ்டோன் கட்டடத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டனர்.

அப்போதைய நிலையில், ஹட்டல்ஸ்டோன் தோட்டம் இயற்கையின் சொல்லொணா அழகுடையதாய் இருந்திருக்க வேண்டும். அமைதியான சுற்றுச்சூழலையும் அழகையும் ஒரு பெரிய ஆலமரத்தையும் தன்னுள் கொண்டிருந்த அந்த பகுதி, மேலை நாட்டினரை ஈர்க்கும் தன்மையுடையதாகவும் இருந்தது.

அப்போது சிறிது விரிவாக்கப்பட்டு, மொத்தமாக, 30 ஏக்கர் நிலப் பரப்பு கொண்டிருந்த அந்த பண்ணையில் இரு வீடுகளும் இருந்தன. அவற்றின் மதிப்பு அன்று, 600 சவரன் அதாவது இந்திய மதிப்பில், 8,500 ரூபாய் என்று தெரிந்து கொண்ட இருவரும், சற்றும் தாமதியாமல், வாங்கி விட்டனர். பத்திரம், 1882, நவம்பர் 17ம் தேதி அன்று பதிவு செய்யப்பட்டது. அதை முடித்துக் கொடுத்தவர் இந்திய சபை உறுப்பினர் பி. அய்யலு நாயுடு என்பவர்! அந்த நாள் தான் இன்றும் சபையின் பிறந்த நாளாகக் கொண்டாடப்படுகிறது.

உறுப்பினர்கள் எண்ணிக்கை அதிகரித்ததால், 20ம் நூற்றாண்டில் அதன் பரப்பளவு, 250 ஏக்கராக ஆகிவிட்டது. மற்றும் பல கட்டடங்களும் கட்டப்பட்டன. பல தோட்டங்கள் உண்டாக்கப்பட்டன. அவை ஆல்காட், பெசன்ட், தாமோதர் என்ற பெயர்களில் அழைக்கப்பட்டன.

இதனால் உண்டான மிகப்பெரிய பயன் என்னவெனில், அடையாறு டெல்டா நன்கு பராமரிக்கப்பட்டது. அங்கு பெரும் கான்கிரீட் கட்டடங்கள் எழுப்பப்படவில்லை ஆதலால். பறவைகள் சரணாலயமும் காக்கப்பட்டது. சுற்றுச்சூழலும் பாதுகாக்கப்பட்டது. இல்லையெனில் அந்த பகுதியும் அதன் வடகரையைப் போல, முற்றிலும் பாழாகியிருக்கும்.

அதேபோல சற்றே மேற்கில், அடையாற்றின் தென்கரையில், 'எல்பின்ஸ்டன் பார்க்' என்ற ஒரு தோட்ட வீடும் இருந்தது. அதன் பரப்பளவு அந்த காலத்தில், 158 ஏக்கர். ஆற்றை நோக்கிய ஒரு பெரிய பங்களாவும் இருந்தது.

**காந்தி நகர்:**

அயர்லாந்து கத்தோலிக்க கிறிஸ்தவர்களால் மதராசில், 1875ல் துவக்கப்பட்ட ஒரு நிறுவனம், 'பேட்ரீஷியன் பிரதர்ஸ்'. டாக்டர் பென்னலி என்ற மதராசின் அன்றைய ஆர்ச் பிஷப், இவர்களை கத்தோலிக்க அனாதை நிறுவனத்தை பராமரிக்க அழைத்தார். சகோதரர் பால் ஹ்யூஜஸ் மற்றும் சகோதரர் பிண்டன் பார்க்கின்சன் என்ற இரு அயர்லாந்து நாட்டவர், இந்தியா வந்தனர்.

அந்த நிறுவனம் ஆர்மேனியத் தெருவில் இயங்கிக் கொண்டிருந்தது. அதற்காக பெரிய இடம் தேடிக் கொண்டிருந்த செயின்ட் பேட்ரிக் சொசைட்டிக்கு, இந்த, 1158 ஏக்கர் நிலமும் பங்களாவும், 1885, ஜூலை 1ம் தேதி அன்று ஆங்கிலேயரால், விற்கப்பட்டது. ஆனால் பின்னர் வந்த, ஆர்ச் பிஷப்புடன் நேர்ந்த சச்சரவால் பரப்பளவு குறைக்கப்பட்டது.

சிறு சிறு பகுதிகளாக விற்கப்பட்டு பின்னர் காந்தி நகர் கட்டட சொசைட்டிக்கு பெரும் பகுதி விற்கப்பட்டது. அப்படி சென்னையில் சுதந்திரத்திற்குப் பின்னர் உருவாக்கப்பட்ட முதல் புறநகர்ப் பகுதி தான் காந்தி நகர்.

இன்றும் செயின்ட் பேட்ரிக் பள்ளி வளாகத்தில், பழைய ஆங்கிலேயர் கட்டிய விடுதி அப்படியே பராமரிக்கப்படுகிறது. அதற்கு அருகில் அடையாற்றங்கரையில் இக்கட்டடத்தின் வரலாறு கூறும் கல்வெட்டு, 1950களில் ஏற்பட்ட மாற்றங்களால் மறைந்து விட்டது.

[1] Madras Tercentenary Volume 1939 page 61[2] Madras tracing the history from 1639 K. R. A. Narasiah page 206 (கட்டுரையாளர் - எழுத்தாளர், ஆய்வாளர்)

நன்றி: தினமலர்

---



Mr. K R A Narasiah
narasiah267@gmail.com

# 21. சென்னையின் நீர்வழித்தடங்கள் - பக்கிங்ஹாம் கால்வாய்

– நரசய்யா

**பக்கிங்ஹாம் கால்வாயை புரிந்து கொண்டிருக்கிறோமா?**

சென்னையின் நீர்வழித்தடங்களில் முக்கியமானவை மூன்று. அவற்றில் கூவமும், அடையாறும் பழமை வாய்ந்த நதிகள். பக்கிங்ஹாம் கால்வாய், மனிதனால் உருவாக்கப்பட்டது. இந்தியாவிலேயே மிகவும் நீளமான, உப்புநீர்க் கால்வாயான இதன் வரலாறே, ஒரு அதிசயம் தான்.

கடந்த, 1639ம் ஆண்டில், சென்னைக்கு ஆங்கிலேயர் வந்த நேரத்தில், எழுமூர் ஆறு என்று ஒரு நதி, வடக்கிலிருந்து தெற்கு நோக்கி பாய்ந்து கொண்டிருந்தது. இது, கரையோரமாக ஏழு கிராமங்களைத் தாண்டி வந்து கொண்டிருந்ததால், இதற்கு எழுமூர் ஆறு என்ற பெயர் இருந்தது. இதை ஆங்கிலேயர்கள், அன்று, 'நார்த் ரிவர்' (வடக்கு ஆறு) என்று அழைத்தனர். இன்றிருக்கும் ராஜீவ்காந்தி பொது மருத்துவமனையருகில், சற்றே கிழக்கு நோக்கிச் சென்று, பின்னர் தெற்காக ஓடி, கூவத்தில் கடலருகில் கலந்து விட்டிருந்தது. கூவம், பொது மருத்துவமனையருகில் சற்றே தெற்கு நோக்கிச் சென்று, பின்னர் கிழக்காகத் திரும்பிக் கடலில் சங்கமம் ஆயிற்று.

கூவமும் எழுமூர் ஆறும், பொது மருத்துவமனையருகில் மிகச் சமீபமாகச் சென்று கொண்டிருந்தன. அவ்வப்போது வரும் வெள்ளத்தைத் தடுக்கவேண்டி, 1696ம் ஆண்டில், இவ்விரு ஆறுகளையும் சேர்க்க வேண்டியதாயிற்று. இக்குறுகிய இடைவெளி இருந்த இடத்தில், ஒரு சிறு செயற்கை ஓடை வெட்டப்பட்டது. இதற்கு அன்றைய பெயர் 'கட் கெனால்'. அப்படித்தான் ஒரு தீவு உண்டாயிற்று. பின்னர் அதுவே தீவுத்திடலானது. அதன் வடகிழக்கில் சற்றே மேடான பகுதிக்கு, நரி மேடு என்று பெயரிட்டனர். எழுமூர் ஆறு, சில ஆண்டுகளில் மறைந்து விட்டது. (இப்போது இதுதான் ஓட்டேரி நல்லா என்று சிலர் நம்புகின்றனர்.) ஆங்கிலேயர் வந்து, 175 ஆண்டுகளுக்குப் பின், அதாவது, 1806ம் ஆண்டில், 'பேசில் கோக்ரேன்' என்ற ஒரு வணிகரால், முன்னர் எழுமூர் நதி ஒடிய வழியில், ஒரு உப்புநீர் வழி, 11 மைல் தூரத்திற்கு அமைக்கப்பட்டது.

**'லாக் கேட்'**:

பேசில் கோக்ரேன், கப்பல்களுக்கு சாமான் வழங்குபவராக (சப்ளை காண்ட்ராக்டர்) இருந்தார். அவருக்கு, இப்படி ஒரு கால்வாய் வெட்டினால், அதன் மூலம் சரக்குகளை சிறு மிதவைகளில் சொற்பப் போக்குவரத்துச் செலவில் எடுத்துச் செல்லலாம் என்று அன்றே தோன்றியது ஆச்சரியத்தை அளிக்கிறது. அதேநேரத்தில், இன்று கூட நாம் இந்த சிக்கன போக்குவரத்து முறையைச் சரியாக அறிந்துகொள்ளவில்லை என்பதும் வருத்தத்தை அளிக்கின்றது!பேசில் கோக்ரேன், கல்கத்தாவிலும் அன்றைய மெட்ராசிலும், மாவு மில்களும் அடுமனைகளும் வைத்திருந்தார். நிறைய செல்வம் சேர்ந்த பின், இங்கிலாந்து சென்று விட்டார். பின்னர் சில ஆண்டுகள், 'ஆர்பத்நாட் கம்பெனி', இதற்குச் சொந்தம் கொண்டாடியது.

இதன் மூலம் பொருளீட்டும் முறை தெரிந்த பின்னர், ஆங்கில மேலாண்மை, இந்தக் கால்வாயை, 1837ல் தனதாக்கிக் கொண்டு, அதை பழவேற்காடு ஏரி வரை, 24.9 மைல் தூரத்திற்கு நீட்டித்தது. தொடர்ந்து இக்கால்வாயில் படகு போக்குவரத்து அதிகரித்த காரணத்தால், 1857ம் ஆண்டின் இறுதியில், அங்கிருந்து வடக்காக துர்க்கராயபட்டினம் வரை, 69 மைல் தூரத்திற்குக் கால்வாய் வெட்டப்பட்டது. அப்போது 'கோக்ரேன்' என்ற பெயர் நீக்கப்பட்டு, கிழக்குக் கடற்கரைக் கால்வாய் என்றழைக்கப்பட்டது. 1876ம் ஆண்டு, இன்னும் நீளம் அதிகரிக்கப்பட்டு, கிருஷ்ணபட்டினம் வரை வெட்டப்பட்டது.

இக்கால்வாய் இயற்கையானது இல்லை ஆகையாலும், உப்பு நீர்வழி என்பதாலும், அதன் நீர்மட்டம் கடலைப் பொறுத்து இருந்ததாலும் (பல இடங்களில் கடலுக்கும் இந்த நீர்வழிக்கும் சிறுகால்வாய்கள் வெட்டப்பட்டிருந்தன), அதன் நீர்நிலையைச் சமமாக வைத்திருக்க ஒரு யுக்தி தேவைப்பட்டது. முதன் முதலாக சடையன்குப்பம் என்ற இடத்தில், ஒரு அடைப்பான் அமைக்கப்பட்டது. 'லாக்' என்றழைக்கப்பட்ட இது, (இன்றும் அடையாறு பகுதியில் லாக் சந்து, தெரு போன்ற பெயர்களைக் காணலாம்) ஒரு புதுமையான அன்றைய கண்டுபிடிப்பு. அதன் செய்முறை இவ்வாறிருந்தது. கடலிலிருந்து வரும் கால்வாய், இந்த நீர்வழியில் கலக்குமிடத்தில், இரு ஜோடி மரத்தாலான தானியங்கிக் கதவுகள் அமைக்கப்பட்டன. அக்கதவுகள், கடலை நோக்கி மூடுவதாகவும், கால்வாயை நோக்கித் திறப்பதாகவும் இருந்தன. கடல் நீர்மட்டம் அதிகரிக்கும் வேளையில், கதவுகள் திறந்து நீரைக் கால்வாய்க்குள் வரவிடும்.

கடல் மட்டம் குறைகையில் கால்வாயின் அதிக நீர்மட்ட அழுத்தத்தால், அவை மூடிக்கொண்டு விடும். இவ்வாறாக கால்வாயின் நீர்மட்டம் நிலையாக இருக்க முடிந்தது. இவ்வமைப்பு இரு காரணங்களால் தேவைப்பட்டது. ஒன்று, படகுகளும் மிதவைகளும் செல்ல, கால்வாயின் நீர்மட்டத்தை ஒரே நிலையில் வைத்திருக்கவும்,

அதேநேரத்தில் கூவம் போன்ற நதிகள், ஒரே வேளையில் வடிந்து விடாமலும் இருக்க உதவியது. அப்போதே கூவத்திற்குள் கழிவுநீர், பல இடங்களில் விடப்பட ஆரம்பித்து விட்டது. ஆயினும் இன்று போல, அமிலக் கலப்புகள் இருக்கவில்லை.



1898ம் ஆண்டில் பக்கிங்ஹாம் கால்வாய். இடம்: பேசின் பாலம்

**எவ்ளோ பெரிய பெயர்!**

இந்த நேரத்தில் தான், கூவத்தையும் அடையாற்றையும் இணைக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அதற்காக ஒரு ஜங்ஷன் கால்வாய் வெட்டப்பட்டது. இது, பஞ்சத்தை எதிர்த்துப் போராட வேண்டித்தான் உண்டாக்கப்பட்டது. 1877 - 1878ம் ஆண்டுகளில், மெட்ராஸ் நகரை ஒரு பெரும் பஞ்சம் தாக்கியது. 60 லட்சம் மனிதர்கள் பஞ்சத்தாலும், அதைத் தொடர்ந்த காலரா நோயாலும் மரணமடைந்தனர். அப்போது மெட்ராஸ் கவர்னராக இருந்த, 'ரிச்சர்ட் டெம்பிள் ந்யூஜண்ட் பிரிட்ஜெஸ் சாண்டோஸ் கிரென்வில் பக்கிங்ஹாம் அண்ட் சான்டோஸ் பிரபு' என்பவர் தான், கூவத்தையும் அடையாற்றையும் இணைக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்தார். ஆகையால் அவர் பெயரால், இக்கால்வாய், பக்கிங்ஹாம் கால்வாய் என்றழைக்கப்பட்டது. அவர் இக்கால்வாயை வெட்டியதற்குக் காரணம், பஞ்சத்தை எதிர்த்துப் போராட, வேறு இடங்களினின்றும் தருவிக்கப்படும் உணவுப் பொருட்களின் போக்குவரத்துக்காகத் தான்.

முப்பது லட்சம் ரூபாய் செலவில் அப்போது வெட்டப்பட்ட கால்வாயின் நீளம், 5 மைல்கள். அப்போதே தெற்கு நோக்கிக் கால்வாயை நீட்டிக்கவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அதன் விளைவாக, 35 மைல் நீளத்திற்குக் கால்வாய் தெற்கு முகமாக வெட்டப்பட்டது. ஆரம்பத்தில் இக்கால்வாய் திறந்த அலைவாய்க் கால்வாய் (ஓப்பன் டைடல் கெனால்) என்றே அறியப்பட்டது. அதாவது, கடல் நீர் மட்டத்தைப் பொறுத்து இதன் மட்டமும் இருக்கும். பின்னர் தான் 'லாக் கேட்'டுகள் அமைக்கப்பட்டன.

**26 ஆயிரம் டன் சரக்கு:**

இக்கால்வாயைப் பற்றிய சிறந்த நூல் ஒன்று, 'ஹிஸ்டரி ஆப் தி பக்கிங்ஹாம் கெனால் பிராஜக்ட்' என்ற பெயரில், 1898ம் ஆண்டு, ஏ.எஸ்.ரஸ்ஸல் என்ற ஒரு பொறியியலாளரால் எழுதப்பட்டது இன்றும், 'மெட்ராஸ் லிடரரி சொசைடி' நூலகத்தில், அந்த நூல் உள்ளது. வடக்கில், 178 சதுர மைல்கள் பரப்பளவாக இருந்த பழவேற்காடு ஏரியுடன், இக்கால்வாய் கலக்குமாறு வெட்டப்பட்டது. இக்கால்வாயின் முதல் 'லாக் கேட்', சடையன்குப்பம் என்ற, மெட்ராசிலிருந்து, 7 மைல் தொலைவிலுள்ள இடத்தில்தான் அமைக்கப்பட்டது. ஆனால், 1895ம் ஆண்டளவில், பராமரிக்க இயலாத நிலையில் இது கைவிடப்பட்டது. இந்த நிலையில், 1883ம் ஆண்டில், மீண்டும் 'லாக் கேட்'டுகள் அமைக்கத் திட்டமிடப்பட்டு, சட்ராஸ் அருகில் கட்டப்பட்டது. மாமல்லபுரம் அருகே உள்ள சதுரங்கப்பட்டினம் தான் அன்றைய சட்ராஸ். இது, சங்ககாலத்தில் 'நீர்ப்பெயற்று' என, அறியப்பட்டது.

கடந்த, 1877 - 1879ம் ஆண்டுகளில் பெருமளவு ஏற்பட்ட வெள்ளத்தால், பக்கிங்ஹாம் கால்வாய் மொத்தமாகச் சேதமடைந்தது. பழுது பார்க்கப்பட்ட பின்னர் மொத்தமாக, 33 'லாக் கேட்'டுகள் அமைக்கப்பட்டன. ஆனால், அவற்றில் கணிசமானவை, சென்னையின் வடக்கில், இப்போதைய ஆந்திராவில் தான் இருந்தன. ஏனெனில், சரக்குப் போக்குவரத்து அப்பகுதியில் தான் அதிகமாக இருந்தது. சென்னைக்கு வடக்குப் பகுதி கால்வாயில், 1890 -- 91ம் ஆண்டில், 77 டன் எடை சரக்குகள் சென்றதாகப் புள்ளி விவரங்கள் தெரிவிக்கின்றன. ஆனால், இதன் பயன் சரியாகத் தெரிந்த பின்னர், 1894 - -95ம் ஆண்டில், அதாவது நான்கே ஆண்டுகளில் மொத்தம், 26,245 டன் சரக்குகள் படகுகள் மூலம் சென்றன. ஆகையால் கால்வாய் மூலம் அரசுக்கு, வருமானமும் நன்றாகவே கிடைத்தது. முக்கியமான சரக்குகள், விறகுக் கட்டுகள், உப்பு, தானிய வகைகள் தான். சரக்குகள், பயணிகள் சென்ற புள்ளி விவரங்கள், இப்போது பெசன்ட் நகரில் உள்ள ராஜாஜி பவனில், மக்கள் தொகை கணக்கெடுப்பு பிரிவில் கிடைக்கின்றன.

கடந்த, 1878ல் அன்றைய மதராஸ் ராஜதானியின் வடபகுதியான, பெத்த கஞ்சம் வரையிலும், 1982ல், தெற்கில் மரக்காணம் வரையிலும், கால்வாய் நீண்டு

விட்டது. 1897ம் ஆண்டில், பல 'லாக் கேட்'டுகள் அமைக்கப்பட்டு விட்டன. அரசு ஆணைகளின் படி, பாப்பன்சாவடியில் படகுகள் நிற்கும் வசதி அமைக்க, 5,043 ரூபாய் செலவழிக்கப்பட்டதாக, அரசு ஆணை எண்: 15-12-1892, கூறுகிறது. இதுபோல எல்லா விவரங்களும் இன்றும் நமக்குக் கிடைக்கின்றன.



அதே இடம் தற்போது

இந்தியா விடுதலை பெற்ற பின்னரும் இக்கால்வாய் நன்றாகவே செயல்பட்டு வந்தது. ஆனால் அதற்கு முன்னரே 'லாக் கேட்'டுகள் பராமரிப்பு செலவு மிக அதிகமாக இருந்ததால், அவை ஒவ்வொன்றாக கைவிடப்பட்டன. பெருகி வந்த தரை வழிப் போக்குவரத்தும், அதன் விரைவும் காரணங்களாக இருந்தன. பின்னர், 1965 - 66ம் ஆண்டுகளில் வீசிய பெரும் புயலில் இக்கால்வாய் மிகவும் பழுதடைந்து விட்டது. அதன் வருவாயும் வெகுவாகக் குறைந்து விட்ட நிலையில், அதன் பராமரிப்பு முற்றிலும் கைவிடப்பட்டது. கழிவுநீர் பெருக்கத்தால் அதிகளவில் பாதிக்கப்பட்டது, பக்கிங்ஹாம் கால்வாயும், கூவமும் தான்.

இக்கால்வாயில் ஒருகாலத்தில், 1,200 படகுகள் வரை சென்று கொண்டிருந்தன. அவற்றில் பெரும்பகுதி வடபகுதியில். தெற்கில், 350 வரை போய்க் கொண்டிருந்தன. ராஜாஜி பவனில் கிடைக்கும் புள்ளி விவரங்கள் படி, 1960 - -61ம் ஆண்டில், 1,237 படகுகள் 18,737 பயணிகளுடனும், 2,16,538 டன் சரக்குகளுடனும் சென்றன. 1951 - -52ல் ஆந்திரா தனி மாநிலமாகப் பிரிக்கப்பட்ட பின்னர் போக்குவரத்து குறைய துவங்கியது.

**காப்பாற்றிய கால்வாய்:**

சரக்குப் படகுகளுக்கு பதிப்பிக்கப்பட்ட எடையின் படி ஒரு டன்னுக்கு, 4.50 ரூபாய் வசூல் செய்யப்பட்டது. பயணிகள் படகுகளுக்கு 6 ரூபாய் வசூலிக்கப்பட்டது. ஆனால் பராமரிப்புச் சுமையாக ஆண்டுக்கு 2 லட்சம் ரூபாய் தேவைப்பட்டதால், இந்த வருவாய் போதவில்லை.

பின்னர் வந்த, மேம்பால ரயில் திட்டம் (எம்.ஆர்.டி.எஸ்.,) தெற்குப் பகுதி பக்கிங்ஹாம் கால்வாய்க்கு ஒரு முடிவே கட்டிவிட்டது. ஆனால் ஆந்திராவிலோ இன்றும் இக்கால்வாய் சிறப்பாகச் செயல்பட்டு வருகிறது.பக்கிங்ஹாம் கால்வாய் சுனாமியின் போது பெரும் பணி ஆற்றியது. சுனாமி பேரலை வீசிய போது, இக்கால்வாய் சென்னை நகரத்திற்கு ஒரு தடுப்புச் சுவர் போல இருந்தது. பெரும் அலைகளின் சீற்றத்தை, இது உள்வாங்கிக் கொண்டு நகரத்தைக் காப்பாற்றியது. அதன் இருமருங்குக் கரை செடிகொடிகள் அலையின் சீற்றத்தைத் தணித்தன.

துரதிருஷ்டவசமாக இப்பெரும் உதவியை நாம் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்பது வருத்தத்திற்கு உரியது.



**பஞ்சத்தை எதிர்கொண்ட பக்கிங்ஹாம் கால்வாய்!**

அதிசயம்! ஆனால் உண்மை - ஆமாம்; சென்னையின் நீர்வழித்தடங்களைக் குறித்து நாம் ஆலோசிக்கிறோமோ இல்லையோ, பல ஆங்கிலேயர்கள் அந்நாட்களிலேயே நினைவு கூர்ந்துள்ளனர். பிளாரன்ஸ் நைட்டிங்கேல் என்ற ஒரு பெண்மணியைப் பற்றி நம்மில் அறியாதவர்கள் இருக்க முடியாது. 'லேடி வித் அ லேம்ப்' என்றறியப்பட்ட அப்பெண்மணி, செவிலியர்களுக்கு முன்னோடி. ஆனால் அவர், சென்னையின் நீர்வழித்தடங்களைப் பற்றி, 19 ம் நூற்றாண்டிலேயே எழுதியுள்ளார் என்று எத்தனை பேருக்குத் தெரியும்?

அவர் முக்கியமாக இவற்றைப் பற்றி நினைத்தற்குக் காரணம், சுகாதாரத்திற்கு இன்றியமையாதது, கழிவுநீர்க் கால்வாய்கள் என்ற கருத்தின் அடிப்படையில் தான். நோய்கள் வரக் காரணமே, கழிவுநீர் சரிவர அகற்றப்படாதது என்ற கருத்துடையவராக இருந்தார். அவர் இந்தியாவின் சுகாதாரத்தைப் பற்றி எழுதியவை, ஒரு நூலாக வெளிவந்துள்ளன. அதில் அவர் அன்றைய மதராசைக் குறித்து எழுதியுள்ள கடிதங்களும் உள்ளன. அதில், அவர் சென்னையின் நீர்வழித்தடங்களைப் பற்றியும் விரிவாகவே எழுதியுள்ளார். அவரது கடிதம், சர் ஆர்தர் காட்டன் எழுதிய, 'தி மெட்ராஸ் பேமின் - வித் அபெண்டிக்ஸ் கன்டெய்னிங் ஏ லெட்டர் பிரம் மிஸ் பிளாரன்ஸ் நைட்டிங்கேல் அண்டு அதர் பேப்பர்ஸ்' என்ற, 1877ம் ஆண்டில் பதிக்கப்பட்ட ஆங்கில நூலில் காணக் கிடைக்கிறது.

'இல்லஸ்ட்ரேட்டட் லண்டன் நியூஸ்' என்ற பத்திரிகையில், பிளாரன்ஸ், இந்தியாவைப் பற்றி பல கடிதங்கள் எழுதியுள்ளார். அந்த பத்திரிகை, இந்தியாவின் பஞ்சத்தைப் பற்றிய பல படங்களை அக்காலகட்டத்திலேயே வெளியிட்டுள்ளது. சர் ஆர்தர் காட்டன், தென்னகத்தின் நீர்வழித்தடங்களை நன்கு ஆய்ந்தவர். கோதாவரி ஆற்றை அவர் அறிந்த அளவுக்கு இந்தியர்களே தெரிந்து கொள்ளவில்லை எனலாம். தஞ்சாவூர் பகுதியிலும் அவரது பணிகள் நன்கறியப்பட்டவை.

**படகுகள் ஊர்வலம்**

கடந்த, 1879, ஏப்ரல் 28ம் தேதி அன்று, 'தி இல்லஸ்ட்ரேட்நியூஸ்' ஆங்கிலப் பத்திரிகைக்கு, பிளாரன்ஸ் எழுதிய கடிதத்தில் கூறியிருப்பதாவது:[1] ஜூலை, 1877ல் நீங்கள் இருமுறை எனது கடிதங்களைப் பிரசுரித்துள்ளீர்கள். அதில் நான் சென்னை ராஜதானியின் பஞ்சங்களைக் குறித்து எழுதியிருந்தேன். பஞ்சத்தை எதிர்கொள்ள டியூக் ஆப் பர்மிங்ஹாம் செய்த ஒரு சிறப்பான காரியம் குறிப்பிடத் தக்கது. அவர் ஒரு கால்வாயை வெட்டி, அதன் மூலம் சரக்குகளைக் கொண்டு செல்ல ஒரு வழி வகுத்தார். மதராசுக்கு வடக்கில், காகிநாடாவில் இருந்து, தெற்கு வரை, 450 மைல்கள் ஒரு கால்வாய் மூலம், படகுகள் இப்போது செல்ல முடியும். (இந்த கடிதம், 137 ஆண்டு களுக்கு முந்தையது என்பதை வாசகர்கள் நினைவு கூர்ந்து கொள்ள

வேண்டும்) அன்று, ஊர்வலம் போல, 70லிருந்து 80 படகுகள் வரை இக்கால்வாயில் சென்றது, வெனிசில் படகுகள் (கொண்டோலாக்கள்) செல்வதை நினைவூட்டியிருக்கக்கூடும்' இவ்வாறு, அவர் எழுதி இருந்தார்.

வேடிக்கை என்னவெனில், பிளாரன்ஸ், இந்தியா வந்திருக்கவில்லை! தொடர்ந்து அவர் கடிதத்திலிருந்து நமக்குத் தெரிவது, அவர் கருத்துப் படி, பிரிட்டிஷ் இந்தியாவில் பஞ்சங்களுக்குக் காரணம், உணவு பற்றாக்குறை மட்டுமல்ல. ஏனெனில் இந்தியாவின் பல இடங்களில் உணவு நல்ல அளவில் கிடைத்துக் கொண்டுதான் இருந்தது. ஆனால் அப்படி இருந்தும் உணவுப் பொருளை, உணவு குறைந்த பிரதேசத்திற்கு எடுத்துச் செல்ல போதிய போக்குவரத்து வசதி இல்லாததுதான் என்று கூறி, அவ்விஷயத்தில் பக்கிங்ஹாம் பிரபு உண்டாக்கிய பக்கிங்ஹாம் கால்வாய் சிறப்பாக அமைந்தது என்று தெளிவுபடுத்தி உள்ளார். இன்று கூட வல்லுனர்கள் கருத்துப்படி, இந்தியாவில் உணவுக்குப் பஞ்சம் இல்லை. ஆனால் வினியோகிப்பதில் தான் குறையுள்ளது என்றறிகிறோம்.

சென்னையையே பார்த்திராத அப்பெண்மணி, சென்னையின் நீர்வழித்தடங்களின், முக்கியமாகக் கழிவுநீர் பிரச்னைகளைப் பற்றி, பல ஆண்டுகளுக்கு முன்னரே நன்றாகவே புரிந்து கொண்டிருந்தார் என்பதும், அதைப் பற்றித் தமிழர்களாகிய நாம், இன்றும் சரியாக உணர்ந்து கொள்ளவேயில்லை எனபதும் இதிலிருந்து நிதர்சனமாகின்றது அல்லவா? உண்மையில் அவரது நோக்கு ஆங்கிலேய ராணுவ சிப்பாய்களைப் பற்றித்தான் முதலில் துவங்கியது. பின்னர் மற்ற சிப்பாய்களைப் பற்றியதாகவும், இறுதியில் மொத்தமாக இந்தியாவின் சுகாதார முறைகளைப் பற்றியதாகவும் மாறியது.

**வாழ்வு அல்லது சாவு**

கடந்த, 1864ம் ஆண்டில் அவர், 'இந்தியன் சானிடரி ரிப்போர்ட்' என்ற ஒரு ஆய்வறிக்கையையும் தயாரித்தார். அப்போது மதராஸ் சுகாதாரக் கமிஷனராக இருந்த, ராபர்ட் ஸ்டாண்டன் எல்லிஸ் என்பவருக்கு, இங்கிலாந்தில் நிலவும் சுகாதார முறைக்கும், இந்தியாவில் காணப்படும் சுகாதார முறைக்கும் உள்ள வேறுபாட்டைக் குறித்து, அவரது இங்கிலாந்து வருகையின் போது சுட்டிக் காட்டினார். அவரது பரிந்துரையின் பேரில், 1866ம் ஆண்டில், கேப்டன் டுல்லாக் என்பவர் அன்றைய மதராசின் கழிவுநீர்ப் பிரச்னைகள் குறித்து ஒரு அறிக்கை தயார் செய்ய இங்கிலாந்திலிருந்து அனுப்பப்பட்டார்.

அது மட்டுமல்ல. அவர் இந்தியாவில் சுகாதாரத்தைப் பற்றி ஆய்வு செய்ய, ராயல் கமிஷன் குழு அமைக்கப்பட்டபோது, அதில் பெரும் பங்கினை தானே ஏற்றுக் கொண்டார். 1874ம் ஆண்டில், ஒரு கையேடு தயாரித்தார். அதற்கு 'இந்தியாவில் வாழ்வு அல்லது சாவு' என்ற தலைப்பு கொடுத்தார். இது குறித்து, அவர் 1888,

அக்டோபர் 10ம் தேதி எழுதிய கடிதத்தில் அன்றைய அரசைக் குறை கூறியுள்ளார். மொத்தத்தில் பக்கிங்ஹாம் கால்வாய், பஞ்சத்தை எதிர்க்க உறுதுணையாக இருந்திருக்கின்றது. இதன் ஆரம்பம் அதாவது பிறப்பிடம் (ஆங்கிலத்தில் ஜீரோ பாயின்ட்), செயின்ட் மேரி பாலத்தினருகில் அமைக்கப்பட்டது. அதிலிருந்துதான் வடக்கேயும் தெற்கேயும் கால்வாய் அளவுகள் எடுக்கப்பட்டன.

முன்னரே கூறியபடி, முதலில், 178 சதுரமைல் பரப்பளவு கொண்ட பழவேற்காடு ஏரி, சென்னையின் கோட்டைப் பகுதி யிலிருந்து கோக்ரேன் கால்வாய் மூலம் இணைக்கப்பட்டது. அப்போதுதான் கூவம் ஆறு சங்கமம் ஆகுமிடத்தில், மணல் மேடு உண்டாவதும் அதனால் ஆற்றின் நீர் வேகம் தடுக்கப்படுவதும் பொறியாளர்களுக்குச் சரியாகப் புரிந்தது. அதைத் தொடர்ந்துதான் லாக் கேட்டுகள், கால்வாயின் நீர் வடிந்திடாதிருக்க அமைக்கப்பட்டன. இக்கால்வாயின் முதல் காலம் 1857லிருந்து 1883ம் ஆண்டு வரை எனக் கணக்கெடுக்கப்பட்டது. இரண்டாவது காலம் 1883 லிருந்து 1891 வரையிலானது. இந்த கால கட்டத்தில்தான் பல தீவிர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அதில் ஒன்று, கூவத்தைப் பற்றியதுமாகும். அதைப் பற்றிக் கூவம் ஆற்றைப் பற்றி வரும் பகுதியில் பின்னர் பார்க்கலாம். கடந்த, 1879ம் ஆண்டில் புயலால் இக்கால்வாய் பெரும் சேதம் அடைந்தது. பழுது பார்க்கையில் பல லாக் கேட்டுகள் கைவிடப்பட்டன. வடபகுதியில் அதாவது ஆந்திராவில் இக்கால்வாய் இன்னும் பயன்படுத்தப்படுகிறது. ஆனால் தெற்கிலோ மொத்தமாக பாழடைந்து விட்டது.



வட பகுதி 90 வது மைலாயில்



கடலில் இருந்து நீர் உள்வர அமைப்பு




பழவேற்காடு ஏரியருகில் கால்வாய்




நீர் வெளியில் செல்ல கண்மாய் அமைப்பு




பெண்ணாரில் தெற்கு அடைப்பான்



என்னூர் கடலருகில் மணல்மேடு



HISTORY

BU[illegible]INGHAM CANAL PROJECT:

WITH

A DESCRIPTIVE ACCOUNT OF THE CANAL AND
ITS PRINCIPAL WORKS,

AND

A GUIDE TO ITS FUTURE MAINTENANCE

BY

A. S. RUSSELL

MADRAS:

1898 ஆம் வருட ஆவணம்




இந்தப்படத்தில் பக்கிங்க்ஹாம் கால்வாயின் ஆரம்ப இடத்தை 0 எனக் குறிப்பிட்டுள்ளனர். அதிலிருந்து வடக்கிலும் தெற்கிலும் மைல்கள் குறிக்கப்பட்டுள்ளன.

பக்கிங்க்ஹாம் கால்வாயின் திட்ட வடிவத்தைக் கூறும் ஆவணங்களின் படங்களுக்கு நன்றி:மெட்ராஸ் லிட்டரரி சொசைட்டி நூலகம், சென்னை

[1] Florence Nightingale on Health in India: Collected Works of Florence Nightingale By Florence Nightingale, Lynn McDonald, Grard Valle

நன்றி தினமலர்:
http://www.dinamalar.com/news_detail.asp?id=1445220
http://www.dinamalar.com/news_detail.asp?id=1450842

---



Mr. K R A Narasiah
narasiah267@gmail.com

# 22. ஐரோப்பிய ஆசியக் கடல் மார்க்கத்தைச் சுருக்கும் சூயஸ் கால்வாய்

– சி. ஜெயபாரதன்




**பிரமிடுகள் எழுப்பிய காலத்துக்குக் கால்வாய்**
**பெரோஸ், பெர்ஸியர் தோண்டிய கால்வாய்**
**கிரேக்கர், ரோமர் முன்பு கைவிட்ட கால்வாய்**
**இந்தியா செல்ல நெப்போலியன் திட்ட மிட்டது**
**பூர்த்தி செய்தார் பிரென்ச் பொறியியல் நிபுணர்.**
**நீர் மார்க்க, கடல்மட்ட சூயஸ் கால்வாய்.**

---

**முன்னுரை**: கி.மு.2650 ஆண்டு முதலே எகிப்தின் வல்லமை படைத்த கல் தச்சர்கள் பிரமிடுகள் [Pyramids] மற்றும் பலவித பிரம்மாண்டமான சிற்பப் பொறியியல் அற்புதங்களைப் படைத்ததற்குச் சான்றுகள் இப்போதும் அங்கே உள்ளன! நைல் நதியின் மேற்குக் கரையில் கட்டப்பட்ட பிரமிக்கத் தக்க பிரமிடுகள், இறந்தவரைப் புதைக்க அமைத்த கற்கோபுரங்கள்! நாற்புறச் சம சாய்வுக் கோண வடிவான

பிரமிடுகள் கல் தச்சர்களின் வடிவியற் கணித ஞானத்தையும் [Geometrical Mathematics], கூரிய நிபுணத்துவத்தையும் காட்டுகின்றன. சிற்பக் கலையும், ஓவியக் கலையும் உன்னத நிலையில் இருந்ததற்கு எகிப்தின் பிரமிட் கோபுரங்கள், கால வெள்ளம் அடித்துச் செல்லாதபடி நிலைத்த சரிதைகளாய் நிமிர்ந்து நிற்கின்றன! ஆனால் பெரோ மன்னர்கள் முதலில் தோண்டிய கடல் இணைப்புக் கால்வாய் பலமுறைச் சிதைந்து, பல்வேறு வல்லுநர்களால் பலவித வடிவங்களில் பலமுறை மாற்றமாகி இப்போது புது உருவம் பெற்றுள்ளது!



[The Suez Canal (1854-1869)]

முதல் கால்வாய் மூன்றாம் துத்மோஸிஸ் [Tuthmosis III] மன்னரால் தோண்டப் பட்டாலும், கி.மு. ஆறாம் நூற்றாண்டில் ஆண்ட மன்னன் பெரோ நெக்கோ [Pharaoh Necho] கட்டியதாகத்தான் சரித்திரச் சான்றுகள் கிடைத்துள்ளன. பின்னால் எகிப்தைக் கைப்பற்றிய பெர்ஸிய மன்னன் முதலாம் தாரியஸ் [Darius I] வெட்டப்பட்ட கால்வாயை முடிக்குமாறு உத்தரவிட்டதாக அறியப்படுகிறது. அந்தக் காலத்தில் கட்டிய கால்வாய், இரட்டை அமைப்பாடுகளைக் கொண்டது. முதலாவது, பெரிய பிட்டர் ஏரியை [Bitter Lake] சூயஸ் வளைகுடாவுடன் இணைத்தது; இரண்டாவது கட்டத்தில் பிட்டர் ஏரியை நீள நைல் நதிச் சங்கமப் பிரிவுகள் ஒன்றுடன் சேர்ப்பது. கால்வாயைக் கட்டும் பணியில் சுமார் 120,000 எகிப்திய பாமரர் மாண்டதாக அறியப்படுகிறது! புகழ்பெற்ற டாலமி காலத்தில் [Ptolemaic Era (323-30 B.C.)] கால்வாய்

நீளமாக்கப்பட்டுச் சீரிய முறையில் இருந்ததாக வரலாறுகளில் உள்ளது. அதன் பின்னால் கால்வாய் சிதைவுற்றதை ரோமாபுரிப் பேரரசர் டிராஜன் [Roman Emperor Trajan (A.D.98-117)] சீர்ப்படுத்தினார்! பிறகு அரேபிய மன்னர் அமர் இபன்-அல்-ஆஸ் [Amr Ibn-Al-Aas] கால்வாயைச் செம்மைப் படுத்தினார்.



பிரமிட், சூயல் & பூர்வீக எகிப்து

எட்டாம் நூற்றாண்டுக்குப் பிறகு கால்வாய் மறுபடயும் செப்பமிட முடியாத நிலையில் சிதைந்து கிடந்தது! 1671 இல் புகழ்பெற்ற ஜெர்மன் கணித மேதை லெப்னிட்ஸ் [Leibnitz (1646-1716)] தனது எகிப்து விஜயத் திட்டத்தின் போது, பிரெஞ்ச் மன்னர் பதினான்காம் லூயியிடம் [Louis XIV] கடல்களை இணைக்கும் அத்தகைய கால்வாயைப் பற்றி உரையாடியதாகத் தெரிகிறது. தற்போதைய கால்வாய் முயற்சியில் சுல்தான் மூன்றாம் முஸ்தபா [Sultan Mustafa III (1757-1773)], அடுத்து நெப்போலியன் ஆரம்பிக்க தள ஆய்வு வேலைகள் ஆரம்பமாயின. அவ்வாறு எகிப்து நாகரீகத்தில் பிறந்து, பல மன்னர்களின் வசப்பட்ட ஒரு பண்டைக் கால்வாய்,

பல்லாயிரம் ஆண்டுகள் தாண்டி கி.பி.1869 ஆம் ஆண்டில் பிரென்ச் நிபுணர்களால் புத்துயிர் பெற்றுப் பூர்த்தியானது ஒரு சுவையானப் பொறியியல் வரலாறு!

**நாலாயிரம் ஆண்டுகளுக்கு முந்தித் தோன்றிய கால்வாய்!**

கி.மு.1920 ஆண்டில் எகிப்து பெரோஸ் மன்னர்கள் [Pharaos] காலத்திலே மத்தியதரைக் கடலையும், செங்கடலையும் கால்வாய் மூலம் இணைக்கும் முன்னோடிப் பணிகள் முதலில் ஆரம்பிக்கப் பட்டன என்று எகிப்து சூயஸ் கால்வாய்ப் பல்கலைக் கழகத்தின் பேராசிரியர் டாக்டர் மம்தோவ் ஹம்ஸா [Dr.Mamdouh Hamza] அறிவிக்கிறார். டாக்டர் ஹம்ஸா நிலவியல் யந்திரப் பொறியியல் நிபுணர் [Civil Engineer, Soil Mechanics]. நீள நைல் நதியின் கடல் சங்கமப் பகுதியில் ஒரு கால்வாயை வெட்டி, இரண்டு கடல்களையும் சேர்த்ததாக வரலாறுகளில் அறியப் படுகிறது. முற்காலத்தில் ஈரோப்பிலிருந்து இந்தியாவுக்கு வர நைல் நதியின் வழியாகக் கப்பல்கள் முதலில் பயணம் செய்து, கால்வாய் மூலமாகக் கடலை அடைந்ததாகத் தெரிகிறது. அதன் பின்பு கால்வாய் கவனிப்பாரற்று அடுத்து கிரேக்க, ரோமாபுரி வேந்தர்களால் பல தடவைத் தோண்டப் பட்டு மீண்டும் புறக்கணிக்கப் பட்டது! எகிப்து நாடு அரேபியர் கைவசம் ஆன பிறகு, மறுபடியும் கால்வாய் தோண்டப்பட்டு, நிரப்பப் படாமல் பல்லாண்டுகள் கிடந்தது! பின்னால் கால்வாயில் நீர் நிரப்ப பட்டது.



இந்தியாவுக்கும் ஈரோப்பிற்கும் எகிப்து கால்வாய் வழியாக சுருக்குப் பாதை அமைக்க முதன்முதல் ஆலோசனை கூறியவர் பிரெஞ்ச் அதிபதி நெப்போலியன்! நூறு மைல் நீளம், 200 அடி அகலமுள்ள சூயஸ் கால்வாய், ஐரோப்பாவில் ஏற்பட்ட தொழிற்புரட்சியின் விளைவாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டில், மனிதரால் படைக்கப்பட்ட மகத்தான ஒரு பொறியியல் பூதக் கால்வாயாகக் கருதப்படுகிறது! அந்த நூறு மைல்களைக் கடக்க ஒரு கப்பலுக்குச் சுமார் 15 மணி நேரம் எடுக்கிறது. பத்தாண்டுகளாக 2.4 மில்லியன் பணியாளிகள் அல்லும் பகலும் பணி செய்து, கட்டிய கடற்பாதை அது! கால்வாய் பூரணமாக 125,000 நபர்கள் உயிரைப் பலி கொடுத்துள்ளதாக அறியப் படுகிறது!




டோக்கியோ, ராட்டர்டாம் [ஹாலந்து] கடற் பயண தூரத்தை 23% சதவீதம் சூயஸ் கால்வாய் குறைக்கிறது! சௌதி அரேபியா துறைமுகம் ஜெட்டாவிலிருந்து [Jeddah], கருங்கடல் துறைமுகம் கான்ஸ்டென்ஸாவுக்குச் [Constanza] செல்லும் கப்பல், சூயல் மூலமாகச் சென்றால் 86% தூரத்தைத் தவிர்க்கிறது! அதுபோல் ஆ.ஃபிரிக்கா முனை வழியாகக் கப்பல் லண்டனிலிருந்து பம்பாயிக்குச் சென்றால் 12,400 மைல்! ஆனால் சூயஸ் கால்வாய் வழியாகச் சென்றால் லண்டன், பம்பாய் கடல் தூரம்: 7270 மைலாகச் சுருங்குகிறது.

**ஐரோப்பியர் கால்வாய் கட்டச் செய்த பெருமுயற்சிகள்**

1798 இல் நெப்போலியன் இரண்டு கடல்களையும் நேரடியாகக் கடல்மட்டத்தில் இணைக்கத் திட்டங்கள் தயாரிக்க உத்தர விட்டார். அவரது சிவில் எஞ்சினியர் லெப்பியர் [LePere] 1799 இல் தளமட்ட அளவுகள் எடுத்துச் செங்கடல், மத்தியதரைக் கடலை விட 33 அடி அதிக உயரத்தில் இருப்பதாகத் தவறாகக் கணக்கிட்டுக் கால்வாயை வெட்டினால் செங்கடல் வெள்ளம் பல நகர்களை மூழ்க்கிவிடும் என்று எச்சரிக்கை செய்தார்! பிரெஞ்ச் கால்வாய் சிறப்புநராகப் பெயர் பெற்ற, ∴பெர்டினென்ட் தி லெஸ்ஸெப்ஸ் [Ferdinand de Lesseps] 1831-1838 ஆண்டுகளில் இளவயதில் எகிப்து வந்த போது அந்த தளமட்ட மதிப்பீடு பிழையானது என்று நிரூபிக்கப் பட்டது. 1854 இல் கால்வாய்த் திட்டம் தயாரித்த லெஸ்ஸெப்ஸே, அதைக் கட்டி முடிக்கும் பணிக்கு பிரதம அதிபதியாக நியமனம் ஆனார்.



அதே சமயத்தில் முகமது சையத் இஸ்மெயில் பாஷா எகிப்தை ஆள வந்த போதுதான் [1854-1863], அவரது அனுமதியில் பிரென்ச் கம்பெனியின் ஆரம்ப முயற்சி வெற்றி யடைந்தது. 1858 இல் பிரென்ச் சூயஸ் கால்வாய் மாரிடைம் கம்பெனி [Universal Maritime Company of Suez Canal] துவக்க மானது. அந்தக் கம்பெனி எகிப்திடம் செய்த ஒப்பந்தப்படி கால்வாயைக் கட்டும் பொறுப்பு, பராமரித்து இயக்கி வரும் உரிமை 99 ஆண்டுகளுக்குப் பிரான்சைச் சார்ந்தது. அந்தக் கால வரையறைக்குப் பின்பு கால்வாயின் உரிமையை 1957 ஆம் ஆண்டில் எகிப்து அரசிடம் பிரான்ஸ் ஒப்படைக்க வேண்டும்.

1859 ஏப்ரல் 25 ஆம் தேதி தோண்டல் பணிகள் ஆரம்பமாகி, முதலில் 20,000 எகிப்தியர்கள் வேலை செய்தனர். மொத்தம் பணி செய்த 2,400,000 பேர்களில் 125,000 நபர்கள் கால்வாய் வேலைகளில் உயிரிழந்ததாக அறியப்படுகிறது! நூறு மைல் நீளமுள்ள கால்வாய் [மேல்மட்ட அகலம்: 195 அடி, கீழ்மட்ட அகலம்: 75 அடி, ஆழம்: 30 அடி] உருவாகி, 1869 நவம்பர் 17 ஆம் தேதி துவக்கவிழா கொண்டாடப் பட்டது. பிரிட்டன் 1875 ஆம் ஆண்டில் எகிப்தின் 50% ஸ்டாக்குகளை வாங்கி, சூயஸ் கால்வாய் உரிமையில் பங்கேற்றது. 1936 இல் பிரிட்டன் ஓர் உடன்படிக்கையை எழுதித் தனது இராணுவப் படை ஒன்றைக் கால்வாய் அரங்கில் நிரந்தரமாக வைக்க அனுமதி பெற்றது.




கால்வாய்த் திட்டம் ஆய்வில் இருந்த 1854 ஆண்டுகளில், பிரிட்டன் கட்டும் திட்டத்திற்கு முதலில் எதிர்ப்பைத் தெரிவித்தது. ஆனால் 1875 ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் அரசாங்கம் 4 மில்லியன் பவுன் அளித்து பெரும்பான்மையான 176,600

பங்குகளை [50%] வாங்கி, சூயஸ் கால்வாய் உரிமையில் மிக்க அதிகாரம் பெற்றது! 1936 இல் செய்த உடன்படிக்கையில் எகிப்து தனித்து விடப்பட்டு, பிரிட்டன் சூயஸ் கால்வாய்க் காப்பு உரிமையை முழுமையாகப் பெற்றுக் கொண்டது! ஆனால் இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு, பிரிட்டன் சூயஸ் கால்வாய் அரங்கை விட்டு வெளியேற வேண்டும் என்று எகிப்து அதிகாரம் செய்தது! 1951 இல் எகிப்து அரசு 1936 இல் செய்த உடன்படிக்கையை எதிர்த்ததால், உள்நாட்டில் பிரிட்டிஷ் எதிர்ப்புக் கலவரங்கள் அதிகமாயின!



**சூயஸ் கால்வாயை தேசீய மயமாக்கிய அதிபர் நாசர்**

1952 ஆம் ஆண்டில் எகிப்தின் மன்னர் பெரோக்கைக் [King Farouk] கீழே தள்ளி, ஜெனரல் நாகீப்பை [General Naguib] வெளியேற்றிக் கர்னல் கமால் அப்துல் நாசர் [Gamal Abdel Nasser (1918-1970)] இராணுவக் கைப்பற்றுச் சதியில் [Military Coup] வெற்றி பெற்று எகிப்தின் பிரதம மந்திரி யானார்! 1956 இல் தன்னை எகிப்தின் அதிபர் [President] எனப் பிரகடனம் செய்து கொண்டார்! நீள நைல் நதியில் அஸ்வான் அணைகட்ட, மேலை நாடுகள் பண உதவி அளிக்க மறுத்த போது, எகிப்தின் அதிபர் நாசர், சூயஸ் கால்வாயைத் தேசீய மயமாக்கிப் நிதி திரட்ட விழைந்தார்! 1956 ஜூலை 26 ஆம் தேதி எகிப்து வரலாற்றில் ஒரு முக்கியப் போராட்ட நாள்! அன்றுதான் 'சூயஸ் புரட்சி ' [Suez Crisis] எனப்படும் தேசீயப் போராட்டம் எழுந்தது! ஐரோப்பியர் ஆணைக்குக் கீழ்க் கட்டுப்பட்ட சூயஸ் கால்வாய், அன்றுதான் தேசீய மயமாக்கப்பட்டு எகிப்து நாட்டின் ஆட்சிக்குக் கீழ் கொண்டு வரப் பட்டது! அப்பெரும் திடார் மாறுதலைச் செய்த எகிப்தின் தீவிர அதிபர், அப்துல் நாசரை ஐரோப்பிய நாடுகள் அனைத்தும் வெறுத்தன.




1869 இல் கட்டி முடிக்கப்பட்ட சூயஸ் கால்வாய் 'பிரென்ச் பிரிட்டிஷ் சூயஸ் கால்வாய்க் கம்பெனியின் ' [Franco British Suez Canal Co] சொந்தமாக இருந்தது. சூயஸ் கால்வாய் தேசீய மயமாக்கப் பட்டால் இரு நாடுகளும், மற்ற உலக நாடுகளுடன் புரியும் வணிகத் துறைகளில் பெரும் பாதிப்பு நேரும் என்று ஆத்திர மடைந்து பிரான்ஸ், பிரிட்டன் சூயஸ் கால்வாய் இழப்பைத் தடுக்க முயற்சி செய்தன. மூன்று

நாடுகள் பிரான்ஸ், பிரிட்டன், இஸ்ரேல் இரகசியமாய்க் கூடிச் சதி செய்து, எகிப்தைத் தாக்கி சூயஸ் கால்வாயைக் கைப்பற்ற வழி வகுத்தன!

அச்சதியின்படி முதலில் இஸ்ரேல் எகிப்தின் மீது போர் தொடுக்க வேண்டும்! உடனே பிரான்சும், பிரிட்டனும் கால்வாயைக் காத்திட வருவதுபோல், போரின் இடையே எகிப்தில் இராணுவப் படைகளோடு புகுந்து சூயஸ் கால்வாய்ப் பரப்பைக் கைப்பற்ற வேண்டும்! சதியின் விதிப்படி 1956 அக்டோபர் 29 இல் இஸ்ரேல் எகிப்தின் மீது படையெடுத்துத் தாக்கியது! இஸ்ரேலின் பாராட்ரூப்பர்கள் [Paratroopers] விமானத்திலிருந்து கால்வாயிக்கு 25 மைல் தூரத்தில் குதித்துக் கால்வாயை நெருங்கினர்! அடுத்த நாளே பிரெஞ்ச் பிரிட்டிஷ் கூட்டுப் பணிக்குழு ஓர் இறுதி நிபந்தனையை [Ultimatum] இஸ்ரேலுக்கும் எகிப்துக்கும் வெளியிட்டது! அந்தக் கட்டளை அறிவிப்பின்படி இரு நாடுகளும் போரை உடனே நிறுத்திக் கால்வாயிக்கு 10 மைல் தூரத்தில் ஒதுங்கிக் கொள்ள வேண்டும்!




நிபந்தனைக்குக் கீழ்ப்படியாது எகிப்து நிராகரித்ததும் பிரான்ஸ், பிரிட்டன் இரு நாடுகளுகளும் அதன் மீது நேரடித் தாக்குதலைத் தொடங்கின! அவரது விமானங்கள் எகிப்தின் விமானத் தளங்களின் மீது குண்டுகளை வீசின! உடனே எகிப்து கால்வாயில் இருந்த 40 பிரெஞ்ச், பிரிட்டிஷ் கப்பல்களை மூழ்க்கியது! மத்திய கிழக்காசியாவில் கொந்தளிப்புகள் துவங்கி, மூன்றாம் உலகப்போர் உருவாகப் பயமுறுத்தியது! 1957 மார்ச்சில் ஐக்கிய நாடுகளின் பேரவை கூடிப் போரை நிறுத்தி, உடைந்த கப்பல்களை நீக்க ஒப்புக் கொண்டது! மீண்டும் கால்வாய் திறக்கப் பட்டது!

இறுதியில் அமெரிக்காவின் உதவியால், நாசர் சூயஸ் கால்வாய் உரிமையைப் பிரான்ஸ், பிரிட்டனிடமிருந்து பிடுங்கி, எகிப்து நாட்டுக்குச் சொந்த மாக்கினார்.



**40 th Anniversary of the Nationalization of the Suez Canal**
**(1956/1996)**
**The Canal's Development since Nationalization up till now**

| Statement | 1956 | 1996 |
|---|---|---|
| Lenght of the canal | 173 km | 195 km |
| The double - lane part lenght | - - - - - - - | 65 km |
| Breadth | 110 km | 190 |
| Ship cargos | 35 feet<br>90 thousand tons | 62 feet in year 2000<br>73 feet in the future<br>million tons |
| Daily revenue | 90 thousand dollars | 5.3 million dollars |
| Total revenues in 40 years | - - - - - - - | 30 billion dollars |

1967 இல் மறுபடியும் எகிப்துக்கும், இஸ்ரேலுக்கும் போர் மூண்டு ஆறு நாட்கள் நீடித்தது! அந்த பேரழிவுப் போரில் சூயஸ் கால்வாய் மிகவும் பழுதானது! கால்வாய் அருகில் உள்ள மூன்று நகரங்கள் சிதைவுற்றன! கப்பல் போக்குவரத்துத் தடைப்பட்டுக் கால்வாய் எட்டு ஆண்டுகள் மூடப்பட்டது! அடுத்து 1975 ஆம் ஆண்டில்தான் உடைந்து கிடந்த பல கப்பல்கள் நீக்கப்பட்டுக் கால்வாய் மீண்டும் பயணத்துக்குச் செம்மை யாக்கப்பட்டது! ஆயினும் எகிப்து அரசு, கால்வாய் வழியாக

இஸ்ரேல் துறைமுகங்களுக்குச் செல்லும் கப்பல்களைத் தடுக்க கட்டுப்பாடுச் சட்டங்களை விதித்தது. இஸ்ரேலின் இராணுவத் தளவாட மில்லாத பளுக்கள் கொண்ட கப்பல்கள் மட்டும், கால்வாய் வழியாகக் கடக்க அனுமதிக்கப் பட்டன. பிறகு 1979 ஆண்டில் எகிப்தும் இஸ்ரேலும் நட்பு உடன்படிக்கை செய்து, கப்பல் போக்குவரத்து நிபந்தனைகள் யாவும் நீக்கப்பட்டன.



நூறு மைல் நீளத்திலும், குறைந்தது 200 அடி அகலத்திலும் உண்டாக்கப்பட்ட சூயஸ் கால்வாய், மன்ஸாலா, டிம்ஸா, பிட்டர் என்னும் மூன்று ஏரிகளின் [Lakes Manzala, Timsah, Bitter] ஊடே செல்லும்படித் திறமையாக வெட்டப் பட்டிருக்கிறது. பிட்டர் ஏரிகள் மட்டும் 18 மைல் தூரம் நீண்டவை. பெரும்பான்மையான இடைவெளித் தூரங்கள் ஒற்றையடிப் பாதைபோல் ஒரு கப்பல் மட்டும் பயணம் செய்யும் கால்வாயாக அமைக்கப்பட்டு உள்ளது. அவற்றின் இடையே கப்பல்கள் ஒன்றை ஒன்று முந்திச் செல்ல விரிவுப் பகுதிகள் [Passing Bays] கட்டப்பட்டுக் கால்வாய் அகன்றதாகவும் இருக்கிறது. அட்லாண்டிக் கடலிலிருந்து விரைவாக இந்து மகாக் கடலை அடைய வசதியாக இருப்பதால், உலக நவீனக் கப்பல்கள் யாவும் சூயஸ் கால்வாயைத் தவறாது பயன்படுத்திக் கொள்கின்றன.

இப்போது அனுதினமும் கால்வாய் மூலம் 50 கப்பல்களும், ஆண்டுக்குச் சராசரி 25,000 கப்பல்களும் கடந்து செல்கின்றன! 1995-1996 ஆண்டில் மட்டும் 444 மில்லியன் டன் வணிகச் சுமைகளைத் தாங்கிய 18,443 கப்பல்களும், 47 மில்லியன் டன் பளு கொண்ட

303 பூத வடிவான கப்பல்களும் கால்வாய் வழியாகப் புகுந்துள்ளன என்று அறியப் படுகின்றது! சூயஸ் கால்வாய் ஒன்றுதான் 1667 அடி நீளம், 233 அடி அகலம், 70 அடி வெளி உயரம் உள்ள [500 மீடர்X70 மீடர்X21 மீடர்] யுத்த விமானங்களை ஏவும் மாபெரும் நவீனப் போர்க் கப்பல்கள் கடந்து செல்லப் பாதை அளித்துள்ளது! கால்வாயைக் கட்டக் கணிக்கப்பட்ட பூர்வீக மதிப்பு 42 மில்லியன் டாலர் [1854 நாணய மதிப்பு! ஆனால் பத்தாண்டுகளுக்கு பணி வேலைகள் நீடித்ததால், இறுதியில் செலவு இரட்டிப்பாகி 84 மில்லியன் டாலராக ஏறிவிட்டது!



## சூயஸ் கால்வாய் மீது ஜப்பானின் முறுக்கு நாண் பாலம்

1995 ஆம் ஆண்டில் எகிப்து அரசாங்கம் ஜப்பானுடன் நிதிக்கொடை, கட்டமைப்பு உடன்படிக்கை செய்து ஒரு தொங்கு பாலத்தை சையத் துறைமுகத்துக்கு 30 மைல் தெற்கே சூயஸ் கால்வாய் மீது அமைக்கத் திட்டமிட்டது. ஜப்பான் 60% நிதியும் மீதி 40% நிதியை எகிப்து அரசாங்கமும் பாலம் அமைக்கச் செலவு செய்ய ஒப்புக் கொண்டன. 500 அடி உயரம் உள்ள இரண்டு உறுதியாக்கப் பட்ட காங்கிரீட் கோபுரங்களைக் கொண்டது, தொங்கு பாலம். அவை ஒவ்வொன்றையும் தாங்க 76 நீர்த்தளத் தூண்கள் [Caisson Piers] 100 ஆழத்தில் புதைக்கப் பட்டன.








**Japan & Egypt Presidents**

அப்பாலம் இரண்டு காங்கிரீட் கோபுரங்கள் உச்சி முனையில் முறுக்கு நாண் இறுக்கிப் பிடிக்கும் [Cable Stayed with two Pylons] நீண்ட பாலத் தட்டாக நிறுவகம் ஆனது. முபாரக் சமாதானப் பாலம் [Mubarak Peace Bridge] எனப் பெயர் பெறும் அந்த முறுக்கு நாண் பாலம், உலகத்திலே மிக உயரமான பாலமாகக் கருதப் படுகிறது. கோபுரத் தூண்களின் இடையே கப்பல்கள் புகும் மத்திய அகற்சி 400 மீடர் [Span 1330 அடி]. பாலத் தட்டின் முழு நீளம்: 3500 மீடர் [11300 அடி]. கால்வாய் நீர் மட்டத்திலிருந்து பாலத்தின் உயரம்: 70 மீடர் [230 அடி]. பாலத்தை இருபுறமும் பிணைக்கும் பக்கவாட்டுப் பாதையின் நீளம் 1120 மீட்டர்.




The river Nile's estuary and the Suez Canal area, Egypt.

Earth observation image from NASA's JSC Digital Image collection.



ஜப்பானின் நூதனப் பொறியியல் நுணுக்கத்தில் பாலம் கட்டப் பட்டது. மத்திய தரைக்கடல் பகுதியில் நிலநடுக்க ஆட்டங்கள் ஏற்படும் வாய்ப்புகள் இருப்பதால், பூகம்ப தள ஆட்ட அறிவிப்புச் சாதனங்கள் பாலத்தில் அமைக்கப் பட்டன. பாலம் டிசைன் செய்யப்பட்டுக் கட்டும் சிவில் எஞ்சினியரிங் பணி ஜப்பான் காஜிமா கம்பெனியிடம் [Kajima Consortium] கொடுக்கப் பட்டது. 1000 பேர் பணி யாற்றிய அப்பாலம் 40 மாதங்களில் வெற்றிகரமாகக் கட்டி முடிக்கப் பட்டது. எகிப்தின் அதிபர் ஹாஸ்ஸினி முபாரக் 2001 அக்டோபரில் பாலத்தைத் திறந்து வைத்த போது, ஏராளமான வெளிநாட்டுப் பிரதிநிதிகள் வருகை தந்து சிறப்பித்தனர்.



**கால்வாய் கரையில் ஜெர்மனியின் சுழல் அகற்சிப் பாலம்**

2001 செப்டம்பர் 12 ஆம் தேதி சூயஸ் கால்வாயில் புதிதாக கட்டப்பட்ட சுழல் அகற்சிப் பாலத்தில் [Swing Span Bridge] 34 ஆண்டுகளுக்குப் பிறகு, முதன்முதல் ஓர் இரயில் தொடர்வண்டி பயிற்சியின் பொருட்டு கடந்து செல்ல ஏற்பாடு செய்யப் பட்டது. அதன் பெயர் ‘எல் ஃபெர்டான் சுழற்பாலம் ‘ [El Ferdan Swing Bridge]. நவம்பர் 14 ஆம் தேதி எகிப்தின் அதிபதி ஹாஸ்ஸினி முபாரக் திறந்து வைத்தார். பாதி நீளத்தில் கட்டி யிருந்த முந்தய பாலம், 1967 இல் நிகழ்ந்த அரேபிய-இஸ்ரேல் போராட்டத்தில் தகர்ந்து போனது! இரட்டை நெம்புக் கரங்கள் கொண்ட அந்த சுழற்பாலம் [Double Swing Cantilever Bridge] ஐந்தாவது முறையாக ஆக்கப் பட்ட பாலம். கால்வாயின் முதற்பாலம் முதல் உலகப் போரின் சமயத்தில் [1914-1918] உருவானது. தாங்கும் தூண்களின்

முனைக்கு இடையில் உள்ள அகற்சி [Span Between Pivot Piers] 340 மீடர் [1130 அடி]. சுழற் தட்டுகளின் மொத்த நீளம்: 640 மீடர் [2130 அடி].




1997 மே மாதம் கட்ட ஆரம்பிக்கப் பட்ட பாலம், 2001 அக்டோபரில் முடிக்கப் பட்டது. ஜெர்மன், பெல்ஜிய எஞ்சினியர்கள் கட்டி முடித்த சுழற்பாலத்தை டிசைன் செய்தவர், எகிப்து தேசிய இரயில் துறையின் ஆலோசனைக் குழுவினர், ஹால்குரோ [Halcrow Engineering Group]. 13,200 டன் பளு உள்ள பூத வடிவான சுழற்பாலத்தின் கரங்கள் இருபுறமும் திரும்பி நீளும் இரும்புச் சட்டத் தட்டுகள் காண்பதற்கு விந்தை ஊட்டுபவை!

### சூயஸ் கால்வாயில் செய்த பிற்காலச் செம்மைப்பாடுகள்

2001 அக்டோபரில் சூயஸ் கால்வாயின் மீது, முக்கிய நிலப்பகுதியைச் சினாயுடன் [Main Land Link to Sinai] இணைக்கும் 11300 அடி [3500 மீடர்] நீளம் கொண்ட பொறியியல் நூதனமான 'முபாரக் பாலம் ' எனப்படும் 'முறுக்கு நாண் பாலம் ' [Cable Stayed Bridge] ஒன்றை ஜப்பான் எகிப்துக்குக் கட்டி முடித்தது. அதே ஆண்டு நவம்பரில் ஜெர்மன்

நிபுணர்கள் உலகிலே மிக நீண்ட சுழற்பாலம் [Swing Bridge (150m-340m-150m)] ஒன்றை இரயில் பாதைக்காக சூயஸ் கால்வாய் மீது இயங்க, கால்வாய்க் கரையில் கட்டினார்கள்.

President Hossini Mubarak



1997 ஆண்டு திட்டப்படி கால்வாயில் நூறடி ஆழச் சகதியைச் சுத்தம் செய்யும் ஆற்றலுடைய உலகிலே பெரிய இரண்டு கால்வாய்க் கழுவிப் படகுகளை [Dredgers] எகிப்து வாங்கியது. அவற்றுடன் 800 H.P. [Horse Power] கடற்தள ரயில்கள் [Maritime Locomotives] இரண்டும், வித விதமான வடிவமும், ஆற்றலும் உடைய மோட்டார் படகுகள் [Motorboats] ஒன்பதும் வாங்கப் பட்டன.

தேசீய மயமாகி 40 ஆவது பூர்த்தி ஆண்டில் [1996] சூயஸ் கால்வாய் பல முறைகளில் புதுப்பிக்கப் பட்டது. கால்வாயின் நீளம் 173 கி.மீடரிலிருந்து 195 கி.மீடராக [104 மைல் ->117 மைல்] அதிகமாக்கப் பட்டது. அகலம் 110 மீடரிலிருந்து 190 மீடராக [367 அடி ->630 அடி] மிகையாக்கப் பட்டது. அனுதின வருவாய் 90,000 டாலரிலிருந்து 5.3 மில்லியன் டாலராக ஊதியுள்ளது! நாற்பது ஆண்டு மொத்த வருமானம் 30 பில்லியன் டாலராகப் பெருத்துள்ளது!

Japan Bridge under Construction



கால்வாய் வழியாகக் கடக்கும் கப்பலின் சுமை 90,000 டன்னிலிருந்து, நாற்பது ஆண்டுகளில் 1 மில்லியன் டன்னாக மிகுந்துள்ளது! தரணியின் 14% வணிகப் பண்டங்கள், 26% கச்சாஆயில் ஏற்றுமதி, அரேபிய வளைகுடாத் துறைமுகங்களை அடையும் 41% சுமைகள் சூயஸ் வழியாகவே கடந்து செல்கின்றன.

சூயஸ் கால்வாய் இட அமைப்பு வணிகத்தள முக்கியம் பெற்றுக் கிழக்கு, மேற்கு தேசங்களுக்கு குறுக்குப் பாதை அளிக்கிறது. உலக வணிகப் போக்குகள் புகுந்து சென்று நிதிவளம் பெருக, ஆண்டு முழுவதும் தகுந்த கடற் பாதை ஆகிவிட்டது, சூயஸ் கால்வாய்!

**Port Said in Suez Canal**



**தகவல்:**


1. History of The Construction of the Suez Canal By: Professor Dr. Mamdouh Hamza
2. The Inaugration of the Suez Canal Nov 17, 1869 [1996 Report]
3. History of Suez Canal The Virginian-Pilot [Feb 23, 2003]
4. The 1956 Suez Crisis
5. Mubarak Peace Bridge Inaugration By: Egypt Economics [Oct 10, 2001]
6. The Suez Canal Achievements [1996-1997 Plan]
7. President Mubarak of Egypt Opens The World ‘s Longest Swing Span Bridge [Nov 2001]
8. National Geographic The Builders -Marvels of Engineering (1992)
9. http://www.britannica.com/topic/Suez-Canal
10. https://en.wikipedia.org/wiki/Suez_Canal [January 20, 2016]


***************************

# 23. கவுதம் சன்னாவுடன் ஓர் நேர்காணல்

## – செல்வன்

(தொடர்ச்சி ...)



**பேரா யூகோ:** வெற்றிபெற மற்ற சாதியினரின் ஓட்டுக்களும் வேண்டும். அது விடுதலைச் சிறுத்தைகள் அல்லது புதிய தமிழகம் என எக்கட்சியாக இருப்பினும் சரி. நீங்கள் இப்போது தமிழ் தேசியத்தைப் பற்றி அதிகம் பேசி தலித் அல்லாதவர்களைக் கட்சியில் சேர்த்துப் பொறுப்புக்களை வழங்குகிறீர்கள். இது குறித்து கொஞ்சம் கூறமுடியுமா?

**சன்னா:** நீங்கள் சொன்னதுபோல தமிழகத்தில் மக்கள் ஒரு குறுகிய வட்டத்துக்குள்ளேயே சிந்திக்கிறார்கள். விடுதலைச் சிறுத்தைகள் என்றால் தலித் கட்சி என மட்டுமே நினைக்கிறார்கள். அம்பேத்கரின் எழுத்தைப் பார்த்தால் அவர் தலித்துகளை "பெரும்பான்மை, ஆனால் சிதறிய பெரும்பான்மை" எனக் குறிப்பிடுகிறார். நாடு முழுக்க பார்த்தால் அவர்கள் பெரும்பான்மையாக இருக்கிறார்கள். ஆனால் (தொகுதி, ஊர், நகரம்) என்பது போன்ற சிறிய வட்டங்களில் பார்த்தால் அவர்கள் சிறுபான்மையாக இருக்கிறார்கள். ஆகத் தொகுதி என வருகையில் அவர்கள் சிறுபான்மையாகவே இருக்கிறார்கள். இந்திய அளவில் தலித்துகள் மிகப்பெரும் எண்ணிக்கையில் இருந்தாலும் ஒவ்வொரு பகுதியிலும் அவர்கள் சிறிய கட்சிகளாகவே இருக்கமுடியும். இத்தகைய ஒட்டுவங்கியை வைத்துக்கொண்டு தலித் கட்சிகள் ஆட்சியைப் பிடிக்க முடியாது. இது நடக்கவேண்டுமெனில் மேலும் பல வேலைகளை நாம் செய்யவேண்டும். அதே சமயம் தலித்துகள் பெரும்பான்மை சமூகத்தில் அங்கீகாரத்தைப் பெற்றால் அவர்கள் வெற்றிபெற முடியும் என்ற நம்பிக்கையும் இருக்கிறது. உதாரணமாக அம்பேத்கர் துவக்கிய "சுதந்திர தொழிலாளர் கட்சியில்" தலித்துகளும், தலித் அல்லாதவர்களும் இருந்தார்கள். அதன்பின் அவர் அதை "எஸ்.சி தொழிலாளர் அமைப்பாக" மாற்றுகிறார். எஸ்.சி அரசியல் செய்யவேண்டும் என்ற நிலை வந்தவுடன் அவர் தலித்துகளை ஒரு அரசியல் சக்தியாக மாற்றியபின்னரே மற்றவர்களுடன் அவர்களை

இணைந்து பணியாற்றவைக்க முடியும் என நம்பினார். இதன்பின் இந்திய குடியரசுக் கட்சிக்கான ஆலோசனையை அவர் முன்வைக்கிறார்.

இந்த வேறுபாடுகளைப் பார்க்கவும்: முதலில் சுதந்திர தொழிலாளர் கட்சி. அதன்பின் எஸ்.சி தொழிலாளர் அமைப்பு, அதன்பின் இந்திய குடியரசுக்கட்சி. ஆக, அவர் முதலில் ஒரு பொதுவான அடையாளத்தை அமைக்க முயன்றார். அது வெற்றியடையவில்லை. அதன்பின் சாதி அடையாளத்தை உருவாக்குகிறார். அது ஒரு அளவு வெற்றியும் பெறுகிறது. ஆனால் சாதிய அடையாளத்தை மட்டும் வைத்துக் கொண்டிருந்தால் அதுவே ஒரு தடைக்கல்லாக மாறும் என்பதை உணர்ந்து இந்திய குடியரசுக்கட்சி எனும் ஜனநாயக அமைப்பை உருவாக்குகிறார். இதுபோன்ற சிந்தனைகளை அனைத்து இந்திய கட்சிகளிலும் காணலாம். பலவிதங்களில் அவர்கள் இதேபோன்ற உத்திகளைக் கையாண்டார்கள். தமிழ்நாட்டில் முதலில் ரிபப்ளிக்கன் கட்சி உருவானது, அதன்பின் ஆதிதிராவிடர் கட்சிகள் உருவாகின, அதன்பின் பள்ளர்களுக்கான இயக்கம், பறையர்களுக்கான இயக்கம், அருந்ததியினருக்கான இயக்கம் ஆகியவை உருவாகின. இப்படி உருவானபின் கொஞ்ச காலம் இயக்கங்களாக அவை தொடர்கின்றன. ஆனால் சாதி அடிப்படையும் மட்டுமே அவற்றால் இயங்கமுடியாது என வருகையில் அவை விடுதலைச் சிறுத்தைகள். புதிய தமிழகம், பாட்டாளி மக்கள் கட்சி என்பது போன்ற கட்சிகளாக உருவெடுக்கின்றன. பொதுவான பெயர்களில் கட்சிகளைத் துவக்கி, பொதுமக்களைத் திரட்ட முயலுகையில் பொதுவான ஒரு காரணியை வைத்தே அணுக முடிகிறது. இதுவே நல்ல வாய்ப்பு என்பதால் தமிழ் தேசியம் என்பது மக்களைத் திரட்டும் மிக நல்ல ஒரு அடித்தளமாக அமைகிறது. இதனால் பல தலித் கட்சிகள் தமிழ்த் தேசியத்தை முன்வைக்கின்றன. பொதுவான அடையாளத்தைத் தேடும் முயற்சியின் ஒரு பகுதியே இது எனக் கூறலாம். அதே சமயம் இலங்கையில் தமிழர்கள் ஒடுக்கப்பட்ட போது அனைவரும் அவர்களுக்காகக் குரல் கொடுத்தாலும், ஒடுக்கப்பட்டவர்கள் எனும் அடிப்படையில் தலித்துகள் அவர்களுக்குக் குரல் கொடுத்தபோது அதில் இருந்த உணர்ச்சிகரமான பிணைப்பு மற்ற கட்சிகள் குரல் கொடுத்தபோது இல்லாமல் போனது. இங்கே ஒடுக்குமுறையை அனுபவித்தவர்கள் தலித்துகள், அங்கே ஒடுக்குமுறையை அனுபவித்தவர்கள் தமிழர்களில் 80% எனக் கூறலாம்.புலிகள், புலிகள் அல்லாதவர்கள் என அனைத்துத் தமிழருமே அங்கே ஒடுக்குமுறையை அனுபவித்தார்கள்.

சிங்கள ஒடுக்குமுறைக்கு எதிராக அவர்கள் பொதுவான தமிழ் அடையாளத்தை முன்வைத்தபோது அதேபோன்ற ஒரு பொதுவான அடையாளத்தை தமிழ்த்தேசியம் இங்கேயும் பெற்றுக்கொடுக்கும் என நம்புகிறோம். இந்த நம்பிக்கையின் அடிப்படையில் தான் தலித்துகள் தமிழ் தேசியத்தைக் கையில் எடுக்கிறார்கள். தமிழ்த் தேசியம் தலித்துகளுக்கு விடுதலையைப்

பெற்றுக்கொடுக்குமா என்ற கேள்வி இருந்தாலும் அது பொதுவான அடையாளத்தை நோக்கி நகரும் ஒரு முயற்சியே ஆகும். இது ஒப்புக்கொள்ளப்பட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டால் சாதி உணர்வுகள் குறைந்து, சாதிய அரசியலும் குறைந்து உண்மையான ஜனநாயகம் மலரும். இந்த அடிப்படையிலேயே தமிழ் தேசிய அரசியலை நாங்கள் கையில் எடுத்துள்ளோம்.

இதைச் சொல்கையில் தமிழ்த் தேசியம் பேசும் பிற அமைப்புகளைச் சந்தேகத்துடன் பார்த்து அவை எந்த அளவு இதில் ஈடுபாட்டுடன் இருக்கிறார்கள் என்பதைக் கவனிக்கவேண்டி உள்ளது. அவ்வமைப்புகள் அரசியலில் இறங்கியபின்னரும் தமிழ் தேசியம் பேசுகிறார்கள். அரசியலில் இறங்கியபின்னர் தமிழ்த் தேசியம் பேசும் அவசியம் இல்லை எனும் நிலையிலும் அவர்கள் இதைப் பேசுவது நம்பிக்கையை அளிக்கிறது. தமிழ்த் தேசியம் விடுதலைச் சிறுத்தைகளுக்கு ஒரு அங்கீகாரத்தையும் மக்களின் ஏற்பையும் பொதுவான அரசியல் தளத்தில் பெற்றுத் தந்திருக்கிறது. விடுதலைச் சிறுத்தைகள் கட்சியில் இது அங்கீகாரமும் பெற்றுள்ளது.

1998ல் இருந்து 2008ம் ஆண்டுவரை அவர்கள் தமிழ்த்தேசியத்துடன் ஒடுக்கப்பட்டவருக்கான தலைமையைக் குறித்தும் பேசினார்கள். தொழிலாளர் இயக்கங்கள் எப்படிப் பிற தொழிலாளரைத் தலைமை தாங்க அழைத்தார்களோ அதே போல ஒடுக்கப்பட்டவரே ஒடுக்கப்பட்ட மக்களுக்குத் தலைவராக இருந்து தமிழ் தேசியத்தை வழிநடத்த முடியும். அந்தக் காலகட்டத்தில் சில இடைநிலை சாதிகளும் இவ்வாதத்தை ஏற்றுக்கொண்டார்கள். அப்போது விடுதலைச் சிறுத்தைகள் தலித் தலைமையை பற்றிப் பேசினாலும் கட்சியில் தலித் அல்லாதவர்கள் இல்லை. இதைப்பற்றிப் பேசினாலும், பேசாவிட்டாலும் கட்சியில் தலித்துகளே தலைமை பொறுப்பில் இருக்கிறார்கள். இந்தச் சூழலில் கட்சியை ஜனநாயகப்படுத்தி, தமிழ்த் தேசியத்தில் நம்பிக்கை உள்ள தலித் அல்லாதவர்களைக் கட்சிக்கு கொண்டுவந்தாலே தலித்களின் தலைமை என்பது சாத்தியப்படும். இந்த அடிப்படையில் தான் அவர்கள் 2008ம் ஆண்டு ஒரு கொள்கையை முன்வைக்கிறார்கள்

**பேரா யூகோ:** வேளச்சேரி (விடுதலைச் சிறுத்தைகள் இயக்கத் தலைமையகம்) பிரகடனமா?

**சன்னா:** வேளச்சேரி பிரகடனம் தான். அந்தப் பிரகடனத்தை சிறுத்தைகள் 2007 செப்டெம்பரில் கொண்டுவந்தார்கள். இந்தப் பிரகடனத்திற்கு பின் கட்சியில் உள்ள அனைத்துப் பதவிகளும் கலைக்கப்பட்டன. புதியதாக இப்பதவிகளுக்கு விண்ணப்பம் செய்ய அனைத்துப் பகுதி மக்களும் கேட்டுக்கொள்ளப்பட்டார்கள். இதன்பின் 2008 மார்ச் 21 முதல் தலித்துகள், முஸ்லிம்கள், தலித் அல்லாதவர்கள் உட்பட புதிய நிர்வாகிகள் பதவியேற்றார்கள். தலித் அல்லாதவர்கள் கட்சியில்

சேர்க்கப்படுவதற்கான ஒரு காரணம் தமிழ்த் தேசியமாகும். கட்சியை ஜனநாயகமயமாக்கவும் இது உதவியது

**பேரா யூகோ:** இது வரவேற்கத்தகுந்த மாற்றமாகும். ஆனால் கட்சி தொண்டர்கள் சொல்வது என்னவெனில் "20 வருடங்களாகக் கட்சிக்கு உழைத்தோம். கட்சிக்காக அடிபட்டோம். சிறைச்சாலைக்குச் சென்றோம். இப்போது கட்சியாக மாறியவுடன் தலித் அல்லாதவர்கள் பதவிக்காக கட்சியில் சேருகிறார்கள்" என்கிறார்கள். கட்சியின் அடிமட்ட தொண்டர்கள் தலித் அல்லாதவர்களை ஏற்றுக்கொண்டார்களா?

**சன்னா:** தலித் அல்லாதவர்கள் தலித்துகளை ஏற்றுக்கொள்ளாமல் இருப்பது போல தலித்துகள் மத்தியிலும் தலித் அல்லாதவர்கள் மேல் அதே போன்ற தயக்கம் இருக்கத்தான் செய்கிறது. அத்தகைய தயக்கம் இல்லாமல் இருக்காது. அது இல்லையெனச் சொல்லி நாம் உண்மையை மூடி மறைக்கவும் முடியாது. நான் இதை ஏன் சொல்கிறேன் என்றால் ஒரு கட்சி என்பது ஒரு சமூகத்தின் கருத்துக்களின் வெளிப்பாடே ஆகும். உங்கள் கட்சிவேலை முடிந்தபின் நீங்கள் வீட்டுக்குத் தான் செல்லவேண்டும். வீட்டுக்குப் போனாலும் கட்சிவேலையை செய்வதை நிறுத்த முடியாது. கட்சியும் சமூகமும் ஒன்றே. ஆக, சமுதாயத்தில் என்ன பிரச்சனைகளை சந்திக்கிறோமோ அதைக் கட்சியிலும் எதிர்கொள்ள வேண்டியிருக்கும். இதை வேறுபடுத்திப் பார்க்க முடியாது. தலித் ஒருவரின் வீட்டருகே உள்ள இன்னொருவர் தலித்தை புறக்கணித்து, தலித்தின் வீட்டை எரித்து, சாதிமோதலை உருவாக்குவது போன்ற சம்பவங்களில் ஈடுபடுகையில் தலித்துகளுக்கு தலித் அல்லாதவர்கள் மேல் சந்தேகம் வரத்தான் செய்யும். சமுதாயம் மாறினால் தான் இத்தகைய தயக்கமும், சந்தேகமும் கட்சிக்குள்ளும் நீங்கும். சமுதாய இயக்கங்கள் இத்தகைய கோணத்தில் சிந்தனைகளைக் கொண்டிருக்கையில் சாதிய வழி கண்ணோட்டங்களும் நீடிக்கவே செய்யும். ஆக, தலைமை பதவியில் இருப்பவர்கள் இதை உணர்ந்து சமுதாய மனமாற்றத்துக்கான வாய்ப்புக்களை உருவாக்க வேண்டும்.

ஒரு இயக்கமாக நாம் அந்த நோக்கத்தை முன்னிறுத்தி பயிற்சிகளைக் கொடுக்க வேண்டும். அதை நாங்கள் செய்து வருகிறோம். அத்துடன் நில்லாது அதை மேலும் துரிதப்படுத்தவும் இருக்கிறோம். அப்படிச் செய்கையில் "நான் கட்சியில் 20 ஆண்டுகளாக இருக்கிறேன். நான் ஏன் அங்கீகரிக்கப்படவில்லை" என்பது போன்ற கேள்விகளை எதிர்கொள்ள நேரும். அந்தக் கேள்வி ஏன் தவறானது எனில் தலித் அல்லாதவர்கள் தலித்துகளின் தலைமையை ஏற்றுக் கட்சியில் இணைகையில் அது தலித்துகளுக்கு கிடைக்கும் ஒரு அரசியல் அங்கீகாரமே ஆகும். இந்தக் கோணத்தை நாம் பரவலாக புரியவைக்க வேண்டும். ஆனால் அதற்குக் காலம் பிடிக்கும் என்பதை உணர்ந்தே இருக்கிறோம்.

**பேரா யூகோ**: தலித் அல்லாதவர்கள் கட்சியில் சேர்கையில் தனிநபர்களாக சேர்கிறார்களா அல்லது அவர்களது இனக்குழுவின் சார்பில் இணைகிறார்களா?

**சன்னா**: தற்போதைய நிலையில் அவர்கள் தனிநபர்களாக தான் இணைகிறார்கள்.

**பேரா யூகோ**: அப்படியானால் இது தேர்தல் ரீதியாகக் கட்சிக்கு பெரிய அளவிலான வலுவை அளிக்காது. ஆனால் தேர்தல் அரசியலைக் கூட ஒதுக்கிவிட்டுப் பார்த்தால் தலித் அல்லாதவர்கள் கட்சியில் இணைவதால் சமூகரீதியான பயன்பாடுகள் ஏதேனும் ஏற்பட்டுள்ளதா?

**சன்னா**: நாங்கள் அரசியலில் இறங்கி ஜனநாயக பாதைக்கு திரும்பிய பின்னரே இத்தகைய மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. தேர்தல் புறக்கணிப்பை நாங்கள் தொடர்ந்திருந்தால், இத்தகைய வாய்ப்புக்கள் மிகக் குறைந்திருக்கும். ஏனெனில் தலித் அல்லாதவர்கள் எங்கள் கட்சியில் இணைந்தாலும் அவர்கள் புரட்சிகர மனப்பான்மையுடன் எங்கள் கட்சியில் இணைகிறார்கள் எனக் கூற இயலாது. அவர்கள் ஒரு ஜனநாயக சக்தி என வேண்டுமானால் கூறலாம். புரட்சிகர நோக்கம் கொண்ட இடைநிலை சாதிகள் நாங்கள் தேர்தல் புறக்கணிப்பைத் தொடர்ந்தபோதும் எங்களுடன் இருந்தார்கள். இப்போதும் இருக்கிறார்கள். பதவிகளை எதிர்பார்த்து அவர்கள் எங்களுடன் இணையவில்லை. இப்போதும் அவர்களுக்கு அந்த நோக்கம் இல்லை. அவர்கள் கட்சிக்குள்ளும், அடிமட்ட அளவிலும் அமைதியாக அதிகம் வெளித்தெரியாமல் இயங்கி வருகிறார்கள். அவர்களைக் கட்சியின் தூண்கள் எனலாம். ஆனால் புதிதாக கட்சியில் சேரும் தலித் அல்லாதவர்களை வெறுமனே ஜனநாயக சக்திகள் என்றே கூற இயலும். கட்சிக்கு அவர்களால் பலனுண்டு. கட்சியால் அவர்களுக்குப் பலனுண்டு. இத்தகைய புரிதலுடனே இந்த உறவு தொடர்கிறது எனினும் காலப்போக்கில் இது மாறும் என எதிர்பார்க்கலாம்.

**பேரா யூகோ**: ஆனால் அவர்கள் கட்சியில் சேர்ந்ததாலும், நீங்கள் பா.ம.க, மூவேந்தர் முன்னேற்றக் கழகம், கொங்குநாடு முன்னேற்றக்கழகம் மாதிரியான கட்சிகளுடன் கூட்டணி சேர்ந்ததாலும் ஜாதி வன்முறை குறைந்துள்ளதா? (மூவேந்தர் முன்னேற்றக் கழகம் தென் தமிழகத்தை சேர்ந்த தேவர் கட்சி, கொங்குநாடு முன்னேற்றக்கழகம் மேற்குப்பகுதி தமிழகத்தின் கவுண்டர் இனமக்களின் கட்சி)

**சன்னா**: நிச்சயமாகக் குறைந்துள்ளது. இதை இன்னொரு கண்ணோட்டத்தில் பார்ப்பதானால் நாங்கள் தலித் அல்லாதவருக்குக் கட்சியில் பதவிகளைக் கொடுப்பது பிற கட்சிகளுக்கும், சாதியினருக்கும் "நீங்களும் இக்கட்சியின் ஒரு அங்கம்" எனும் செய்தியை அளிக்கிறது. இதுவரை மற்ற சாதியினர்க்கும், கட்சிகளுக்கும் நெருக்கமாகும் வாய்ப்பு எங்களுக்கு மிகக் குறைந்த அளவிலேயே இருந்துவந்தது. பிற சாதிக்கட்சி தலைவர்களுடன் எங்களால் நேரடியாகப் பேச முடியவில்லை. அந்தத் தலைவர்களுக்கும் தலித் தலைவர்களுடன் பேசும் மனநிலையும் இல்லை.

இத்தகைய மனத்தடை நீடித்து வந்தது. ஆக, இம்மாதிரி சமயங்களில் கூட்டணி பற்றி பேசுவதற்கும், தொகுதிகளைப் பற்றி பேசுவதற்கும் எங்கள் கட்சியில் உள்ள தலித் அல்லாதோர் பெருமளவு உதவியாக இருக்கிறார்கள். இதன் இன்னொரு பலனும் என்னவெனில் எங்காவது ஜாதிக்கலவரம் நிகழ்ந்தால் எங்கள் கட்சியில் உள்ள தலித்-அல்லாத தலைவர்கள் களத்தில் உள்ள தலித் அல்லாதவருடன் எளிதில் பேச முடிகிறது. இது அமைதியை உருவாக்கவும், பிரச்சனைகளைத் தீர்க்கவும் உதவுகிறது. விடுதலைச் சிறுத்தைகள் கட்சியில் உள்ள தலித் அல்லாதோர் இதில் பெரும்பங்கு வகித்துள்ளார்கள். அவர்கள் பங்கை அங்கீகரிப்பதன் மூலமும், மதிப்பதன் மூலமும் இதுவும் ஒற்றுமை நிலவும் சமூகத்தை உருவாக்கும் முயற்சியே என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

**பேரா யூகோ:** சரி.நல்லது. ஆனால் அதே சமயத்தில் பரமக்குடியில் நிகழ்ந்தது என்ன என்பதைப் பார்த்தோமெனில் (பரமக்குடியில் செப்டம்பர் 2011ல் போலிஸ் துப்பாக்கிச்சூட்டிலும், லத்திசார்ஜிலும் ஆறு தலித்துகள் உயிரிழந்தார்கள்) அந்தக் கலவரத்தின் காரணமே தலித்துகள் குருபூஜை மற்றும் தெய்வமகான் என்ற சொற்றொடர்களை பயன்படுத்தக்கூடாது என்ற கோரிக்கையே ஆகும். அவர்கள் அந்தச் சொற்றொடர்கள் தம் தலைவரை குறிக்க மட்டுமே பயன்படுத்தப்பட வேண்டும் எனக் கருதினார்கள். இம்மானுவேல் சேகரனைக் குறிக்க இந்த வார்த்தைகள் எப்படி பயனாகலாம் எனக் கேட்டார்கள். இம்மாதிரி சூழலில் கட்சியில் உள்ள தலித் அல்லாத தலைவர்கள் குறுக்கிட்டு இதைச் சரிசெய்திருக்க முடியாதா?

**சன்னா:** நீங்கள் சொல்வது சரிதான். இது திடீரென எழுந்த பிரச்சனையோ, எதிர்பாராது எழுந்த பிரச்சனையோ அல்ல. அந்தப் பகுதியில் முக்குலத்தோர் குருபூஜை என்பதி முத்துராமலிங்கத் தேவரை மட்டுமே குறிக்க பயன்படும் சொல் என்பதில் மிகத் தீவிரமாக இருக்கிறார்கள். இம்மானுவேல் சேகரனின் குருபூஜை அவர்களது குருபூஜைக்கு போட்டியாக எழுந்ததும் பிரச்சனை துவங்கியது. பரமக்குடி துப்பாக்கிச் சூடு பிரச்சனை அன்றைய தினம் மட்டும் நிகழ்ந்த பிரச்சனையல்ல. இதன் விதை இம்மானுவேல் சேகரனின் குருபூஜை நிகழ்ந்த அன்றே விதைக்கபட்டுவிட்டது. அவர்கள் இதை ஒரு போட்டியாக நினைத்து நிறுத்த முனைகிறார்கள். இது ஒரு உணர்ச்சிகரமான விஷயமாகும். இம்மாதிரி விவகாரங்களை இரண்டு-மூன்று தலைவர்கள் உட்கார்ந்து பேசி சரிசெய்துவிட முடியாது. இது இம்மானுவேல் சேகரனுக்கும்,. முத்துராமலிங்கத் தேவருக்கும் 1950ல் நிகழ்ந்த மோதலின் தொடர்ச்சியாகும். அவர்கள் இருவரும் இன்று இல்லையென்றாலும், பிரச்சனை தொடர்கிறது. இதில் நாம் தலையிட்டு உடனடியான தீர்வைக் காணமுடியும் என எதிர்பார்க்க இயலாது. இதை நிறுத்தக்கூடிய வாய்ப்புள்ள தலைவர்கள் விடுதலைச்சிறுத்தைகள் கட்சியிலேயே இருக்கிறார்கள். இதனால் தான் 2011ல் நாங்கள் மதுரை மேயர் சீட்டை (பார்வர்ட் பிளாக் கட்சியின் நிறுவனர் மற்றும் தேவர்

சமுதாய தலைவர்) மூக்கையா தேவரின் மகன் கணேசனுக்கு கொடுத்தோம். கட்சியில் அவர் பெயர் திருமா பசும்பொன் என்பதாகும். இதில் திருமா என்பது கட்சித்தலைவர் திருமாவளவனின் பெயரில் ஒரு பகுதி. மற்றும் பசும்பொன் என்பது முத்துராமலிங்கத் தேவரின் பிறந்த ஊர். அவர் இன்று கட்சியில் இல்லை. அது வேறு விஷயம். ஆனால் அவர் எங்கள் பக்கத்தில் அன்று இருந்ததால் பரமக்குடிக்கு வெளியே இருந்த முக்குலத்தோர் விடுதலைச் சிறுத்தைகளிடமிருந்து ஜாதிவன்முறை துவங்காது எனவும், விடுதலைச் சிறுத்தைகளால் அவர்களுக்குப் பிரச்சனை வராது எனவும் நம்பினார்கள். அவர் கட்சியை விட்டுப் போனபின்னும் பலரும் அதற்குள் மனம் மாறியிருந்தார்கள். எனக்குத் தெரிந்து ஒரு கிராமத்தில் பிள்ளை சமுதாயத்தை சேர்ந்த 500 பேர் ஒட்டுமொத்தமாக விடுதலைச் சிறுத்தைகள் கட்சியில் சேர்ந்தார்கள். இது விடுதலைச் சிறுத்தைகள் கட்சியின் உறுப்பினர்சேர்ப்பு முகாமில் நிகழ்ந்த சம்பவமாகும்.

கட்சித்தலைவர் தொல்.திருமாவளவனின் அறிவுரைப்படி நாங்கள் 2009லும், 2011லும் உறுப்பினர் சேர்க்கை முகாம்களைத் தமிழகத்திலும், புதுவையிலும் நடத்தி நடத்தி 45 லட்சம் உறுப்பினர்களை இரண்டு ஆண்டுகளில் சேர்த்தோம். இத்தகைய சிறப்புள்ள இந்த முகாமின் ஒருங்கிணைப்பாளராக நான் இருந்து வருகிறேன். இது தொடர்ந்து நல்லபடி நடந்து இயக்கத்தின் நோக்கத்தை வலுப்படுத்தி வருகிறது. இந்த முகாமில் பல முக்குலத்தோர்களும், நாயுடுக்களும், பிள்ளைமார்களும், கவுண்டர்களும் கட்சியில் சேர்ந்தார்கள். இது இந்த உறுப்பினர் சேர்ப்பு முகாம் மற்றும் தலித்துகள் அல்லாதவருக்குக் கட்சியில் தலைமைப்பொறுப்பு அளித்ததாலும் நிகழ்ந்ததாகும். ஆக, வி.சி கட்சியில் உள்ள தலித் அல்லாதவர்கள் ஜாதி கலவரத்தையும், மோதலையும் கட்டுப்படுத்துவதில் பெரும்பங்கு வகிக்கிறார்கள்.

(திரு. சன்னா அவர்களின் நேர்காணல் தொடரும்...)

---



செல்வன்
holyape@gmail.com

# 24. தேடிக்கொண்டிருக்கிறேன்

## – ருத்ரா இ.பரமசிவன்



அதைத்தான் இன்னமும்
தேடிக்கொண்டிருக்கிறேன்.
கால்சட்டை போட்டுக்கொண்டு
கோலி விளையாடிய போது அவன்
மொழியை உடைத்து விடவேண்டுமே
என்ற வெறியைத்தேடினேன்.
தட்டாம்பூச்சி சிறகுகளை
காதோடு காதாக ஒட்டிவைத்துக்கொண்டு
கிர்ரென்று அது போடும்
ஓசைக்குள்
அர்த்தம் புரியாத
நியாய வைசேஷிகத்தையும்
பூர்வ உத்தர மீமாம்சங்களையும்
தேடினேன் என்று
சுருக்கம் விழுந்த வயதுகளில்
நினைவுகளை சவைத்துத் துப்பும்போது
தெரிந்து கொண்டேன்.

அவளிடம் என்ன இருந்தது என்று
தெரியாமலேயே
அவளிடம் இன்று வரை
தேடிக்கொண்டிருக்கிறேன்.
வேறு வேறு கூட்டில்
இருவருக்கும்
ஆறேழு குஞ்சுகள்
சிறகடித்துக்கிடந்த போதும்
இன்னமும் அதைத் தேடிகொண்டிருக்கிறேன்.

இப்படி தேடுவது என்பது
டி.என்.ஏ, ஆர்.என்.ஏக்களின்
அமுத ஊற்றுகளின் சங்கிலி.
கடவுள் என்பவனுக்கு
இந்த ஊற்றுகளை
சுவைக்க முடியாது.
இந்த பிரபஞ்சத்தை வெற்றிலை மடித்து
பாக்கு புகையிலையோடு
நுண்ணிய கணிதத்தில் சுருட்டி
வாயில் போட்டு
"ப்ரேன் காஸ்மாலஜி" என்று
மூளையோடு குதப்பிக்கொள்ள
அந்த கடவுளுக்குள்
ஒரு "எட்வர்டு விட்டன்"
இறங்கித் தூர் எடுக்கவேண்டுமே.
"குவாண்டம் நுரை"கோட்பாடு வரை
சூன்யத்துள் சூன்யத்தையே
பாதாளக்கரண்டி போட்டு..
ஹிக்ஸ் போஸான் தான்
அந்த ரகசியம் என்று
ஆற்றல் பிழம்பை உடைத்து
அந்த கொட்டையை எடுக்க
செர்ன் எனும் அணுவுலைக்குள்
நோண்டி நொங்கு எடுக்க..
தேடிக்கொண்டிருப்பதில்
அவனையும்
எப்படி கட்டி இழுத்துக்கொண்டிருப்பது?

கும்பாபிஷேக நெய்ப்பிசுக்கில்
அவன் நாக்கினால் சப்பிக்கொண்டிருக்கட்டும்.
நான் தேடுவதில்
பிரபஞ்ச நரம்புக்கூட்டங்கள்
தாறு மாறாய் கலைந்து கிடக்கின்றன.
பேசாமல் அந்த தர்ப்பணங்களை
அவன் தின்று கொண்டிருக்கட்டும்.
துருப்பிடித்த ஸ்லோகங்களை
டிங்கரிங்க்கு அனுப்பி அல்லவா
நிமிர்த்திப்பார்க்க வேண்டும்.
கடவுளை கடவுளே
ஒரு நாள் கூட நிமிர்த்திவைத்து
பார்த்ததில்லை.
நானும் அதைத்தான் தேடுகிறேன்.
அவனுக்குப்பதில்
அவனுக்காக நான்
தேடிக்கொண்டிருக்கிறேன்...
அவன் என்னைத்தான் தேடுகிறான் என்று
தெரியாமல்
இன்னமும் நான்
தேடிக்கொண்டிருக்கிறேன்.

---



கவிஞர் ருத்ரா இ.பரமசிவன்
ruthraasivan@gmail.com

# 25. பெண்ணே!

## – ருத்ரா இ.பரமசிவன்




http://ignite.globalfundforwomen.org/

பெண்ணின் எழுச்சியை
பூவுக்குள் பூகம்பம் என்றார்கள்.
அவள் சிரிப்பைக்கூட
காதல் மை தொட்டு
அப்படித்தான்
கவிதையும் எழுதப்படுகிறது.
அவள் துடைப்பம் எடுத்தாலும்
அது
சமணர்களின் மயில்பீலித் துடைப்பம்.
பெண்ணின் மடியில்
இன்று கணிப்பொறி குழந்தையும்
மழலை பொழிகிறது.
பெண் அழகு மட்டும் அல்ல!
அவள் அறிவின் அடர்த்தி
அசர வைத்தது
இந்த உலகத்தையே!

அவளுக்குள் அவன்!
அவனுக்குள் அவள்!
இதற்கு என்ன "இலக்கணக்குறிப்பு"எழுதுவது?
காதல் குமிழிகள் கட்டிய வீட்டில்
அன்னத்தூவிகள் எல்லாம்
உதிர்ந்து போனபின்
கரடு முரடாய் சோறு பொங்கி
தொட்டில் கட்டி
பாசமலர்க்காட்டில்
அவள் தொலைந்து போன போது
அப்போதும் யோசிக்கிறாள்
அது என்ன இலக்கணம் என்று.
எந்திரமாகித்தான் போனாள்.

பரிணாம வீச்சில்
கங்காரு நிலையிலிருந்து
குதித்து வந்தவள் போலும் அவள்!
குழந்தை குட்டிகளை
அவள் மட்டுமே ஒரு
பாசப்பைக்குள் வைத்துக்கொண்டு
ஓடுகிறாள்.
அவள் வேகத்துக்கு ஈடு கொடுக்க முடியாத
வாழ்க்கைச்சக்கரம் கூட
மூச்சு வாங்கி நின்று கொள்கிறது!
புதிய புதிய யுகங்களுக்குள்ளிருந்து
இன்னும் இன்னும்
புதிய புதிய யுகங்களாய்
தோலுரித்துக்கொள்கிறாள் அவள்.
மிச்சம் கிடக்கின்ற அந்த
பாம்புச்சட்டைகளை
மியூசியத்தில் வைத்து
பாது காத்துக்கொள்ளுங்கள்.
மஞ்சள் குங்குமம் வைத்து
பூஜித்துக்கொள்ளுங்கள்

அவள்
புள்ளி வைத்து கோலம்போட்டு

தெரு முனையில்
தேங்கிப்போக அவதாரம் எடுக்கவில்லை!
அவள் புள்ளிகளும் கோடுகளும்
ஆயிரம் ஆயிரம் கணினிகளுக்குள்
"அல்காரிதம்" ஆனதில்
பிரபஞ்சங்கள் கூட
அவள் பூங்கரத்தின் செம்பஞ்சுக்குழம்பில்
மெகந்தி ஆயின!
படைக்கும் பிரமனின் "ப்ராஜெக்டில்"
உள்ள குளறுபடிகளைக்கூட
"டீ பக்" செய்து
ப்ரோகிராம் ஓட்டி வாகை சூடுவாள்.
பெண்ணே!
இனி என்றும் உனக்கே வெற்றி!

---



கவிஞர் ருத்ரா இ.பரமசிவன்
ruthraasivan@gmail.com

# 26. மெர்ஸல் ஆகிப்போனார்கள்...

## – ருத்ரா இ.பரமசிவன்



கையாலாகாதவன்
கவிதை எழுதினான்.

மின்னல் கீரைக் குழம்பு வைத்து
சாப்பிட்டேன் என்று.
நிலவை நறுக்கி
உப்புக்கண்டம் போட்டேன் என்று.

கடலிடமே கடலை போட்டேன்
அது
காலடியில் குழைந்து நெகிழ்ந்தது என்று.

என் எழுத்தாணிக்குள்
கோடி கோடி எழுத்துக்கள்..
கம்பன் இரவல் கேட்டான்
கொடுத்து விட்டேன் என்று.

இன்னும் அடுக்கினான்.
அது அடுக்குமா?
தெரியவில்லை.

"25 மாடி அப்பார்ட்மென்ட் கட்ட
நத்தைக் கூட்டுக்குள்
லே அவுட் போட்டேன்.

உங்களுக்குத் தெரியுமா?
என் காதலி
காலி செய்து தூக்கிப்போட்ட
அந்த மெகந்திக்குழாயை
இன்னும் பிதுக்கி பிதுக்கிப்பார்த்து
போட்டுக்கொண்டிருக்கிறது
அந்த பிரபஞ்சம்
இந்த "கேலக்ஸிகளை"!

நான் சுண்டி ஒரு "தூஸ்ரா"போட்டால் போதும்
ஆயிரம் ஆஸ்திரேலியாக்கள்
சுருண்டு விழும்.
ஒரு கோப்பையில் தான் என் குடியிருப்பு.
உலகக்கோப்பை
கேப்பையில் நெய்தான் இன்னமும் வடிகிறது."

என்னவெல்லாமோ எழுதினான்.
எப்படியெல்லாமோ எழுதினான்.

கறுப்பு பணம் என்ன கறுப்பு பணம்?
அதற்கு வெள்ளையடிக்கும்
வினோத "ப்ரஷ்"கூட
அதனிடமே இருக்கிறது.
"தாராளமயத்தில்"
அதுவும் விற்பனைக்கு உண்டு.
அதன் எம் ஆர் பி விலை...
அச்சிடப்பட்டிருப்பது தெரிகிறதா?
அழிந்து அழிந்து தெரிகிறது.
பில்லியன் பில்லியன்
கோடி கோடி என்று...
எண் கணிதம் எண்ண முடியாமல்

இறந்தே போனது!

கறுப்பு பணத்தில் மட்டும் இல்லை.
காதல் கத்தரிக்காய் என்று
டன் டன்னாய் குவிக்கும்
எழுத்துக்களின் அடியில் எல்லாம் கூட
சமுதாய அசிங்கங்கள்
காக்காய் முள்ளாக
குத்திக்கிழிப்பதும் கூட
கறுப்புக்கவிதைகளே.

சரி...
சினிமா எனும்
ஜிகினா நதியோரம் நடந்தேன்.
"சப்னோங்கி சௌதாகர்" களாய்
நுரைக்கோபுரங்கள்
கட்டிக்கொன்டிருக்கிறார்கள் அங்கு!

"சஹர் அவுர் சப்னா" என்று
க்வாஜா அஹமத் அப்பாஸ்
அன்று ஒரு நாள்
இந்த செல்லுலோஸ் சுருள் வழியே
நம் மீது நிழல் பாய்ச்சிய
அந்த அந்துப்பூச்சிகளையும் கரையான்களையும்
அற்புதமாய் காட்டினாரே!
அதை அசைபோட்டு நடந்தேன்.

கோலிவுட் பக்கம் போனேன்.
தாகம் வரட்டியது.
பெட்டிக்கடையில்
"கோலி சோடா"கேட்டேன்.
அது பக்கத்து தியேட்டரில் என்றான்.
ஜிகர் தண்டா கேட்டேன்
ஜனாதிபதி விருதுக்கு போயிருக்கிறது என்றான்.
என்னப்பா "தெகிடி"யாப்போச்சு என்றேன்.
அது அடுத்த தியேட்டரில் என்றான்.

அன்று யதார்த்தத்தை கறுப்பு வெள்ளையில்
காட்டினார்கள்
அது இதயம் வரை தைத்தது.
இன்று "செம யதார்த்தம்"!
தில்லு முல்லுவில் மட்டுமே
இந்தியாவின் இதயம் அடகு வைக்கப்பட்டுவிட்டது.
கதையில்
செய்தி சொல்ல தேவையில்லை.
அதனால் அந்த பேருந்துக்குள்
கற்பழித்தவர்களே எங்கள் பாரத புத்திரர்கள்.

"பார்" படத்தில்
நஸ்ருத்தின் ஷாவும் ஸ்மிதா படீலும்
ஆற்றின் குறுக்கே ஓட்டி ஓட்டி
பண்ணி மேய்த்தார்களே!
அதில் அந்த பண்ணிகள் உறுமும் குரலில்
கேட்காத யதார்த்த சங்கீதமா?
இந்திய மக்கள் சாக்கடைப்புழுக்கள்
என்று சொல்லாமல் சொல்லிக்காட்டினார்களே!

இன்று கோரமான குரூரமான வில்லத்தனங்கள்.
அதைவிட அருவறுத்த காதல் கொட்டங்கள்.
லுங்கியை அவிழ்த்து குத்தாட்டங்கள்.
ரசனையில் பச்சைரத்தமும் கவிச்சியுமே அதிகம்.
இசையமைப்பு வரை இதன் நாற்றமே சகிக்கவில்லை.

இப்போதெல்லாம்
அஞ்சு நிமிட குறும்படங்களையெல்லாம்
முழு நீளப்படமாக்கி
அதிரடி கலாய்ப்பு கானாப்பாட்டு சகிதம்
கலக்கியடித்ததில்
சத்யஜித் ரேக்களும்
அடூர் கோபாலகிருஷ்ணன்களும்
"மெர்ஸல்"ஆகிப்போனார்கள்.
"மெர்ஸல்"ஆகிப்போனார்கள்....

ஆஹா!...
இது நல்ல தலைப்பு!
இன்றே பூஜை போட்டு

மாலையே இசை விழா நடத்தி
நாளையே வெளிவந்து
நாலு நாளில்
"வெள்ளி விழா"கண்டு விடும் வேகம்
இவர்கள் காமிரா வேகம்!
விருதுகள் அங்கே
அடுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன.
கச்சா பிலிம் சுருளுக்கு
கொஞ்சம் "பெப்" ஏத்தி
காது சவ்வுகளுக்கும் கொஞ்சம்
கலர் ஊத்திக்கொடுத்தால் போதும்
விருது தயார்.

ஒரு நவீனக்கழிப்பிட வசதி பற்றிய
சிந்தனைக்கும் கூட
நமக்கு
ஒரு உலக தினம்
கொண்டாட வேண்டியிருக்கிறது!

உலக கவிதை தினம் பற்றி
ஒரு படம் எடுத்தார்கள்
அதன் ஒரு வரிக்கதையின்
கார்ப்பரேட் தீம் இது தான்.
"மானிடமாவது மண்ணாங்கட்டியாவது."

---



கவிஞர் ருத்ரா இ.பரமசிவன்
ruthraasivan@gmail.com

# 27. காந்தித்தாத்தா

## – ருத்ரா இ.பரமசிவன்

**காந்தித்தாத்தா**
என்ற சொல்
முள்ளுமுனையில் கூட
மூணு குளம் வெட்டும்.
மூணு குளமுமே
பாழ் என்றாலும்
வெட்டிய இடம் எல்லாம்
அவர்
ரத்தமும் வேர்வையும் தான்.
சுதந்திரத்தை வாங்க
அடிமைத்தனத்தை
பண்டமாற்றம் செய்யச்சொன்னார்.
அப்படி மாற்றப்பட்டதை விடவும்
மாட்டிக்கிடந்ததே
நமக்கு பரம சுகம்.
கத்தியின்றி ரத்தம் இன்றி
யுத்தம் புரிவதன் உருவகமே
அந்த அண்ணல்!
உருவமே
மூளியாய் நின்றவர்களுக்கு
கத்தியும் புரியவில்லை
ரத்தமும் புரியவில்லை.
அதனால்
நம் ரத்தமே நமக்கு
தர்பூஸ் ஜூஸ்.
நம் அன்னையர்களே
நம் அண்ணன்களே
நமக்கு கைமா.
கள்ளு வேண்டாம் என்று
தென்னைகளை வெட்டிச்சாய்த்த
சினத்தின் எரிமலைகள் தான் நாம்.
இப்போது
ஃபாக்டரியும்
ரசம் நுரைக்கும்
கலர் கலர் கண்ணாடி பாட்டில்களுமே



ஓவியம்: ஓவியக் கவிஞர் ரவி சுப்பிரமணியன்

நம் சாம்பல் மேடுகள்.
மூடி கடித்து கழற்றி யெறி.
சீசாவை கூசாமல்
வயிற்றுக்குள் கவிழ்.
சைடு டிஷ்?
அதோ
வாக்காளர் பட்டியலில்
வெயிட்டாக
"காந்தியின் புன்னகை"
அமரர் ஆனவர்
ஏன் கொச்சைப்படுத்தினீர்
என்று
கோர்ட்டுக்குப் போனாலும் போகலாம்.
கோடிக்கணக்கான
நம் நிலுவை கேஸ்களில்
ஆவியாக போனவற்றில்
இந்த ஆவியும் ஒன்றாக இருக்கலாம்.
எழுந்து நில்லுங்கள்.
அந்த "மகான் கேட்கவில்லை"
கேட்பது
அந்த பீரங்கிக்குண்டுகள்!
தந்தையே
உனக்கு சிரம் தாழ்த்துகிறோம்.
அப்போது தான் மண்ணின் அடியில்
நீ
இன்னும் அந்த
புழுக்களுக்கு உன்னை
புசிக்கக்கொடுப்பதை
பார்க்க முடிகிறது.
எங்கள் கண்கள் கசிகின்றனவே!

---



கவிஞர் ருத்ரா இ.பரமசிவன்
ruthraasivan@gmail.com

# 28. சிறைக்கண் பீலி அதிர்தர ஆங்கண்

## – ருத்ரா இ.பரமசிவன்

**சிறைக்கண் பீலி அதிர்தர ஆங்கண்**



கோட்டுமா தொலைச்சிய கொடுவில் பகழி
கூர்த்தன்ன நெடுவிழி கொலை செய்தாங்கு
வேறு வேறு கிடப்ப பேய்ச்சுரம் படுத்து
பொருள்வயின் ஆறலை நலிய விட்டனள்.
குவியிலை வீஇணர் நுண்ணறுந் தாது
சிதறுதரப் பொருதனள் சில்நகை சிந்தி.
பைங்கூழ்ச் சிறுகால் நடைசெய் சிறுவன்
சிறுபறை கண்ணகத்து ஓவுவின் மஞ்ஞை
சிறைக்கண் பீலி அதிர்தர ஆங்கண்
பரிவுதப பூங்கோல் எறிந்த நிலையின்
ஊழ் என்னே!பாழ் என்னே!அடுநனி காதலின்
அழல்பெய் மழையில் எனை மாய்ந்தே ஒழியும்
வண்ணம் செய்தனள் வாழியவள் நலனே.

**விளக்க உரை:**

கொம்பு முளைத்த காட்டுப்பன்றியைக் (கோட்டுமா) கொல்லும் (தொலைச்சிய) வளைந்த வில்லில் பூட்டிய அம்பு போல் கூரிய நெடும்விழி உடைய அவள் (தலைவி) தன் பார்வையால் என்னை (தலைவனை) கொலை செய்ததால் இப்போது நான் பொருள் வேட்டைக்கு வந்த நான் கை வேறாய் கால் வேறாய் ஆனவன் போல் இந்த அச்சம் தரும் காட்டுவழியில் தவித்து மாட்டிக்கொண்டேன்.(பேய்ச்சுரம் படுத்து)..அவள் அன்பில் பூத்த இல்லறம் புகுவதற்கு நான் இந்த பொருள் தேடலில் காட்டுவழியில் அலைந்து திரியலுற்றேன்.(ஆறலை நலிய விட்டனள்).

கொத்து கொத்தான இலைகள் நடுவே அந்த சிறு பூங்கொத்துகள் நுண்ணிய மகரந்தங்களை சிதற விட்டாற்போல் அவள் தன் மெல்லிய சிரிப்பை சிந்தி என்னோடு ஒரு போர்க்களம் புகுந்தாள்.(பொருதனள்) காதலால் தானே அவள் இப்படி என்னுடன் மோதுகிறாள்.இது ஒரு பொய்ச்சண்டை தானே! இருப்பினும் இது எனக்கும் வலிக்கும் ஆனால் வலிக்காது.ஒரு ஓவியத்தில் தெரியும் சண்டைக்காட்சியால் யாருக்கும் இங்கே ரத்தம் இல்லை.காயம் இல்லை.இருப்பினும் நானும் காயம்பட்டு தான் போனேன்.இந்தக்காட்சியை இதனோடு ஒப்பிட்டுப் பாருங்கள்.

அதோ அந்த பசுமையான குறுஞ்செடியின் இளந்தண்டை ஒக்கும் கால்களில் நடந்து வரும் சிறுவன் (பைங்கூழ்ச் சிறுகால் நடைசெய் சிறுவன்) தன் கையில் உள்ள சிறு பறையை அடித்துக்கொண்டே வருகிறான்.பறையின் அடிபடும் வட்டப்பொட்டு போன்ற கண்ணில் (கண்ணகத்து)ஒரு மயிலின் சிறு ஓவியம் தீட்டப்பட்டு உள்ளது.(ஓவுவின் மஞ்ஞை) அவன் கொஞ்சம் கூட பரிவு இன்றி (பரிவு தப) தன் கையில் உள்ள பூப்போன்ற சிறு கம்பினால் பறையின் மீதுள்ள அந்த ஓவியத்தில் அடித்துக்கொண்டிருக்கிறான்.(பூங்கோல் எறிந்த).அப்போது அந்த மயிற்சிறகுகளின் சிறு பீலி இருக்கும் அந்த வட்டக்கண் பெரும் அதிர்வு அடைகிறது.(சிறைக்கண் பீலி அதிர் தர ஆங்கண்).

அடிக்கும் போது வலிப்பது போல் தோன்றினாலும் அந்த பீலிகளின் அதிர்வு கூட கிச்சு கிச்சு மூட்டத்தான் செய்கிறது.இது என்ன நிகழ்வு? இது என்ன வெறுமையான ஆனால் காதல் தாக்கும் உணர்வு? (ஊழ் என்னே! பாழ் என்னே!அடு நனி காதலின்). இருப்பினும் இது அழல் வீசும் காதல் நோயின் மழை போன்றது. இதில் நான் இறந்து பட்ட ஒரு மாயத்தில் ஒழிந்து போகும் வண்ணம் அல்லவா அவள் ஒளிந்து விளையாடுகிறாள்.என் மீது அவள் காதலின் அழகு வாழ்க வாழ்க என்று வாழ்த்துகின்றேன்.(வாழி அவள் நலனே)

---



கவிஞர் ருத்ரா இ.பரமசிவன்
ruthraasivan@gmail.com

# 29. விடியல் பரிதி

## – ருத்ரா இ.பரமசிவன்



விசும்பின் துளிபெய்து வியன் நிலம் கீறி
மெய் வருத்தம் உரம் சேர்த்து
கனலும் கதிரொடு தன் புனல் இழைத்து
காய்நெல் அறுத்து கழனி வளம் ஆக்கி
ஊஞ்சல் ஞாலம் தன் உயிரீந்து ஆட்டி.
ஓங்கலிடையே தமிழின் ஒளியாய்
உலகு புரக்கும் உழவத்தமிழா..உனை
உறிஞ்சும் தும்பிகள் உலா வந்திடும்
கள்ளம் அறிதி! உள்ளம் தெளிதி!
யானை புக்க புலம் போல நம்
கவளமும் சிதறி வளங்களும் அழிந்து
நிகழ்தரு வல்லிய கொடுமைகள் அகல
எழுவாய்!எழுவாய்! எழுதரும் கனலியே
இருள் கிழிக்கும் விடியல் பரிதி
நீயே!நீயே!நீயே தான்!

---



கவிஞர் ருத்ரா இ.பரமசிவன்
ruthraasivan@gmail.com

# தமிழ் மரபு அறக்கட்டளையின் வெளியீடுகள்

**தமிழ் மரபு அறக்கட்டளை - மின்னூல்கள்:**

THF Announcement: E-books update:31/1/2016 *சுதந்திரத்தின் தேவைகள் யாவை

THF Announcement: E-books update:21/2/2016 *கொரிய தமிழ் ஆய்வு (உலகத் தாய்மொழிகள் தின சிறப்பு வெளியீடு)

THF Announcement: E-books update:10/4/2016 *மாஜினி

**தமிழ் மரபு அறக்கட்டளை - சிறப்பு வெளியீடு:**

சித்திரைத் திருநாள் வரவேற்பு - த.ம.அ. சிறப்பு வெளியீடு

**தமிழ் மரபு அறக்கட்டளை - மரபுக் காணொளிகள்:**

மண்ணின் குரல்: பெப்ரவரி 2016:மாங்குளம் தமிழி கல்வெட்டுக்கள்

மண்ணின் குரல்: பெப்ரவரி 2016:**கழிஞ்சமலை சமணர் சின்னமும் கல்வெட்டுக்களும்**

மண்ணின் குரல்: மார்ச் 2016:திருப்பாச்சேத்தி அரிவாள்

மண்ணின் குரல்: மார்ச் 2016: அறச்சலூர் இசைக்கல்வெட்டு

மண்ணின் குரல்: மார்ச் 2016: மனித உரிமை போராளி பேராசிரியர்.பிரபா.கல்யாணி

மண்ணின் குரல்: ஏப்ரல் 2016: **பண்பாட்டு மானுடவியல் ஆய்வாளர் பேரா.முனைவர் தொ.பரமசிவன்**

**தமிழ் மரபு அறக்கட்டளை - தமிழ்ப் பொழில் மின்னிதழ்கள்:**

(முதல் மூன்று ஆண்டுகளின் இதழ்கள் வெளியிடப்பட்டுள்ளன)

1 தமிழ்ப் பொழில் (1925 - 1926) துணர்: 1 மலர்: 1
2 தமிழ்ப் பொழில் (1925 - 1926) துணர்: 1 மலர்: 2
3 தமிழ்ப் பொழில் (1925 - 1926) துணர்: 1 மலர்: 3
4 தமிழ்ப் பொழில் (1925 - 1926) துணர்: 1 மலர்: 4
5 தமிழ்ப் பொழில் (1925 - 1926) துணர்: 1 மலர்: 5
6 தமிழ்ப் பொழில் (1925 - 1926) துணர்: 1 மலர்: 6
7 தமிழ்ப் பொழில் (1925 - 1926) துணர்: 1 மலர்: 7
8 தமிழ்ப் பொழில் (1925 - 1926) துணர்: 1 மலர்: 8
9 தமிழ்ப் பொழில் (1925 - 1926) துணர்: 1 மலர்: 9
10 தமிழ்ப் பொழில் (1925 - 1926) துணர்: 1 மலர்: 10
11 தமிழ்ப் பொழில் (1925 - 1926) துணர்: 1 மலர்: 11 & 12

12 தமிழ்ப் பொழில் (1926 - 1927) துணர்: 2 மலர்: 1 & 2

13 தமிழ்ப் பொழில் (1926 - 1927) துணர்: 2 மலர்: 3 & 4

14 தமிழ்ப் பொழில் (1926 - 1927) துணர்: 2 மலர்: 5 & 6

15 தமிழ்ப் பொழில் (1926 - 1927) துணர்: 2 மலர்: 7 & 8

16 தமிழ்ப் பொழில் (1926 - 1927) துணர்: 2 மலர்: 9, 10, 11, 12 (பகுதி - 1)

17 தமிழ்ப் பொழில் (1926 - 1927) துணர்: 2 மலர்: 9, 10, 11, 12 (பகுதி - 2)

18 தமிழ்ப் பொழில் (1927 - 1928) துணர்: 3 மலர்: 1

19 தமிழ்ப் பொழில் (1927 - 1928) துணர் 3: மலர் 2 & 3

20 தமிழ்ப் பொழில் (1927 - 1928) துணர் 3: மலர் 4 & 5

21 தமிழ்ப் பொழில் (1927 - 1928) துணர் 3: மலர் 6, 7, & 8

22 தமிழ்ப் பொழில் (1927 - 1928) துணர் 3: மலர் 9, 10, 11, 12 (பகுதி - 1)

23 தமிழ்ப் பொழில் (1927 - 1928) துணர் 3: மலர் 9, 10, 11, 12 (பகுதி - 2)



Tamil Heritage Foundation
தமிழ் மரபு அறக்கட்டளை

Electronic preservation of Tamil heritage materials
e-Book series
an international NGO initiative to digitize old Tamil books
and palm leaf manuscripts
visit http://www.tamilheritage.org

தமிழ் ஓலைச்சுவடிகள், நூல் பாதுகாப்பு.

பாதுகாப்பற்ற நிலையில், மறுபதிப்பு காணாத பழைய நூல்கள், ஓலைச்சுவடிகள் போன்ற தமிழ் முதுசொம்களை மின்பதிப்பாக்கி தமிழ் வளத்தை நிரந்தரமாக்கும் ஒரு சர்வதேச தன்னார்வ முயற்சி.

மேலும் அறிய: http://www.tamilheritage.org




முதுசொம் முத்திரை
தமிழ்ப்பாதுகாப்பின் அக்கறை

# மின்தமிழ் மேடை



## *"தமிழ் வளம்"*

*தமிழ் மரபு அறக்கட்டளை (www.tamilheritage.org)*

வெளியிடும் காலாண்டு மின்னிதழ்

*மின்தமிழ்மேடை - காட்சி: 5*

*ஏப்ரல் – 2016*




*5*